கழக வெளியீடு - ௬௧

உ

திருச்சிற்றம்பலம்

# முருகன் புகழ்மாலை



முருகன் றிருவருள்
பெருகுகின் றருள்காக



திருநெல்வேலி, தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்
திருநெல்வேலி & சென்னை.
விபவ௵ ஆடி௴
ரூ. 3/8

# பதிப்புரை

---

முருக வழிபாடுடையார் உச்சிமேற் கொளும் நக்கீரனாரருளிய 'திருமுருகாற்றுப்படை' என்னும் அருமந்த நூலை முதற்கண் சீர் முதலிய பிரித்துப் பிழையற அழகுற அச்சிட்டனம். அதனமைப்பினையும் அச்சுப்பொறிப்பினையுங் கண்ட அன்பர் பலர், 'இதுபோல முருகனருட்பனுவல்களையெல்லாந் திரட்டி ஒரு நூலாக வெளியிடுமாறு' எங்களைக் கேட்க அதற்கிணங்கி முருகப் பெருமானது தனி முதற் றன்மையினை விளக்கும் அருட்பனுவல்களையும், அரிய புராணங்கள், திருப்புகழ், பிள்ளைத்தமிழ், திருவருட்பா முதலியவற்றினின்றும் சொற்சுவை பொருட்சுவை, அன்புச்சுவை மலிந்த செழும் பாடல்களையுந் திரட்டி 'முருகன் புகழ்மாலை' என்னும் பெயர் தந்து இந்நூலை வெளியிடுகின்றோம். முருகப் பெருமானை வழிபடுங்காலத்து அவ்விறைவனை உளங்கரையப் போற்றுதற்கும், நாடோறும் நெட்டுருச் செய்வதற்கும் இந்நூல் பெரிதும் பயன்படுமெனக் கருதுகின்றோம்.

திருவகுப்பில் பதினெண் வகுப்புக்களுக்கு மேற்பட்ட பாட்டுக்கள் அருணகிரிநாதர் உரையல்லவென்று பலர் கூறுப. ஆயினும் அவை இப்போது

வெளிவந்துள்ள சில பதிப்புக்களிற் காணப்பட்டமையது பற்றி யாமும் இப்பதிப்பிற் சேர்க்கலாயினேம்.

இந்நூலின்கண் 'முருகன் பெருமை'யும், முருகனருட்பாடல்களருளிய ஆசிரியர்கள் வரலாற்றுச் சுருக்கமும் சேர்க்கப்பட்டிருக்கின்றன.

இதன்கண் சேர்த்திருக்கும் 'முருகன் பெருமை' என்னும் அரிய ஆராய்ச்சிக் கட்டுரையினை எழுதியுதவிய திருவாளர் கா. சுப்பிரமணிய பிள்ளையவர்கட்கும், இதன் முதற்பதிப்பின்கண் உள்ள பிழைகளை எடுத்துக்காட்டியுதவிய திருவாளர் S. அனவரதவிநாயகம்பிள்ளையவர்கட்கும் எங்கள் நன்றி உரிமையாகின்றது.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# முருகன் பெருமை

'முருகன்' என்ற சொல் 'இளமையும் அழகு முடையோன்' என்று பொருள்படும். 'என்றும் இளையனாய்' என்றவாறு எப்பொழுதும் எழிலுடையனாய். நரை திரை மூப்பு பிணி சாக்காடு முதலிய துன்பங்கள் இல்லாதவனாய் விளங்கும் பெருந்தன்மை இறைவனுக்கே உரியதாம். உயிர்கள் பிறப் பிறப்புடையனவாதலான் அவை என்றும் இளமையுடையவல்ல. வீடு பெற்றோரும் வீடெய்துவதற்குமுன் இளமையுடையவரல்லராதலான் அவர்கள் கட்டுப்பாடு இல்லாத கடவுளைப்போல என்றும் இளமையுடையவராகக் கருதப்படார். என்றும் நிலைத்த இளமையுடைமைபோல இறைவன் என்றும் வாடாத அழகினையுமுடையவன் காணப்படாத கடவுளைக் காணவேண்டிக் திருவுருவுடையனாய்க் கருதி வழிபடும் மக்கள் அத்திருவுருவினை வைத்து அவன் பெருந்தன்மையை உணர்த்துங்கால் இளமை, அழகு முதலிய உருவச் சிறப்பினை விளக்குஞ் சொற்களை வழங்குதல் இயல்பே. ஐம்புலனிற்கும், உள்ளத்திற்கும் இன்பந் தரவல்ல இறைவன் திருவுருவினைச் சுட்டுவதற்கு 'முருகு' என்ற சொல்லினும் சிறந்த மொழியில்லை அச்சொல்லிற்கு அழகு தேன் மணம் இளமை கடவுட்டன்மை என்னும் பொருள்களுண்மையால், திருவுருவின் கண்கவர் வனப்பினையும், செவிக்கினிய தேன்

போன்ற இன்சொல்லினையும், மூக்கிற்கினிமை பயக்கும் நறுமணத்தினையும், மெய்ந்நயந் தெரிக்கும் இளமையினையும், உள்ளத்தால் மதித்து வாயாரப் புகழ்தற்கரிய கடவுட்டன்மையினையும் ஒருங்கே அச்சொல் உணர்த்தி நிற்றல் காண்க. 'ஒரு நாமம் ஓருருவம்' இல்லாத பெருமானை வடிவினாலும் பெயரினாலுமே கட்டறிவுடைய மக்கள் எளிதில் வழிபடற்குரியராதலின் அவனது திருவடிவத்திற்கு ஏற்பவே அவனது திருப்பெயரும் அமைக்கக்கருதிய பண்டைத் தமிழ்மக்கள் 'முருகன்' என்ற நன்மொழியினையே பிறவற்றினுஞ் சிறந்த திருப்பெயராகக்கொண்டு இறைவனை வழிபடுவாராயினர். இயற்கைப்பொருள்களின் அழகும், இளமையும், மணமும் செவ்விதிற் றிகழப்பெறுங் குறிஞ்சி நிலமாதலின் குறிஞ்சிநிலமக்களே இறைவனுக்கு இப்பெயரைச் சிறப்பாகக் கொண்டனரென்க.

உலகிற் காணப்படும் பொருள்கள் எல்லாவற்றையும் பகுத்துப் பார்க்குங்கால் அவை யாவும் மண் புனல் அனல் வளி வான் என்னும் ஐந்தினுள் அடங்கும். அவற்றின் இயக்கங்கட்கெல்லாம் காரணமாகிய உயிர்த்தன்மையும் யாவர்க்கும் புலனாவதொன்றே. மண் முதலிய ஐந்து பொருள்கள் போலவே அவற்றிற்றோன்றிய உடம்பிற்கு மெய் வாய் கண் மூக்கு செவி என்னும் ஐம்பொறிகள் உள்ளன. அவற்றிற்குப் புலனாகும் சுவை ஒளி ஊறு ஓசை நாற்றமென்னும் ஐந்துமே உலக அறிவின் வாயில்களாயுள்ளன. யாவரும் அறிந்த இவற்றையே உலகியல் கூறப்போந்த ஆசிரியர் திருவள்ளுவனாரும் விதந்தோதினர்.

"வஞ்ச மனத்தான் படிற்றொழுக்கம் பூதங்க
ளைந்து மகத்தே நகும்"

"பொறிவாயி லைந்தவித்தான் பொய்தீ ரொழுக்க
நெறிநின்றார் நீடுவாழ் வார்"

"சுவையொளி யூறோசை நாற்றமென் றைந்தின்
வகைதெரிவான் கட்டே யுலகு"

என்பன காண்க.

இவ்வாறே உயிரினியல்பையும் ஆசிரியர் திருவள்ளுவர் இனிது விளக்கிப் போந்தனர். ஈண்டுக் கூறிய ஐந்துமே அறிவில்லாத பொருள்கள் அனைத்தையும் அடக்கி நிற்றலானும், உயிர்த்தன்மையொன்றே அறிவுடைமையை விளக்குதலானும் அறிவற்றதும் அறிவுள்ளதுமாகிய ஞாலமுழுவதினும் கலந்து அவற்றை இயக்குவோனாகிய கடவுளுக்கு அந்த ஞானத்தையே திருமேனியாகவும், அதற்கு அடிப்படையாகிய ஐம்பூதங்களும் உயிருமாகிய ஆறினையும் திருமுகங்களாகவும் உருவகித்துக் கூறி, எங்கும் நிறைந்த கடவுட்டன்மையை மக்கட்கு நினைவூட்டக் கருதிய பண்டைப் பெரியோர் இறைவனை 'ஆறுமா முகப்பிரான்' என்றார்கள்.

ஐம்முகங்களும் கட்புலனாய உலகத்தோடு கலந்துள்ள இறைவன் பெருமையை விளக்குவனவாதலால் அவற்றை வெளித்தோன்றிய திருமுகங்களாகவும், கட்புலனாகாத உயிரினோடு கலந்திடத்தை உண்முகமாகிய தோன்றாத் திருமுகமாகவும் பெரியோர் கூறுவாராயினர். தோன்றாத திருமுகத்தையே 'அதோ

முக'மென்றனர். உயிர்க்கு இன்னல் களையும்பொருட்டு இறைவன் தன் நிலை முழுவதுந் தோற்றுவித்தகாலை 'ஐந்து முகத்தோடு அதோமுகமுந் தந்து திருமுகங்களாறாகி' அவன் வெளிப்பட்டருளுவனென்று அறிஞர் பகர்ந்தனர்.

"ஆமே பிரான்முக மைந்தொடு மாருயி
ராமே பிரானுக் கதோமுக மாறுள"

என்ற திருமூலர் திருவாக்கு இதனை வலியுறுத்தும். இறைவனது ஆறு திருமுகங்களுள் ஐந்து திருவைந்தெழுத்தாலும் ஆறாவது திருமுகம் ஓங்காரமாகிய பிரணவ முதுமொழியாலுங் குறிக்கப்படுமென்ப.

"ஓமெனப்படுங் குடிலையே ஒப்பிலா முருகன்
மாமுகத்து ளொன்றும்" (கந்தபுராணம்)

என்றதுமது. வேள்வியில் இறைவனை வழிபட்ட மக்கள் அவனை ஐந்து திருமுகமுடைய சதாசிவமூர்த்தியாகக் கருதியது போலவே அவனை ஆறுதிருமுகமுடைய முருகனுகவுங் கருதி அவனது திருப்பெயரை மும்முறை வழுத்தினரென்பது பின்வருங் காஞ்சிப் புராணச் செய்யுளான் உணரப்படும்.

"எக்கலைக்கும் பூதங்க ளெவற்றினுக்கும்
பிரமனுக்கு மீச னென்னத்
தக்கமுதல் பரப்பிரமஞ் சதாசிவனே
மெனவேதஞ் சாற்று மல்லான்
முக்கனல்சூழ் வேள்வியிற்சுப் பிரமணிய
னோமென முக்காற் கூறும்"

இறைவனை அறுமுகவனைக் கருதி வழிபட்ட பெரியோர்கள்,

"அருவாகி நின்றானை யாரறிவார்—தானே
உருவாகித் தோன்றானே லூற்று"

என்றவண்ணம் குணங்குறியற்ற பரம்பொருளாகவும் பல பனுவல்களிற் போற்றியுள்ளனர்.

ஊரி லான்குணங் குறியிலான்
செயலிலா னுரைக்கும்
பேரி லாவொரு முன்னிலான்
பின்னிலான் பிறிதோர்
சாரி லான்வரல் போக்கிலான்
மேலிலான் தனக்கு
நேரி லானுயிர்க் கடவுளா
என்னுளே நின்றான்" (கந்தபுராணம்)

"வாசித்துக் காணொணாதது
பூசித்துக் கூடொணாதது
வாய்விட்டுப் பேசொணாதது—நெஞ்சினாலே

மாசர்க்குத் தோணொணாதது
நேசர்க்குப் பேரொணாதது
மாயைக்குச் சூழொணாதது" (திருப்புகழ்)

'அறிவினில் அறிவால் மன்னி' என்றவண்ணம் முருகனுக்கு அறிவே திருமேனி என்றும், போறிவினாலே அறிந்து வழிபடற்பாலனென்றும், அவனுடைய திருவருளினாலேயே அவனை யறிதல் கூடுமென்றும் பெரியோர் பல இடங்களிற் குறிப்பித்துள்ளனர்.

"அறிவுமறி யாமையுங் கடந்த
அறிவுதிரு மேதுயென் றுணர்ந்துன்
அருணசா ரொரவிந்தமென் று—அடைவேனோ"

"அறிவா லறிந்து னிருதா ளிறைஞ்சு
மடியா ரிடைஞ்சல்—களைவோனே"

"அறிவையறி வாலறிந்து—நிறைவாகி
அகிலபுவ னதியெங்கும் வெளியுற
மெய்ஞ் ஞான இன்ப
அமுதை யொழி யாதருந்த—அருள்வாயே"

தமிழ் ஆரியம் என்னும் இருமொழிப் பண்டைப் பனுவல்களுள்ளும் முழுமுதற் கடவுள் உலகத்தைப் படைத்துக் காத்து அழிக்கும் மூன்று பெருந் தேவர்க்கு வேருய் அவரால் வணங்கப்படுவோன் என்ற குறிப்பு காணப்படுகின்றது. இக்கருத்துப்பற்றியே முழுமுதற்கடவுளாகிய சிவம் மூவரின் வேருகிய நாலாவது பொருளென்று உபநிடதம் கூறுகின்றது. திருவாசகத்துள்,

"மூவரு மறிகிலர் யாவர்மற் றறிவார்"

"மூவர் கோனுகி நின்ற முதல்வன்"

என்பன காண்க. இவ்வாறே முருகப்பெருமானையும் பண்டைத் தமிழ்நூல்கள் புகல்கின்றன. பரிபாடல் 8-ம் பாட்டினுள்

"மண்மிசை யவிழ்துழாய் மலர்தரு செல்வத்துப்
புண்மிசை கொடியோனும் புங்கவ மூர்வோனும்
மலர்மிசை முதல்வனும்.........................

பற்று இன்றுநின் காரணமாகப்
பரங்குன்று''

என்றவிடத்து மூவரும் செவ்வேளை வணங்குதற் பொருட்டுத் திருப்பரங்குன்றிற் காத்திருப்பதாகக் கூறப்பட்டது காண்க. அவ்வாறே திருமுருகாற்றுப் படை யுள்ளும

''பலர் புகழ் மூவருந் தலைவராக
ஏமுறு ஞாலந் தன்னிற் றோன்றி
அந்தரக் கொட்பினர் வந்துடன் காணத்
..........................................
ஆவினன் குடி யசைதலு முரியன்''

என்றமையால் அயன் அரி அரன் என்னும் மூவரும் தாங்கள் தலைவராதற்கு வரம் பெறுதற்பொருட்டுப் பிற தேவர்களோடு வந்து காணும்படியாகத் திரு வாவினன்குடியிலே முருகப்பெருமான் எழுந்தருளி யிருத்தற்குரியர் என்பது தெளியப்படும். இன்னோ ரன்ன பல மேற்கோள்களால் முருகப்பெருமான் சிவத்தின் வேறு அல்லர் என்பது நன்கு விளங்கும்.

''மாறின்றி வைகும் பரமன் வடிவான செவ் வேள்'' என்றதுமது. பெருந் திருக்கோலத்தோடு தோன்றிய இறைவனைத் தந்தையாகவும் இளந்திருக் கோலத்தோடு தோன்றிய முதல்வனைப் பிள்ளையாக வும் வழங்குதல் உலகியற்கைக்கு ஒத்ததொன்றே. இறைவனை என்றும் நிலைத்த பரம்பொருளென்பார் சத்தென்றும், முற்றறிவினனென்பார் சித்தென்றும், பேரின்ப வடிவினனென்பார் ஆனந்தனென்றுங் கூறுவர். இவற்றிற்கு ஒத்தவாறே முழுமுதற் கட

வுளைத் தந்தையென்றும் தாயென்றும் மைந்தனென்றும் வழிபடுதல் மரபு. மைந்தனென்று வழிபடுங்கால் அவனைப் பேரின்ப வடிவினனாகப் பெரியோர் கருதினாராகலின் முருகப்பெருமானை ஆனந்தமயன் என்றார் வடநூலார். முருகன் என்ற சொல்லின் பொருளையே அவர் அச்சொற்றொடராற் குறித்தனரென்க. இதுகாறுங் கூறியவாற்றான் முருகப்பெருமான் வழிபாடு முழுமுதற்கடவுளது வழிபாடேயாமென்பது தெள்ளிதிற் புலனாகும்.

முருகப்பெருமானது பெருமை புராணவாயிலாகப் பாராட்டுவதே பெருவழக்காகக் காணப்படுகின்றது. முருகப்பெருமான் சூரபதுமன் என்னும் அசுரர் தலைவனை வென்று விண்ணோரை மீட்டருளினார் என்று பன்னூல்களுங் கூறுகின்றன.

> "பாயிரும் பனிக்கடல் பார்துகள் படப்புக்குச்
> சேயுயர் பிணிமுக மூர்ந்தம ருழக்கித்
> தீயுழ றுவைப்பத் திரியவிட் டெறிந்து
> நோயுடை நுடங்குசூர் மாமுத றடிந்து"(பரிபாடல், ௫)

"சூர்மருங் கறுத்த சுடர்ப்படை யோயே" ( ,, ௧௪)

"சூர்நிரந்து சுற்றிய மாதபுத்த வேலோய்" ( ,, ௧௮)

"பார்முதிர் பனிக்கடல் கலங்கவுள் புக்குச்
சூர்முத றடிந்த சுடரிலை நெடுவேல்"(திருமுருகாற்றுப்படை)

"சமர சூரபன் மாவைத் தடிந்தவேள்" (தேவாரம்)

என்றும் வருவன காண்க. இவ்வரலாற்றினை விரித்துக் கூறும் பெருநூல் **கந்தபுராணம்**.

அறுமுகக் கடவுள் சூரபதுமனை வென்றனரென்ற கதை பொய்யோ மெய்யோ என்று இக்காலத்தில் பலர் ஆராய்கின்றார்கள். அறுமுகத்தோடு கடவுள் தோன்றியிருப்பாரோ என்னும் ஐயப்பாடு சில மக்கள் உள்ளத்தில் எழுகின்றது. இக்கதையைத் திருமூலமா முனிவர் தெளிவாக ஓர் செய்யுளில் குறித்தனர்.

> "எம்பெரு மானிறை வாமுறை யோவென்று
> வம்பவிழ் வானோ ரசுரன் வலிசொல்ல
> வம்பவள மேனி யறுமுகன் போயவர்
> தம்பகை கொல்லென்ற தற்பரன் றானே"

இப்பாட்டினால் தெளிவாக விளங்குகின்ற கதையானது நடைபெறவில்லை யென்று கூறமுடியாது. புராணக் கதைகளை யாராய்வோர் புராண முழுவதும் பொய்யெனக் கொள்ளுதல் தவறு. பொய்யும் மெய்யும் கலந்தே அவைகள் அமைந்துள்ளன. அறிவிற்குப் பொருத்தமானவற்றைப் பொய்யென்று கழிப்பின் உண்மை ஈதென அறியமுடியாது. ஆதலால் பொருந்துவ தொன்றை நடந்ததென்று கொள்ளுதலே நன்று. சூரபதும னென்பான் ஒரு மன்னனென்றும் அவன் பலரைத் துன்புறுத்தினனென்றும் துன்புறுத்தப்பட்டோருடைய தலைவன் அம்மன்னனை வென்று கொன்றானென்றும் கொள்ளுதலில் பொருத்த மின்மை யாதுமில்லை. வருந்தினோர் தமக்குத் தலைவனாகக் கொண்டது மனிதனையோ கடவுளையோ என்ற ஐயம் நிகழற்பாலது. கடவுட்டன்

மை யாதுமில்லாத ஒரு தலைவனைக் கடவுளோ டியைத்துச் சமய முதல்வனாகவழிபடக் காரணமில்லை. வீர மிக்க பல மன்னரை மன்னராகவே மக்கள் கருதி யிருந்தார்கள். தமிழ் நாட்டு மூவேந்தரையாதல் வடநாட்டுப் பல மன்னர்களையாதல் கடவுளென்று நமது நாட்டினர் வழிபடவில்லை. வியத்தகு கடவுட் செயலைக் கண்ட விடத்தேதான் கடவுள் நினைவு மக்களுக்கு ஏற்படும் அப்போது அச்செயலுடையாரைக் கடவுட் டன்மையுடையாரென்று மக்கள் அறிந்தோ அறியாமலோ மதித்துப் போற்றுவர். நமது நூல்களிலே கடவுள் திருவருள் பெற்றுப் பெருஞ் செயல் புரிந்த பெரியோரைக் கடவுட் பகுதியினராகவே கருதி வழிபடுதல் காணப்படுகின்றது. அவர்கள் செயலைக் கடவுட் செயலாகவே கருதுவதும் வழக்கமே. சிறந்த பெரு நன்மை விளைந்த விடத்து அதனைக கடவுளது திருவருட் செயலாகக் கருதுதல் மக்களியல்பு. வறியவன் ஒருவனுக்கு மிகுந்த நிதியினைக் கொடையாளி ஒருவன் எதிர்பாராத காலத்திலே வழங்குவனாயின், அது கடவுளருளால் தனக்குக் கிடைத்த தென்று கருதுவான். அப்படியே ஒரு சமுதாயத்தாரும் தங்கட்கு நேர்ந்த பேரிடையூறு தீர்ந்தகாலை அது கடவுளருளால் தீர்ந்ததாகவே கருதுவர். பொதுவாக எல்லா நன்மைகளும் கடவுளருளாலேயே விளைகின்றன எனினும் பலர்க்கும் நன்மை பயக்கத் தக்க பேருதவிப் பெருஞ் செயல் நிகழ்ந்தபோது கடவுளது கருணையானது வெள்ளிடை மலைபோற் றெள்ளியதாகும். ஆதலின்

அப்பெருஞ் செயலைச் சிறப்பாகத் திருவருள் விளை வென்று மக்கள் பலரும் உள்ளத்திற்கொண்டு மகிழ் தல் இயற்கையே யாதலின், அது தவருகாது. சூர பதுமன் என்பவனால் தமக்கு நேரிட்ட பேரிடர் தீர்க் கப் பெற்ருேர் அவனது தோல்வியைத் தமது தலைவ னது வெற்றியாக மாத்திரங் கருதாது அத்தலைவனை யியக்கும் இறைவனது வெற்றியாகவுங் கருதியிருத் தல்கூடும்.

அறுமுகக் கடவுளது புராண வரலாற்றினை உற்று நோக்குங்கால் ஏனைய மக்களின் சரித்திரம் போல அது தோன்றவில்லை. எவ்விடத்தும் இறை வன் மைந்தனுகவே அவர் கூறப்படுகின்ருர். பரிபா டற் கதையினுள் அவரது தோற்றம் இழிந்ததொரு முறையில் கூறப்பட்டிருந்தாலும், அவர் சிவனாரது திருமகனாராகவே ஆண்டுக் காணப்படுகின்ருர். ஆண்டுச் சிவனார் என்பது முழுமுதற் கடவுள்பால் வீடு பயக்கும் மெய்யுணர்வு பெற்றுத் திகழும் பெருந் தலைவனுகிய உருத்திரனை எனவும், எல்லாம் வல்ல பரம்பொருளேயா மெனவும் இருவகைப் பட்ட கொள்கைகள் உள்ளன. முன்னைய கொள்கை உண்மையாயின் சூரனை வென்ற முருகப்பிரான் உருத்திர வர்க்கத்தினராவர். பின்னைய துண்மையா யின் அவர் பரம்பொருளே யாவர். இவற்றைப் பற்றி ஒரு சிறிது ஆராய்வாம். சைவ நூல்களிலே உலக மனைத்தும் சுத்தமாயை, அசுத்தமாயை, பிரகிருதி மாயை என்னும் மூன்று பிரிவினுள் அடங்குமென் றும், சுத்த மாயையில் இறைவன் தாமே ஐந்தொழில்

களைத் இயற்றுகின்றாரென்றும் அசுத்த மாயையில் ஐந் தொழில்களை அனந்தேசர்வாயிலாகவும், பிரகிருதி மாயையில் அவற்றைச் சீகண்டருத்திரர் வாயிலாகவும் நடாத்துகின்றாரென்றுங் கூறப்பட்டிருக்கின்றது. பிரகிருதி மாயையுள் நிலவுலகில் மூலப் பகுதிவரை உள்ள தத்துவங்கள் அடங்கும். ஒவ்வொரு தத்துவத்தில் அண்டங்கள் பலப் பல நிறைந்துள்ளன. ஒவ்வொரு அண்டத்திற்கும் அயனரி அரன் என்னும் மூவரும் வேறு வேறாக வீற்றிருந்து இத்தொழில் நடத்துவதாகச் சிவாகமம் செப்புகின்றது. முதல்வனுக்குரிய வடிவும் பெயரும் உருத்திரர்க்குமுள வென்று கேட்கப்படுவதால் முதல்வனைக் கூறு மொழிகளும் உருத்திரரைக் குறிக்குமென்று கொள்ள இடமுண்டு. புராணங்களுள்ளே விண்ணவர் தமக்குத் துன்பம் நேர்ந்துழி அயனிடஞ் சென்றதாகவும் அரி உருத்திரப்பிரானை யடைந்து குறையிரந்ததாகவுங் கூறும் வழக்கம் யாவர்க்கும் வெளிப்படை. ஆதலின் சூரன் போரினை விண்ணவர்க்கும் அவர்கள் எதிரிகளுக்கும் நடந்த போரெனக் கொள்ளுவார், அணடத்திற்குத் தலைவராகிய உருத்திரப்பிரான் வாயிலாகவோ பிரகிருதிக்குத் தலைவராகிய சீகண்ட ருத்திரர் வாயிலாகவோ ஆறுமுகக் கடவுள் தோன்றிச் சூரனை யழித்தார் என்று கருதுவார். அங்ஙனங் கருதுமிடத்து உருத்திர வருக்கத்துள் முருகன் அடங்குதல் காண்க. உருத்திர வருக்கத்தார் உயர்ந்த உயிரினத்தவரேயாவர்.

இனிச் சூரன் போரினை மக்களுள் இருபெருங் குழுவினரிடை நடந்ததே யென்று கொள்வார்க்கும் இக் கொள்கை தழுவத் தக்கதேயாம். மக்கட்குப் பேரிடர் விளைந்தகாலை அவரவர் வழிபடு கடவுள் அதனைத் தீர்த்துப் பேருதவி புரிதல் அருட்செயலே யாமாதலின் சிவபெருமானை வழிபட்ட மக்கட்கு உருத்திரப்பிரான் வாயிலாக ஒரு தலைவன் தோன்றி, அன்னோர் பகைவரை வென்றிருத்தல் கூடுமென்பது பொருத்தமான கொள்கையேயாம்.

அறுமுகக் கடவுளின் தோற்றத்தைப் பற்றிப் பரிபாடலின்கண் கூறப்பட்ட கதை ஏதோவோருண்மையை உருவகத்தாற் பொதிந்து கூறியது போலத் தோன்றுகின்றதே யன்றி, நேர் பொருள் கொள்ளக் கிடப்பதாய்த் தெரியவில்லை. நேர்பொருள் கொள்ளின் அஃது இயற்கைக்கு முரணும். அதனுள் முக்கட் கடவுள் உமையின் கருவை இந்திரனுக்காகப் பல துண்டுகளாகச் சேதித்தான் என்றும், அத்துண்டுகள் எழு முனிவர் மனைவிகளுள் அருந்ததி யொழிந்த ஏனையோர் அறுவரும் வேள்வி வாயிலாக அவியாகப் பெற்று அயின்றன ரென்றும், பின்னர்ச் சரவணப் பொய்கையில் தாமரைப் பூம்பாயலில் ஒருங்குபெற்றார் என்றும்,பெற்ற ஆறு பகுதியும்ஒன்றாய்ஒரு முதல்வன் வெளிப்பட்டா னென்றும் கேட்கப் படுகின்றது. கந்தபுராண முடையார் கருத்துண்டங்களுக்குப் பதிலாகச் சிவனார் திருக்கண்ணினின்றும் ஆறு பொறிகள் தோன்றின வென்றும் அவற்றைக் காற்றுக் கடவுள் அனற்கடவுள்பால் கொடுப்ப அவன் சர

வணப்பொய்கையில் உய்த்தனனென்றும்பகர்ந்தனர். பரிபாடலுள்ளும் அனற்கடவுள் வாயிலாக அறுவர் பெற்றனரென்றும் சரவணப் பொய்கையில் அறு முகக்கடவுள் பிறந்தனரென்றுங் காணப்படுவதால் இருகதையின் பிற்பகுதிகள் தம்முள் ஒத்தனவென்றே கொள்ளலாம். இறைவன்பால் தோன்றிய கனற் பொறியை வான் என்னும் ஐந்தாவது பூதத்தின் தன்மையுடையதாகவும், ஐம்பூதத்திலும் வான் முற்பட்டதாகலின் கருவென்று கூறியது வானிலெழுந்த உரு மூலத்தைக் குறிக்குமென்றுங் கொள்ளுதல் பொருந்துவதொன்றே. காற்றின் குணம் சிதறுவதாகலின், பரந்த பொறிகள் காற்றுக் கடவுள்பால் கொடுக்கப்பட்டன வென்பதும், கருப்பிண்டம் பல துண்டுகளாயின வென்பதும், ஒரே கருத்தை விளக்குவன என்னலாம். காற்றிற்கு முதல்வன் மகேசுரன் ஆதலின், அவன் கருப்பிண்டத்தைச் சிதைத்தான் என்ற கதை எழுந்தது போலும்! இரு கதையினுள்ளும் தீக்கடவுளின் தொடர்பு கூறப்படுகின்றது. ஆதலின் வானிலொன்றாய் எழுந்து காற்றில் திரிபுற்ற கருவின் மூலம் நெருப்பினால் பக்குவப்பட்டது என்பது போதருகின்றது. சரவணப் பொய்கை என்றவிடத்து நீராகிய இரண்டாம் பூதமும் நிலமாகிய முதற் பூதமும் ஒருங்கே குறிக்கப்பட்டன. சரவணம் என்பதும் தாமரைப் பூம்பாய லென்பதும் நிலமாய முதல் தத்துவத்திற்கு அறிகுறியா மென்ப. ஆகவே வானிலெழுந்த கருவின்மூலம் ஒவ்வொரு பூதத் தொடர்பாலும் செவ்வியுற்று நிலத்தின்கண்

முழுத் திருவுருவாக வெளிப்பட்டதென்பதே இரு கதைகளினுடையவும் உட்கிடையென்று புலனாகின்றது

அறுமுகக் கடவுள் பிறப்பை இவ்வாறு கூறுவதினாலே அது தெய்வத்தன்மை யுடையதென்று குறித்தவாறும். ஐம்பூதங்களினின்றே முதல்வன் திருவுருவெடுத்து விளங்கினான் என்று குறித்தமையாலே அவன் மக்களைப் போலப் பிறந்தான் என்று கொள்ளுதல் பிழைபடு மென்பதே இக்கதைகளின் முடிபாகும். உருத்திரப்பிரான் நெருப்பிற்குத் தலைவராதலாலும் மகேசர் காற்றிற்குத் தலைவராதலாலும், அறுமுகக் கடவுள் சிகண்ட ருத்திரருடைய அழல்பயிலும் நெற்றிக்கண்ணினின்றும் தோன்றினா ரென்றும் காற்று இயங்குதற்குரிய மகேசர் மார்பினின்று தோன்றினா ரென்றும் முறையே புராணமும் ஆகமமும் கூறினவென்று தெளிக. வானில் நுட்பமாய் வெளிப்படாதிருந்த பொருள் காற்று நெருப்பு என்னும் இவற்றின் சேர்க்கையால் வெளித் தோன்றும் உருவாய்த் திகழ்தலின் அவ்விரண்டு பூதத்தையும் அறுமுகக்கடவுள் தோற்றத்திற்குப் பெரிதும் உதவினதாக நூலோர் கூறுவாராயினர்.

இனிச் சூரனை வென்ற அறுமுகப் பிரானை உருத்திரப் பெருமான்பால் தோன்றினரெனக் கருதாது மக்களுட் சிறந்து விளங்கிய ஒரு பெருந் தலைவரின் புதல்வரெனக் கொள்ளினும், பரிபாடலின்கண் சிவனாது புதல்வராகவே அவர் கூறப்பட்டமையால்.

சிவனென்று கூறத்தக்க பெருஞ்சால்பும் பேரறிவும் படைத்த அருளாளரது அருமைப் புதல்வராகவே அவர் கருதற்பாலாரென்பது முடியும். அங்ஙனங் கொள்ளுமிடத்து மேற்கூறிய கொள்கைக்கு அஃது அடுத்ததாகும்.

'காஅய் கடவுள் சேஎய் செவ்வேள்'

என்ற பரிபாடலடி உருத்திரப்பிரானின் புதல்வர் செவ்வேளென்ற கொள்கையை வலியுறுத்தும்.

உருத்திரப்பிரானை உயிர்வருக்கத்தினுள் வைத்தெண்ணுவோர் அறுமுகப் பெருமானையும் அவ்வாறே கருதி அவர் சூரபதுமனை வென்ற செய்தியை முழுமுதற் பரம்பொருளாகிய அறுமுகக் கடவுளே இயற்றியதாகச் செப்புதல் புராண மரபு என்பர். திருஞான சம்பந்தர் சமணரை வென்றதை முருகக் கடவுள் வென்றதாகத் திருப்புகழுடையார் தமது பாடலுட் செப்பியதை இக்கொள்கைக்கு எடுத்துக் காட்டாகக் கூறுவர். இனி அவ்வாறன்றி முழுமுதற் கடவுளே அறுமுகப் பெருமானாகத் தோன்றிச் சூரபன்மனை வென்று ஆட்கொண்டனன் என்று கூறுவாருமுளர். அக்கொள்கையுடையோர் உருத்திரப் பிரான்பால் அறுமுகக் கடவுள் தோன்றியது மணியிலிருந்து ஒளிதோன்றியது போலவெனவும், தூணிலிருந்து நரசிங்கந் தோன்றியது போலவெனவுங் கருதவேண்டுமென்பர். சிவபெருமான் படைத்தல் காத்தல் அழித்தல் என்னும் முத்தொழிலையே சீகண்டருத்திரர் வாயிலாக மூலப் பகுதியின் கீழுள்ள அண்

டங்களில் நடத்துகின்றாரென்பதும், மறைத்தல் அரு ளல் என்னும் இருதொழிலையுந் தாமே யியற்றுகின்றா ரென்பதும் அன்னோர் கொள்கை. சூரன் பெருந்தவ முடையானாதலின், அவனை மறக் கருணையால் ஆட் கொள்வான் அறுமுக வடிவொடு பச்சிளங் குழந்தை யாக இறைவன் தோன்றினனெனவும், அவனுடைய வேல் ஞானசத்தியைக் குறிக்குமெனவும் சித்தாந்த நூற் கருத்துக்கு இயையக் கூறுவது ஒருவகையான பொருத்தத்தை யுணர்த்துவதே. மெய்யன்பர்க்கு இறைவன் வீடு பயக்கும் உணர்வினை நல்கும் பொருட் டுத் தானே அருட்பேராசிரியனாக வருவனென்றும், 'வேறுவே றுருவும் வேறுவே றியற்கையும்' என்ற வண்ணம் ஐம்முகத்தோடும் அறுமுகத்தோடும் அவ் வவ்வுயிர்க் கேற்றவாறு தோன்றி யருள்வானென் றும் மெய்ந்நூல்க ளியம்புவதால் சூரன் அருந்தவத் தனாயிருந்து இறைவனால் மறக்கருணை காட்டி ஆட் கொள்ளப் பெற்றிருத்தல் கூடுமென்ற கொள்கையும் ஒரு வேளை யுண்மையா யிருக்கலாம். உயிர்களை யொறுக்கும் அறக் கடவுளை அவைகள் அஞ்சுதல் போலத் தண்டனைக் குரியாரை யொறுத்த சூரனைத் தண்டனைக் குட்பட்டோர் அஞ்சிப் பழிப்பதும் இயல்பானதொன்றே! சூரன் கதையுள் சூரனைத் தாக் கித் தமது திருவடிக்கீ ழிருக்கும் மயிலூர்தியாக அறுமுகப் பிரான் கொண்டதாய்க் கேட்கப்படுத லின், சூரனுக்கு அருள்புரிந்தமையும் ஆண்டே குறித் தவாறும். சூரனுக்கு விசுவரூப மெனப்படுந் தனது பெரு வடிவத்தை இறைவன் காட்டினதாகவுங்

கந்தபுராணங் கூறுகின்றது. இதுவும் அவனுக்கு அருள்புரிந்தமையை வலியுறுத்தும். சூரனுக்கு இறைவனே அருள் புரிந்தானென்பதைக் கந்த புராண முடையார் பின் வருஞ் செய்யுளால் விளக்குகின்றார்.

'தீயவை புரிந்தா ரேனுங் குமரவேள் திருமுன் உற்றால்
தூயவ ராகி மேலைத் தொல்கதி யடைவ ரென்கை
ஆயவும் வேண்டுங் கொல்லோ அடுசமர் முன்னாட் செய்த
மாயையின் மகனு மன்றோ வரம்பிலா அருள்பெற் றுய்ந்தான்'

முருகப் பெருமான் தனது இரு துணைவியாரோடும் வேலுடனும் மயில்மீதே வதியுங்கால் அப்பெருமானைக் கடவுளாகவும், வேலினையும் இரு துணைவியரையும் முறையே அறிவு விழைவு செயலென்னும் மூவகை யாற்றல்களாகவும், மயிலினை அவன் திருவடிக் கீழிருந்து தனது அறிவு விழைவு செயல் இறைவனது அறிவு விழைவு செயல்களின் வழி நிற்கப் பெற்றுப் பேரின்ப நுகரும் வீடெய்திய உயிராகவுங் கருதுவதே சமய நூலார் கொள்கையாம. உயிரினது அறிவின்கண் இறைவனது அருள் மன்னுதலின், அறிவுக் கறிவாய் நிற்கும் அவனது அறிவாற்றலைத் தமக்கு நினைவூட்டுவார் 'வேலுமயிலுந் துணை' யென்னுஞ் சொற்றொடரை வாய்பாடாக வழங்குவாராயினர். வேலென்பது இறைவனது அறிவையும் மயிலென்பது அவ்வறிவுக்கு உட்பட்ட உயிரினறிவையுங் குறிக்கும்.

ஈண்டுக் கூறியவாற்றால், இறைவன் அறுமுகத் திருவுருவங் கொண்டு சூரனை மறக்கருணையால் ஆட்

கொண்ட திறத்தினையே பெரியதோர் வரலாருகப் புராணமுடையார் விரித்துக் கூறினர் என்னுங் கொள்கை யுண்மை தெளியப்படும். அஃதுண்மை யாயின் அறுமுகக் கடவுள் முழுமுதற் கடவுளின் வேறல்லரென்பது நிலைபெறும். இக்கருத்தினைக் கந்தபுராண ஆசிரியர் இன்னொரு செய்யுளில் வற் புறுத்துகின்ருர்.

"அருவமு முருவு மாகி அநாதியாய்ப் பலவா யொன்ருய்ப்
பிரமமாய் நின்ற சோதிப் பிழம்பதோர் மேனி யாகக்
கருணைகூர் முகங்க ளாறுங் கரங்கள்பன் னிரண்டுங்கொண்
ஒருதிரு முருகன் வந்தாங் குதித்தன னுலக முய்ய" [டே

அறுமுக வடிவோடு இறைவன் தோன்றிச் செயல் புரிந்த காலை அவனது பேராற்றலை அத்திரு வடிவம் விளக்குதலின், இறைவனது திருவருட் சத்தி யாகவே அறுமுகப்பிரானைக் கருதுவதும் இயல்பே. அது 'ஆதலின் நமது சத்தி அறுமுகன்' என்ற கந்தபுராணப் பகுதியால் இனிது விளங்கும். அறிவின் றிறன் மிகுந்து விளங்கியகாலை இறைவனைச் சிவ மென்றும், செயலின்றிறன் மிகுந்து விளங்கியகாலை இறைவனைச் சத்தியென்றுங் கூறுதல் நூலோர் மரபு. நமது அறிவிற்குக் காரணமாகிய எழுத்தோசை தோன்றுவதற்கு அடிப்படையாகிய ஓங்காரத்தை வடிவமாக உடைய மூத்த பிள்ளையாரைச் சிவச்சார் புடையரென்றும், இளையபிள்ளையாரைச் சத்திச்சார் பினரென்றுங் கூறும் வழக்கமுங் காண்க.

அறுமுகப்பிரானை மக்கட் படைப்பினைச் சார்ந்தவ ரென்று கொள்வோர் அறுமுகத்தோடு மக்களுருவங்

தோன்றி நிற்றல் இயற்கைக்கு முரணானதென்ப. உலகில் அத்தகைய ஒருவன் காணப்படாமை பற்றி அஃது இயற்கை முரணாகத் தோன்றினும், ஒருசாரார் அது பண்டைக் காலத்து மக்களது தோற்றவியற்கைக்கு முற்றிலும் மாறுபட்ட தன்றென்பர். இப்பொழுதும் இருதலை முத்தலையுள்ள உயிர்கள் கருவிற் றோன்றினும் அவை நிலைபெறாமையே காணப்படுகின்றது. அங்ஙனம் நிலைபெறாமைக்குக் காரணம் அவ்வுயிர்களின் வலியின்மையேயா மென்றும் பண்டைக் காலத்து மக்கள் வலிமிகுந்த உடலோடு விளங்கினரென்று இப்பொழுது கண்டெடுக்கப்படும் அவருடைய உடலெலும்புகள் காட்டுகின்றனவென்றும், அவ்வலிமிக்காருள்ளும் பெரியதோ ராற்றல் வாய்ந்தோர் பன்முகத்தோடு பிறந்தகாலைத் தமது வடிவம் அழிந்தொழியப் பெறாது நிலைநிற்கப் பெறும் உடலாற்றல் வாய்ந்தாராய்த் திகழ்ந்தாரென்றும், ஆதலால் அறுமுகத்தோடும் பதின்முகத்தோடும் வலிமை சான்ற சில மக்கள் உயிர் வாழ்ந்திருத்தல் கூடுமென்றும் அன்னோர் கருதுகின்றார்கள். உலகத்திலே இறைவனது திருவருளைச் சிறப்பாகப் பெற்றவர் ஒரோவொரு காலத்திலே ஒருவர் இருவரே யாதல்போல, ஒன்றுக்கு மேற்பட்ட முகத்தோடு கூடிப் பிறந்தவர்கள் ஒரோவொரு காலத்தில் ஒருவர் இருவரே வாழ்ந்திருத்தலுங் கூடுமென்ப.

கா. சுப்பிரமணியபிள்ளை.

# ஆசிரியர்கள் வரலாறு

## நக்கீரர்

இவர் பாண்டிவள நாட்டிலே மதுரைப் பதியிலே இருந்த கடைச்சங்கப் புலவர் குழாத்துட் டலைமை பெற் றிருந்தனர். இவரது இளமையில் கல்வி அறிவு ஒழுக்கங்களாற் சிறந்திருந்தனர். இவர் தந்தை கணக்காயஞ ரென்பவர். ஆகலின் கணக்காயஞர் மகஞர் நக்கீரர் என்னும் பெயரா னிவரைக் கூறுப. இவர் மகஞர் கீரவி கொற்றஞர். இவர் தந்தையார் தமிழ்ப் புலமை மிக்குடையா ரென்பது அவர் பாடிய பாட்டுக்கள், தொகைநூல் முதலியவற்ருல் தெற்றெ னப் புலப்படுகிறது. இவ்வாருகலின் "மகனறிவு தந்தையறிவு" என்று ஆன்ருேர் கூறியபடி நக்கீரரது அறிவு மாட்சிக்கு அவரது பிறப்புமோர் காரணமாய் நின்றமை நோக்க. இவ்வாசிரியரது குலத்தைப்பற்றி இதுகாறும் எவரும் ஒரு முடிவுங் கண்டிலர்.

இவர் முருகக் கடவுள்பால் சிறந்த மெய்யன் புடையா ரென்பது இவரியற்றிய திருமுருகாற்றுப் படையானும், இவர் சமயம் சைவமேயா மென்பதும் சிவவழிபாடுடையா ரென்பதும் பதிெருராந் திரு முறையில் இவர் இயற்றியருளிய நூல்களானும் நன்கு விளங்கும். இவர் அகத்தினும் புறத்தினும் பல திணையும் நலமுறப் பாடுந்திறமையும், தாங்கண்ட ஒவ்வொரு பொருளேயும் நேரிற் கண்டாங்குப் புலங்

கொளச் சொல்லுங் கலங்கா அறிவும் வாய்ந்தவர். இவர் அஞ்சா நெஞ்சு படைத்தவராகலின் யாருடனும் வழக்கிடுவதில் எத்துணையும் பின் வாங்கினாரிலர்.

இனி, இவரும், இவர் காலத்திருந்த அரசர்களும், புலவர்களுமாகிய இன்னவர்தம் காலத்தை அறிஞர் பலர் ஆராய்ச்சி செய்துள்ளார். அவரெல்லாம் தாம் தாம் கண்ட அளவைகளினாலே பாரத காலத்திருந்து கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டுவரை இவர்கட்கு வேறு வேறு காலங்களைக் கற்பிப்பாராயினர். இவர் கி. பி. இரண்டாம் நூற்றாண்டின் இடைப் பகுதியில் விளங்கியவரெனச் சிலர் கருதுகின்றனர்.

## இவர் இயற்றிய நூல்கள்

க. திருமுருகாற்றுப்படை
உ. நெடுநல்வாடை
ங. கைலைபாதி காளத்தி பாதித் திருவந்தாதி
ச. திருவீங்கோய்மலை எழுபது
ரு. திருவலஞ்சுழி மும்மணிக் கோவை
சு. திருவெழுகூற்றிருக்கை
எ. பெருந்தேவபாணி
அ. கோபப்பிரசாதம்
கூ. காரெட்டு
ய. போற்றித் திருக்கலி வெண்பா
கக. கண்ணப்பதேவர் திருமறம்
கஉ. நக்கீரர் நாலடி நாற்பது
கங. களவியலுரை

இவை யன்றி நற்றிணை, குறுந்தொகை, அகநானூறு, புறநானூறு என்பவற்றில் சிற்சில பாட்டுக்களும், திருவள்ளுவமாலையிலுள்ள ‘தானே முழுதுணர்ந்து’ என்னும் வெண்பாவு மிவ ரியற்றியன.

குறிப்பு:—இவரது முழுவரலாற்றினைத் திரு. ந. மு. வேங்கடசாமி நாட்டாரவர்கள் எழுதிய ‘நக்கீரர்’ என்னும் நூலிற் காண்க.

## கச்சியப்ப சிவாசாரியர்

இவர் தொண்டை மண்டலத்திலே காஞ்சிப்பதியிலே ஆதிசைவர் மரபிலே இற்றைக்கு ஆயிரத்து நூற்றைம்பதாண்டுகட்கு முன்னே குமரகோட்டத் தருச்சகருளொருவராகிய காளத்தியப்ப சிவாசாரியர் என்பவருக்கு மைந்தராகக் குமரக் கடவுள் திருவருளால் தோன்றினர்.

இவர் ஒழுக்கம், அன்பு, அருள், வாய்மை, அடக்கம் முதலிய நல்லியல்புகளோடு வளர்ந்து, பத்தாவதாண்டு நிரம்பு முன்னரே வடமொழியிலும் தென்மொழியிலும் வல்லவராய், தமிழ் மறையாகிய தேவார திருவாசகங்களையும், சிவாகமங்களையும் ஓதுவதுடன் குமரகோட்டத்துக் குகப் பெருமானை நாடோறும் உண்மை யன்புடன் வணங்கி வருவாராயினர். இப்பெற்றியராக, ஒரு நாள் அப்பெருமான் இவர் கனவிற்றோன்றி "மைந்தனே, நீ சங்கர சங்கிதையிலுள்ள எமது வரலாற்றைத் தமிழில் 'கந்தபுராண' மெனப் பெயரிட்டுப் பாடுவாயாக" எனக் கட்டளையிட்டு, "திகடசக்கரச் செம்முக மைந்துளான்" என்று அடியெடுத்துக் கொடுத்து மறைந்தருளினார். சிவாசாரியர் திடுமெனத் துயில் நீத்து முருகக் கடவுளின் பேரருளின் திறத்தை நினைந்து நினைந்து, உள்ளமுருகி, பேரின்பப் பெருங் கடலில் மூழ்கியவரானார். மறுநாள் தமது காலைக் கடன்களை முடித்துக் குமரக் கடவுளை

வழிபட்டு அவர் பணித்தவாறு பாடத்தொடங்கினர். சிலதிங்களில் பன்னீராயிரம் பாட்டுக்கள் பாடி ஏழு காண்டங்களில் முதலாறு காண்டங்களைச் செய்து 'கந்தபுராண' மெனப் பெயரிட்டனர். ஏழாவதாகிய உபதேசகாண்டம் அவர் மாணவர்களுள் ஒருவராகிய குகனேரியப்ப நாவலரால் பாடப்பெற்றது.

பின்னர்க் கச்சியப்ப சிவாசாரியர் தாம் பாடிய கந்தபுராணத்தை முருகப் பெருமான் முன்பு அறிஞர்கள் குழுமியிருக்க அரங்கேற்றுகையில் "திகட சக்கரச் செம்முக மைந்துளான்" என்னுங் காப்புப் பாடலைப் பாடி, "திகழ் தசக்கரம் செம்முகம் ஐந்து உளான்" எனச் சொற்பிரித்துப் பொருள் கூறுகையில் ஆண்டிருந்த அறிஞர்களில் ஒருவர் எழுந்து "அவ்வாறு பிரித்தற்குத் தொல்காப்பிய முதலிய இலக்கண நூல்களில் விதியில்லையே" என்றனர். பிறகு முருகப்பெருமான் றிருவருளால் "வீரசோழியம்" என்னும் நூலில் அதற்கு விதியிருப்பதாகக் கூட்டத்தினர்க்குத் தெரிவித்து அவர்களெல்லாரும் பணிந்து வேண்ட, அப்புராணத்தை அரங்கேற்றி யருளினர். இந்நூல் நவிற்றொறும் நவிற்றொறும் நாநயம் பயப்பது. பயிற்றொறும் பயிற்றொறும் பரனடியன்பு பற்றுவிப்பது.

திருவருட் செல்வராகிய கச்சியப்ப சிவாசாரியர் அதன்பின் சின்னாள் குமரகோட்டப் பெருமானைவழிபட்டும், ஞான நிட்டையி லமர்ந்தும், உண்மையறிவின்ப வடிவாய் விளங்கும் இறைவனுடன் இரண்டறக் கலந்தருளினர்.

## அருணகிரிநாதர்

ஐயா அருணகிரி யப்பா வுனைப்போல
மெய்யாக வோர்சொல் விளம்பினரார்-வையகத்தோர்
சாற்றரிதென் றேசற்றூர் தன்னையாய் மூக்கணைந்தை
நாற்றிசைக்குங் கைகாட்டி னன். (தாயுமானவர்)

இப் புலவர்பெருமான் நானூற்றெழுபது ஆண்டு கட்கு முன்பு திருவண்ணுமலை யென்னும் சைவப் பெரும்பதியிலே தோன்றியருளியவர். இவர்தம் இளமையில் கல்வியினை ஒழுங்காகக் கல்லாமற் சிற்றின்பத் துறையின் மூழ்கித் தமக்குரிய செல்வ முதலிய அனைத்தையு மிழந்து பிணிவாய்ப் பட்டனர். இவர் இங்ஙனம் வருந்தியபோழ்து முன்னைத் தவப்பேற்றுல் அறுமுகக்கடவுள் குருவடிவாகி வந்து தடுத்தாட் கொண் டருள்புரிந்தனர். அன்று முதல் இவர் எல்லாப் பற்றுக்களையும் அற்றவராய்ச் சந்தப்பாக்களால் முருகப்பெருமான் திருப்புகழ் பாடிப் புகழ்வதே தமக்குரிய தொழிலாகக் கொண்டு அப்பெருமான் எழுந்தருளியிருக்கு மிடங்கடோறுஞ் சென்று அருட் பாக்களைப் பொழிந்து வந்தனர். இத்திருப்புகழ் பதி னுறுயிரமென்ப. இப்போது கிடைக்கப்பெறுவன ஏறக்குறைய ஓராயிரத் திருநூறே. இஃது அறுமுகக் கடவுள் திருப்படை வீடுகண் மேலதாயும் பொது வாயும் விளங்கும். இது முருகக்கடவுள் பூசைக்காலங் களில் அப்பிரான் மந்திரமாப் போற்றப்படுகின்றது. முருகக்கடவுள் திருவடியன்புப் பயிர் வளர்த்தற் கிது சாலச் சிறந்த சந்தச் சுவடியாம். இவர் இதுவே

யன்றித் திருவகுப்பு, கந்தரலங்காரம், கந்தரந்தாதி, கந்தரனுபூதி முதலிய அருநூல்கள் பலவும் தமிழுல குய்ய அருளிச் செய்தனர்.

இவர் திருவாக்குக்களில் செந்தமிழ் மொழிச் சிறப்பும், சிந்தைக்கினிய அன்புச் சுவையும், செவிக் கினிய ஓசை நயமும், உளத்தைக் கவரும் திருவருட் டன்மையும் இன்னோரன்ன பற்பல நலங்களும் மிக் குத் தோற்றுவனவாம்.

இவர் காலத்தே தமிழ்ப்புலமை வாய்ந்து பாரதம் இயற்றிய வில்லிபுத்தூராருக்கும் இவருக்கும் வழக்குண்டாயிற்றென்றும், அப்போது அருணகிரி நாதர் கந்தரந்தாதி பாடி வில்லிபுத்தூராரைத் தோற்கச் செய்தனரென்றும், திருவண்ணாமலையில் பிரபுடதேவ வேந்தன் காலத்திலே சம்பந்தாண்டான் என்பவன் அருணகிரிநாதர் மீது பொறாமைகொண்டு அவரைச் சூழ்ச்சியால் வழக்கில் வெல்லக் கருதியும் நிறைவேறா மற்றானே உயிர் துறந்தனனென்றும், அவ்வமயம் நமது புலவர் பெருமான் கந்தரனுபூதி யருளி முருகக் கடவுள் திருவடி நீழல் எய்தினர் என்றுங் கூறுப.

கந்தரநு பூதிபெற்றுக் கந்தரநு பூதிசொற்ற
எந்தையருணகிரி யிருக்குநா ளெந்நாளோ?

## சிற்றம்பலநாடிகள்

இவர் சோழநாட்டிலே சீர்காழியிலே இற்றைக்கு நானூறு ஆண்டுகளுக்கு முன்னே வேளாளர் குலத்திலே பிறந்து வடமொழி தென்மொழிகளில் வல்லுநராய் விளங்கினர். இவர் மெய்கண்டதேவர் சந்தானத்தைச் சேர்ந்தவரென்றும், சிவப்பிரகாசமுதல் எட்டுச் சைவசித்தாந்த சாத்திரம் இயற்றி யருளிய கொற்றவன்குடி உமாபதி சிவாசாரியருக்கு மாணவர் என்றுங் கூறுப. சைவ சித்தாந்த சாரமாய் விளங்கும் 'சாத்திரக் கொத்து' என்னும் அருணூற் கோவை யருளியவரு மிவரே. இதன்கணடங்கியவை:— செல்காலத்திரங்கல், நிகழ்காலத்திரங்கல், வருகாலத்திரங்கல், அநுபூதி விளக்கம், தாலாட்டு, வெண்பா, கலித்துறை, முறுவல், துகளறுபோத முதலியன. இக்கோவை மெய்கண்ட நூல்களின் கருத்தையே விரிக்கின்றது. சிவஞான போத முதலிய உண்மை நூல்களில் அரிதி னுணர்தற்பாலனவாய்க் கிடந்த நுண்ணிய கருத்துக்களை இந்நூல் வெள்ளிடை மலைபோல் விளக்குகின்றது அஃதன்றியும் சைவ சித்தாந்த நூல்களை யுளங்கொளப் பயிலுதற்குத் தொடங்குமுன் இந்நூற் பயிற்சி இன்றியமையாதது.

இவர் திருச்செந்தூர் முருகப் பெருமானிடம் அளவில் அன்புடையவராய்த் 'திருச்செந்தூரகவல்' என்னும் ஒரு நூலியற்றியருளினர். இந்நூலில் சைவ

சித்தாந்தத்தில் மிக முயன்று அறிந்து கோடற்குரிய பொருள்களெல்லாம் முறையாய்ச் செறிந்திருக்கின்றன. தத்துவங்களினியல்பையும், வீட்டின்கணிகழும் பல்வேறு நிலைகளையும் இதன்கண் தெளிவாக விளக்கியிருக்கின்றனர். இவர் இன்னும் பல நூல்களுமியற்றியிருக்கின்றனர்

இவருக்கு மாணவர் அறுபத்து மூவர்; அவர் தத்துவப்பிரகாசர், ஞானப்பிரகாசர் முதலாயினோர் என்ப. இவர் தம் மாணவர் குழாத்துடன் ஓரிடத்தில் உணவு கொள்ளுகையில் அங்கிருந்த தவசுப்பிள்ளை ஆவினெய்யென நினைந்து வேப்பினெய்யைப் பரிமாற அனைவரும் அதனை யறியாது உண்ண, ஒருவரே இது வேம்பினெய் என்று அறிந்து உணவைக் கான்று ஆசிரியருக்கு அறிவித்தனர். ஆசிரியர் இவன் பக்குவனல்லாதான் என்று நீக்கினர். பின்பு சில நாளிருந்து அம்மாணவர் தவிர மற்றவர் அனைவர்க்கும் கௌரி மாயூரத்திற் கண்மையாகிய பூம்பொழி லொன்றில் தனித்தனி சமாதிக் குழிவெட்டி, சித்திரைத் திங்கள் திருவோண நாளில் அவர்களுடன் சமாதி யடைந்தனர் என்பர். சமாதியி லிறங்கும்போது இந்நூலாசிரியர் மூன்று வெண்பாக்களும் மாணவர் அறுபானிருவருந் தனித்தனி ஒவ்வொரு வெண்பாவும் அருளினரென்றுங் கூறுப.

---

## குமரகுருபரசுவாமிகள்

இவர் பாண்டி நாட்டிலேயுள்ள ஸ்ரீவைகுண்டத்திலே இற்றைக்கு முந்நூற்றைம்பது ஆண்டுகட்கு முன்னே சைவவேளாளர் குலத்திலே ஐந்தாண்டளவும் ஊமையாயிருந்தனர். அது கண்ட பெற்றோர் உளம் நைந்து, திருச்செந்தூர் சென்று முருகக் கடவுளை வழிபட அப்பெருமான் அருளால் இவருக்கு ஊமை நீங்கி இவர் சைவசித்தாந்தக் கருத்துக்கள் மலிந்து விளங்கும் 'கந்தர்கலிவெண்பா' என்னும் புகழ்நூலை அப்பெருமான்மீது அருளிச்செய்தனர்.

முருகக் கடவுள் ஆணைப்படிக் குமரகுருபரர் ஒரு சமயம் வடதிசை செல்லும்போது 'மதுரை மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்' பாட, அக்காலத் தரசராகிய திருமலைநாயகர் மீனாட்சியம்மை யருளால் அதனைத் தெரிந்து அப் பிள்ளைத்தமிழை அம்பிகை சந்நிதியில் அரங்கேற்றுவித்தனர். அப் பிள்ளைத்தமிழின் வருகைப்பருவத்து ஒன்பதாவது செய்யுளாகிய 'தொடுக்குங் கடவுட் பழம்பாடற் றொடையின் பயனே' என்று தொடங்குஞ் செய்யுளுக்குக் குமரகுருபரர் பொருளுரைக்கும் பொழுது மீனாட்சியம்மையார் அருச்சகரது பெண் போன்று திருக்கோலங் கொண்டு அரசர் கழுத்தி லணிந்திருந்த மணிவடத்தைக் கழற்றிக் குமரகுருபரர் கழுத்திலிட்டு மறைந்தருளினர். பின்னர் 'மீனாட்சியம்மை குறம்' 'மீனாட்சியம்மை யிரட்டைமணிமாலை' 'மதுரைக்கலம்பகம்' 'நீதிநெறிவிளக்கம்' என்பவற்றை யியற்றி யருளினார்.

பின்பு திருவாரூர் சென்று தியாகராசப் பெருமானை வணங்கித் 'திருவாரூர்நான்மணிமாலை' என்னும் நூலை யருளினார். அப்பால் தருமபுரஞ் சென்று அங்கிருந்து சிதம்பரஞ் செல்லப் புறப்பட்டு வைத்தீசுரன் கோவிலை அடைந்து முருகக்கடவுள் மீது 'முத்துக்குமாரசுவாமிபிள்ளைத்தமிழ்' என்னும் நூலைப் பாடினார். பின் சிதம்பரஞ் சென்று நடராசப் பெருமான் மீது சிதம்பரமும்மணிக்கோவை' 'சிதம்பரச்செய்யுட்கோவை' 'சிவகாமியம்மை யிரட்டைமணிமாலை' என்னும் நூல்களையும் பாடினார். பின் தருமபுரஞ் சாரவும் மாசிலாமணிதேசிகர் அவருக்கு ஞானோபதேசஞ் செய்தார். அக்கருணையை வியந்து தம்மாசிரியர்மீது 'பண்டார மும்மணிக்கோவை' யென்னும் நூலைப் பாடி யருளினர்.

பின்னர்க் காசிக்குப் போய், விசுவநாதப் பெருமான் மீது 'காசிக்கலம்பகம்' பாடினார். அந்நாட்டு மகம்மதிய அரசனிடம் மடங்கட்ட இடம் பெற விரும்பி, சரசுவதி யம்மையார்மீது 'சகலகலாவல்லிமாலை' பாடி இந்துஸ்தான் பாஷையை யறிந்து அரசனிடம் சென்று பல அற்புதங்கள் செய்து அவ்வரசனால் இடம் தரப் பெற்றுப் பலசைவமடங்களும் கேதாரநாத ராலயமும் அமைத்தனர்.

பின்னர் மூன்றுமுறை தருமபுரம் வந்து தமது ஆசிரியரை வணங்கிக் காசிக்குப் போய் ஓர் வைகாசி மாதத்துக் கிருஷ்ணபக்கத் திரிதியையில் இறைவன் றிருவடி நீழலெய்தினார்.

## சுவாமிநாத தேசிகர்

இவர் பாண்டிவள நாட்டிலே சைவ வேளாளர் மரபிலே, சற்றேறக் குறைய இருநூறு ஆண்டுகட்கு முன் பிறந்து, கல்வியறி வொழுக்கங்களாற் சிறந்த வராய்த் திருக்கைலாய பரம்பரைத் திருவாவடுதுறை யாதீனத்தை யடைந்து, அப்போது ஆண்டெழுந்தரு ளிய ஞானாசாரியராகிய அம்பலவாண தேசிக சுவாமி களிடம் சிவதீக்கை பெற்று, துறவறத்தை மேற் கொண்டு தம்பிரானா யமர்ந்திருந்தனர்.

அக்காலத்தில், அம்மடத்திற்கு வந்திருந்த பாண்டி நாட்டிலுள்ள திருநெல்வேலி மயிலேறும் பெருமாள் பிள்ளை யென்பவர் இந்நூலாசிரியரின் நல் லறி வொழுக்கங்களையும் அன்பின் திறத்தையுங்கண்டு வியந்து, இத்தகைய நுண்ணிய அறிவுடையவர்க் கன்றோ நாங் கற்ற கல்விப் பொருளைக் கற்பித்தல் வேண்டுமெனக் கருதித் தங்கருத்தினைத் தேசிகர்பால் விண்ணப்பித்து அவர் கட்டளைப்படி இவரை அழைத் துக் கொண்டுபோய், தமது வீட்டில் வைத்து மிகுந்த அன்புகாட்டி அருந்தமிழ் இலக்கண இலக்கிய நூல்க ளைப் பன்னீராண்டு கற்பித்தனர். பின்னர்ச் செப் பறைப்பதியில் வசிக்கும் கனகசபாபதி சிவாசாரிய ரால் வடமொழி வியாகரண முதலிய நூல்களையுங் கற்பிக்குமாறு செய்தனர்.

பின்பு இந்நூலாசிரியர் ஆதீனத்துக்குவந்து நிரு வாணதீக்கைபெற்றுச் சிவஞானபோத முதலிய ஞான நூல்களை யெல்லாங் கற்றுச் சிந்தித்துத் தெளிந்தனர்.

இவரிங்ஙன மிருக்குங் காலத்தில் ஆண்டுவந்த இலக்கணவிளக்க வாசிரியராகிய வயித்தியநாதநாவலர் இவரது படிப்பின் றிறமையைக் கண்டு வியந்து பேசி இவருடன் நட்புக்கொண்டனர். சிலநாட் சென்றபின் ஞானசாரியர் இவருக்கு ஆசாரியாபிடேகஞ் செய்து, திருநெல்வேலியில் தமதாதீன மடாலயத்திலிருக்கும்படி கட்டளை யிட்டனர். அவ்வாறே இவர் திருநெல்வேலி மடாலயத்திற்கு எழுந்தருளிய பின்னர்த் தாங்கற்ற இலக்கண நூல்களிலுள்ள அரிய விதிகளை யெல்லாந் திரட்டி இலக்கணக்கொத்தென ஓரரிய நூல் பாடி யருளி அதற்கு ஒரு நல்லுரையு மருளினர். அங்ஙனமே தாங்கற்ற ஞான சாத்திரக் கருத்துக்களை யெல்லாந் திரட்டித் தசகாரிய மென்னு மொருநூலையும் வேறுபல நூல்களையுஞ் செய்தருளினர்.

இவர், விழாக் காலந்தோறுந் திருச்செந்தூருக்குப் போய் முருகக்கடவுளை வழிபாடியற்றிவருநாளில் அக்கடவுள் மீது பல வகை யாப்புக்களானியன்ற திருச்செந்திற்கலம்பகமென்னும் அருநூலைப்பாடி யருளினர். இந் நூலின்கண் அமைந்து கிடக்கும் செஞ் சொற்களும், செம்பொருள்களும், பல சந்தநயங்களும், பிறவும் படிப்பவர் உள்ளத்தை உருக்க வல்லன.

நன்னூலுக்கு விருத்தியுரை இயற்றிய சங்கர நமச்சிவாயப்புலவர் முதலாயினர் பலருக்கும் இவர் ஆசிரியராகவிருந்து நெடுங்காலஞ் சென்றபின் சிவபெருமான் றிருவடிநீழலடைந்தனர்.

## கச்சியப்பமுனிவர்

இவர் தொண்டைமண்டலத்திலே, தணிகைப் பதியிலே, சைவ வேளாளர் குலத்திலே தோன்றி, ஒழுக்கம், அன்பு, அருள், வாய்மை, அடக்கம் முதலிய வற்றைத் தமக்குச் சிறந்த அணிகலன்களாகக் கொண்டு கல்வி கேள்விகளிற் சிறந்திருந்தனர். இவர் சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் பல திருக் கோயில்களுக்குச் சென்று வழிபாடியற்றி வரும் போது திருக்கைலாய பரம்பரைத் திருவாவடுதுறை மடத்தை யடைந்து, ஆண்டெழுந்தருளிய ஸ்ரீ நமச்சிவாய சுவாமிகளை வணங்கி, அப்போது சின்னப் பட்டத்தி லெழுந்தருளியிருந்த ஞான குருவாகிய பின் வேலப்பதேசிகரிடத்தே சைவத் துறவும், சிவதீக்கையும் பெற்றுக் கொண்டனர்.

பின்னர் வடநூற்கடலும், தென்னூற் கடலும் நிலைகண் டுணர்ந்த ஸ்ரீ மாதவச் சிவஞானசுவாமிகளிடத்தே இலக்கண இலக்கிய நூல்களும், தருக்கமும், மெய்கண்ட சாத்திரம் பதினான்கும், பண்டார சாத்திரம் பதினான்கும், மற்றும் பல அரிய நூல்களுங் கற்றுணர்ந்து அவர் மாணவர் பன்னிருவருள் தலைமை பெற்றிருந்தனர்.

இவர் தாம் பாடிய திருவானைக்காப்புராணம், திருப்பேரூர்ப் புராணம், திருத்தணிகைப் புராணம் என்னு மூன்றிலும் மூன்று படலங்களில் சிவாகமங்களிலும், தமிழ்ச் சைவ சித்தாந்த சாத்திரங்களிலும்

பரந்து கிடக்கும் முப்பொருளிலக்கணங்களை எளிதி லுணருமாறு தொகுத்துக் கூறியிருக்கின்றனர்.

பின்னர்த் தமது மாணுக்கரிற் சிறந்த கந்தப் பையருக்கு வயிற்றிலே கொடிய நோயுண்டான போது தணிகையாற்றுப்படை யென்னும் அரிய பெரிய நூலினை யியற்றியருளி அவர் நோயை மாற்றி யருளினர்.

பின்பு சென்னைமா நகரினை யடைந்து விநாயக புராணம் பாடி யரங்கேற்றுகையில் அச்சபைக்கு வந்த பெரிய பிரபுவாகிய ஐயாப்பிள்ளை என்பவர் 'இஃதென்ன இராமாயணமோ' என்று பரிகசிக்க, உடனே முனிவர் இராமாயணத்தில் ஆறு செய்யுட்க ளெடுத்து நூறு குற்ற மேற்றக் கண்ட பிரபு நூறு வராகனும், உயர்ந்த பட்டாடைகளும் முனிவரவர் கட்குப் பாதகாணிக்கையாக வைத்து வணங்கி மன் னிப்புக் கேட்டுக் கொண்டனர் என்ப.

இவரியற்றியருளிய நூல்கள் பல. அவற்றிற் றெரிந்த சிலவற்றை ஈண்டுக் கூறுவாம்.

க. திருவானைக்காப்புராணம்

உ. பேரூர்ப்புராணம்

ங. திருத்தணிகைப்புராணம்

ச. பூவாளூர்ப்புராணம்

ரு. விநாயகபுராணம்

கூ. காஞ்சிப்புராணத்து இரண்டாங்காண்டம்.

எ. திருத்தணிகையாற்றுப்படை

அ. கச்சியானந்த ருத்திரேசர் வண்டுவிடுதூது

கூ. கச்சியானந்த ருத்திரேசர் பதிற்றுப்பத்தந்தாதி

ய. பஞ்சாக்கர தேசிகரந்தாதி

கக. பிரமீசர் பதிற்றுப்பத்தந்தாதி

கஉ. பூவாளூர்ப் பதிற்றுப்பத்தந்தாதி

கங. தணிகைப் பதிற்றுப்பத்தந்தாதி

கச. சென்னை விநாயகர் பிள்ளைத்தமிழ்

கரு. சென்னை விநாயகர் யமகவந்தாதி

இவர் பேரூரில் வசிக்கும்போது அரசம்பல வாணர்மீது ஒரு நூலைப் பாடி மழை வரவழைத்தும், படேசர்மீது பல பாக்களைப் பாடிப் பலருக்குக் குட்டநோய் முதலியவற்றைப் போக்கியு மருளினார்.

இன்னோரன்ன நூல்கள் பல அருளிக் காஞ்சீபுரத்திலே சாலிவாகன சகாப்தம் கஎகஅ-க்குச் சரியான சாதாரணஹு சித்திரைத் திங்கள் பதினொன்றும் நாளில் எல்லாம் வல்ல இறைவன் றிருவருளில் இரண்டறக் கலந்தனர்.

# நூல் வரலாறு

பாண்டி நாட்டிலே, சோமசுந்தரக்கடவுள் அறு பத்து நான்கு திருவிளையாட லியற்றிய மதுரைப் பதியிலே இருந்த கடைச் சங்கத்துப் புலவர்க ளுள்ளே தலைவராய் விளங்கிய நக்கீர தேவர், 'கீர! நீ கைலை காணில் தொழுநோய் நீங்கும்' என்று சோமசுந்தரக் கடவுள் அருளியபடி ஏனைச் சங்கப்புல வர்பால் விடைபெற்று அரிதினீங்கிக் கைலைக்கு விரைந்து, காசி கேதாரங் கடந்து செல்கையில் அங்கே கடலையொத்ததொரு குளத்தைக் கண்டு, நீராடி, அதன் கரைக்கட் டழைத்ததோ ராலின் நீழ லிற் சிவவழிபாடு செய்துகொண்டிருந்தனர். அக் காலை யாலமரத்திலிருந்து ஓரிலை அவருக்கு முன்னே பாதி நீரிலும் பாதி கரையிலும் வீழ்ந்தது. நீரிலே வீழ்ந்த பாதி மீனும், கரையிலே வீழ்ந்த பாதி பறவையு மாகி, மீன் பறவையை நீரினிழுக்கப் பறவை மீனை நிலத்தினிழுத்தது. நக்கீரதேவர் அப்புதுமையைக் கண்டு மிக வியப்படைய, சிவவழிபாட்டிற்குத் தவ றுண்டாயிற்று.

அதன்முன்பு அவ்விடத்திலே, சிவவழிபாட்டில் வழுவினவர்களாகிய தொள்ளாயிரத்துத்தொண்ணூற் றொன்பதின்மரை ஒரு மலைக்குகையிலே அடைத்து வைத்துக் கொண்டு, இன்னும் ஒருவன் வேண்டு மெனக் காத்திருந்த ஒரு கரிய பூதம் நக்கீரரைத்

தூக்கிச் சென்று அக்குகையினுள்ளே அடைத்து ஆயிரவராக்கி, தன்கொள்கைப்படி அகப்பட்ட அவ்வாயிரவரையும் உண்ணுதற்கு நீராடப்போயிற்று.

முன் அடைபட்டிருந்தவர்கள் எல்லாரும் நக்கீர தேவரை நோக்கி, 'நாங்கள் நெடுங்காலமாகச் சிறையில் அடைபட்டிருந்தும் இப்பூதத்தினால் உணவு முதலியவைகளைப் பெற்றுப் பிழைத்திருந்தோம்; இன்றைக்கு உம்மாலே இதற்கிரையாகுங் காலம் அண்ணித்தது' என்று அழுதார்கள். நக்கீரதேவர் அச்சொற்களைக் கேட்டு மனமிரங்கி, முருகக் கடவுளைப் பாடினன்றி உய்தியின்றாமென் றெண்ணித் திருமுருகாற்றுப்படை என்கின்ற இவ்வருள் நூலைப் பாடினர். உடனே முருகக்கடவுள் எதிர்வந்து, உண்ண வந்த பூதத்தைக் கதையான் மோதிக் கொன்று, யாவரையுஞ் சிறையின் நீக்கி, நக்கீரதேவரைப் பார்த்து "இப்பாவினை நாடோறும் அன்புடனே ஓதுபவர்களுக்கு வேண்டிய வரங்களைக் கொடுத்து வருவேம்" என்று திருவருள் செய்தருளினார்.

இது ருகஎ அடிகளை யுடையது; வீடுபெறுதற்குச் சமைந்த ஒருவனை வீடுபெற்றா னொருவன் முருகக்கடவுளிடத்தே ஆற்றுப்படுத்தியதாக நக்கீரதேவர் பாடியது. இப்பாட்டு முருகக்கடவுளுடைய திருப்பதிகளுட் சிறந்த திருப்பரங்குன்றம், திருச்சீரலைவாய், திருவாவினன்குடி, திருவேரகம், குன்றுதோறாடல், பழமுதிர்சோலை என்னும் ஆறு படைவீட்டிலும் அவர் எழுந்தருளியிருத்தலைப் பாராட்டிக் கூறும்.

திருச்சிற்றம்பலம்

# திருமுருகாற்றுப்படை

## க. திருப்பரங்குன்றம்

### இணைக்குறளாசிரியப்பா

உலக முவப்ப வலனேர்பு திரிதரு
பலர்புகழ் ஞாயிறு கடற்கண் டாஅங்
கோவற விமைக்குஞ் சேண்விளங் கவிரொளி
உறுநர்த் தாங்கிய மதனுடை நோன்றாட்
செறுநர்த் தேய்த்த செல்லுறழ் தடக்கை
மறுவில் கற்பின் வாணுதல் கணவன்
கார்கோண் முகந்த கமஞ்சூன் மாமழை
வாள்போழ் விசும்பின் வள்ளுறை சிதறித்
தலைப்பெய றலைஇய தண்ணறுங் கானத்
திருள்படப் பொதுளிய பராரை மராஅத்
துருள்பூந் தண்டார் புரளு மார்பினன்
மால்வரை நிவந்த சேணுயர் வெற்பிற்
கிண்கிணி கவைஇய வொண்செஞ் சீறடிக்
கணைக்கால் வாங்கிய நுசுப்பிற் பணைத்தோட்
கோபத் தன்ன தோயாப் பூந்துகிற்
பல்காசு நிரைத்த சில்கா ழல்குற்

கைபுனைந் தியற்றாக் கவின்பெறு வனப்பி
னாவலொடு பெயரிய பொலம்புனை யவிரிழைச்
சேணிகந்து விளங்குஞ் செயிர்தீர் மேனித்
துணையோ ராய்ந்த விணையீ ரோதிச்
செங்கால் வெட்சிச் சீறித ழிடையிடுபு
பைந்தாட் குவளைத் தூவிதழ் கிள்ளித்
தெய்வ வுத்தியொடு வலம்புரி வயின்வைத்துத்
திலகந் தைஇய தேங்கமழ் திருநுதன்
மகரப் பகுவாய் தாழமண் ணுறுத்துத்
துவர முடித்த துகளறு முச்சிப்
பெருந்தண் சண்பகஞ் செரீஇக் கருந்தகட்
டுளைப்பூ மருதி னொள்ளிண ரட்டிக்
கிளைக்கவின் றெழுதரு கீழ்நீர்ச் செவ்வரும்
பிணைப்புறு பிணையல் வளைஇத் துணைத்தக
வண்காது நிறைந்த பிண்டி யொண்டளிர்
நுண்பூ ணாகந் திளைப்பத் திண்காழ்
நறுங்குற டுரிஞ்சிய பூங்கேழ்த் தேய்வை
தேங்கமழ் மருதிணர் கடுப்பக் கோங்கின்
குவிமுகி ழிளமுலைக் கொட்டி விரிமலர்
வேங்கை நுண்டா தப்பிக் காண்வர
வெள்ளிற் குறுமுறி கிள்ளுபு தெறியாக்
கோழி யோங்கிய வென்றடு விறற்கொடி
வாழிய பெரிதென் றேத்திப் பலருடன்
சீர்திகழ் சிலம்பகஞ் சிலம்பப் பாடிச்
சூரர மகளி ராடுஞ் சோலை
மந்தியு மறியா மரன்பயி லடுக்கத்துச்

சுரும்பு மூசாச் சுடர்ப்பூங் காந்தட்
பெருந்தண் கண்ணி மிலைந்த சென்னியன்
பார்முதிர் பனிக்கடல் கலங்கவுள் புக்குச்
சூர்முத றடிந்த சுடரிலை நெடுவே
லுலறிய கதுப்பிற் பிறழ்பற் பேழ்வாய்ச்
சுழல்விழிப் பசுங்கட் சூர்த்த நோக்கிற்
கழல்கட் கூகையொடு கடும்பாம்பு தூங்கப்
பெருமுலை யலைக்குங் காதிற் பிணர்மோட்
டுருகெழு செலவி னஞ்சுவரு பேய்மகள்
குருதி யாடிய கூருகிர்க் கொடுவிரற்
கண்டொட் டுண்ட கழிமுடைக் கருந்தலை
ஒண்டொடித் தடக்கையி னேந்தி வெருவர
வென்றடு விறற்களம் பாடித்தோள் பெயரா
நிணந்தின் வாய டுணங்கை தூங்க
இருபே ருருவி னொருபே ரியாக்கை
அறுவேறு வகையி னஞ்சுவர மண்டி
அவுணர் நல்வல மடங்கக் கவிழிணர்
மாமுத றடிந்த மறுவில் கொற்றத்
தெய்யா நல்லிசைச் செவ்வேற் சேஎய்
சேவடி படருஞ் செம்ம லுள்ளமொடு
நலம்புரி கொள்கைப் புலம்புரிந் துறையுஞ்
செலவுநீ நயந்தனை யாயிற் பலவுட
னன்னர் நெஞ்சத் தின்னசை வாய்ப்ப
இன்னே பெறுதிநீ முன்னிய வினையே
செருப்புகன் றெடுத்த சேணுயர் நெடுங்கொடி
வரிப்புனை பந்தொடு பாவை தூங்கப்

பொருநர்த் தேய்த்த போரரு வாயிற்
றிருவீற் றிருந்த தீதுதீர் நியமத்து
மாடமலி மறுகிற் கூடற் குடவயி
னிருஞ்சேற் றகல்வயல் விரிந்துவா யவிழ்ந்த
முட்டாட் டாமரைத் துஞ்சி வைகறைக்
கட்கமழ் நெய்த லூதி யெற்படக்
கண்போன் மலர்ந்த காமர் சுனைமல
ரஞ்சிறை வண்டி னரிக்கண மொலிக்குங்
குன்றமர்ந் துறைதலு முரிய னதாஅன்று

## உ. திருச்சீரலைவாய்.

வைந்நுதி பொருத வடுவாழ் வரிநுதல்
வாடா மாலை யோடையொடு துயல்வரப்
படுமணி யிரட்டு மருங்கிற் கடுநடைக்
கூற்றத் தன்ன மாற்றரு மொய்ம்பிற்
கால்கிளர்ந் தன்ன வேழ மேல்கொண்
டைவே றுருவிற் செய்வினை முற்றிய
முடியொடு விளங்கிய முரண்மிகு திருமணி
மின்னுற ழிமைப்பிற் சென்னிப் பொற்ப
நகைதாழ்பு துயல்வரூஉம் வகையமை பொலங்குழை
சேண்விளங் கியற்கை வாண்மதி கவைஇ
அகலா மீனி னவிர்வன விமைப்பத்

தாவில் கொள்கைத் தந்தொழின் முடிமார்
மனனேர் பெழுதரு வாணிற முகனே
மாயிருண் ஞால மறுவின்றி விளங்கப்
பல்கதிர் விரிந்தன் றொருமுக மொருமுக
மார்வல ரேத்த வமர்ந்தினி தொழுகிக்
காதலி னுவந்து வரங்கொடுத் தன்றே யொருமுக
மந்திர விதியின் மரபுளி வழாஅ
அந்தணர் வேள்வியோர்க் கும்மே யொருமுக
மெஞ்சிய பொருள்களை யேமுற நாடித்
திங்கள்போலத் திசைவிளக் கும்மே யொருமுகஞ்
செறுநர்த் தேய்த்துச் செல்சம முருக்கிக்
கறுவுகொ ணெஞ்சமொடு களம்வேட் டன்றே யொரு
குறவர் மடமகள் கொடிபோ லுசுப்பின் [முகங்
மடவரல் வள்ளியொடு நகையமர்ந் தன்றே யாங்கம்
மூவிரு முகனு முறைநவின் றொழுகலி
னாரந் தாழ்ந்த வம்பகட்டு மார்பிற்
செம்பொறி வாங்கிய மொய்ம்பிற் சுடர்விடுபு
வண்புகழ் நிறைந்து வசிந்துவாங்கு நிமிர்தோள்
விண்செலன் மரபி னையர்க் கேந்திய
தொருகை உக்கஞ் சேர்த்திய தொருகை
நலம்பெறு கலிங்கத்துக் குறங்கின்மிசை யசைஇய
அங்குசங் கடாவ வொருகை யிருகை [தொருகை
ஐயிரு வட்டமொ டெஃகுவலந் திரிப்ப வொருகை
மார்பொடு விளங்க வொருகை
தாரொடு பொலிய வொருகை
கீழ்வீழ் தொடியொடு மீமிசைக் கொட்ப வொருகை

பாடின் படுமணி யிரட்ட வொருகை
நீனிற விசும்பின் மலிதுளி பொழிய வொருகை
வானர மகளிர்க்கு வதுவை சூட்ட வாங்கப்
பன்னிரு கையும் பாற்பட வியற்றி
அந்தரப் பல்லியங் கறங்கத் திண்காழ்
வயிரெழுந் திசைப்ப வால்வளை ஞரல
உரந்தலைக் கொண்ட வுருமிடி முரசமொடு
பல்பொறி மஞ்ஞை வெல்கொடி யகவ
விசும்பா றாக விரைசெலன் முன்னி
உலகம் புகழ்ந்த வோங்குயர் விழுச்சீ
ரலைவாய்ச் சேறலு நிலைஇய பண்பே யதாஅன்று

## ௩. திருவாவினன்குடி

சீரை தைஇய வுடுக்கையர் சீரொடு
வலம்புரி புரையும் வானரை முடியினர்
மாசற விமைக்கு முருவினர் மானி
னுரிவை தைஇய வூன்கெடு மார்பி
னென்பெழுந் தியங்கு மியாக்கையர் நன்பகற்
பலவுடன் கழிந்த வுண்டிய ரிகலொடு
செற்ற நீக்கிய மனத்தின ரியாவதுங்
கற்றோ ரறியா வறிவினர் கற்றோர்க்குத்
தாம்வரம் பாகிய தலைமையர் காமமொடு
கடுஞ்சினங் கடிந்த காட்சிய ரிடும்பை

தித்திக்குந் தொந்திக்கு நித்தம்
புரியுஞ் சிவன்செவிபத்
தித்திக்குந் தொந்திக் கறமொழி
பாலகதேனலைத்துத்
தித்திக்குந் தொந்திக் கிளையாய்
விளையுயிர்க் குஞ்சிதைதோல்
தித்திக்குந் தொந்திப் பனவேது
செய்வினைத் தீவிலங்கே. ருஉ

தீவிலங் கங்கை தரித்தார்
குமார திமிரமுந்நீர்
தீவிலங் கங்கை வருமான்
மருக தெரிவற்றவான்
தீவிலங் கங்கை வரவா
விரைக்குத் திரிந்துழலுந்
தீவிலங் கங்கை யமன்றொட
ராமற் றிதம்பெறவே. ருங

திதத்தத்தத் தித்தத் திதிதாதை
தாததுத் தித்தத்திதா
திதத்தத்தத் தித்த திதித்தித்த
தேதுத்து தித்திதத்தா
திதத்தத்தத் தித்தத்தை தாததி
தேதுதை தாததத்து
திதத்தத்தத் தித்தித்த தீதி
திதிதுதி தீதொத்ததே. ருச

நீதோ மரணங் கவிரும்
  பிறப்பறுந் தியகற்புந்
நீதோ மரணம் பரமீது
  தானவர் சேனைமுற் றுந்
நீதோ மரணந் தனபூசு
  ரர்திரண் டேத்தியமுத்
நீதோ மரண மலையாளி
  யென்றுரை தென்னுறவே. ௫௫

தென்ன வனங்கனஞ் சூழ்காத்
  திரிநக சூலகரத்
தென்ன வனங்கனந் தப்பத
  நீட்டினன் செல்வமுன்பின்
தென்ன வனங்கனன் னீற்றாற்
  றிருத்திய தென்னவின்னந்
தென்ன வனங்கனங் கைச்சிலைக்
  கூனையுந் தீர்த்தருளே. ௫௬

நீத்தன் பரவை வெளிநீங்கிச்
  சேய்தொழச் செல்பதவுத்
நீத்தன் பரவை முறையிட
  மாங்குறை நீங்குறவே
நீத்தன் பரவை தழைக்கவிண்
  காவெனச் சென்னியின்மேல்
நீத்தன் பரவையில் வேலத்த
  னேகுரு சீலத்தனே. ௫௭

சீலங் கனமுற்ற பங்கா
　　கரசல தீரக்ரசி
சீலங் கனமுற்ற முத்நூர்செந்
　　தூர சிகண்டி யஞ்ச
சீலங் கனமுற்ற வேதனை
　　மேவித் தியங்கினன்சீ
சீலங் கனமுற்ற விப்பிறப்
　　பூடினிச் சேர்ப்பதன்றே. ௫௭

சேர்ப்பது மாலைய நீலோற்
　　பலகிரித் தெய்வவள்ளி
சேர்ப்பது மாலைய முற்று
　　றெனப்பலர் செப்பவெப்புச்
சேர்ப்பது மாலைய வத்தைமன்
　　யாக்கை சிதைவதன்முன்
சேர்ப்பது மாலைய வாசவன்
　　செப்பிய செப்பதத்தே. ௫௮

செப்பத் தமதிலை மாற்றூர்
　　கொளுமுன்னஞ் செல்வர்க்கிடச்
செப்பத் தமதிலை யெங்ஙனும்
　　வார்தெய்வ வேழமுகன்
செப்பத் தமதிலை வாணுத
　　ஞெக்கினர் சேணில்வெள்ளிச்
செப்பத் தமதிலை வென்றூர்
　　குமாரவத் திக்கரசே. ௫௯

திக்கர சத்தி தவன்சென்று
முன்றி திருமரர்வங்
திக்கர சத்தி யிடத்தோ
யென்செய்வ தெனத்தருநீ
திக்கர சத்தி விதிர்த்திலை
யேலெவன் செய்குவரத்
திக்கர சத்தி யலைவாய்
வளர்நித் திலக்கொழுந்தே. ௯௧

திலமுந் தயில முங்கர
வெங்குந் திகழ்தருசெங்
திலமுந் தயில முருகா
வெனுதத் திநகையினித்
திலமுந் தயிலமு தத்தா
லாருகிய சித்தவென்னை
திலமுந் தயில கலவினை
மேவித் தியங்குவதே. ௯௨

தியங்காப் பொறியுண் டெனுந்தனுத்
தீதனு மேதினையயூர்
தியங்காப் பொறியுண் டவமிலி
யேயென்று செப்பனுஞ்சத்
தியங்காப் பொறியுண் டயன்கைப்
படாது திரவெற்புகி
தியங்காப் பொறியுண் டைபண்டுயப்
போர்செய்த சேவகனே. ௯௩

சேவக மன்ன மலர்க்கோமுன்
னீசொலத் தெய்வவள்ளி
சேவக மன்ன வதனும்
புயகிரி செற்றமுழூச்
சேவக மன்ன திருவாவி
னன்குடிச் செல்வகல்விச்
சேவக மன்ன முனிக்கெங்ங
னுணித் திகைப்புற்றதே. ௩௫

திகைப்படங் கப்புயர் தந்தரு
ளானென் படுங்கணிய
திகைப்படங் கத்தமை யார்செந்தி
லாரென்ப டென்னனுய
திகைப்படங் கப்புகல் சேயென்பள்
கன்னிகண் ணீர்தரவி
திகைப்படங் கத்தமை யாதெமை
யாட்கொளுஞ் சீகரமே. ௩௬

சீகர சிந்துர வுத்தவெஞ்
சூர செயபுயவ
சீகர சிந்துர வல்லிசிங்
கார சிவசுதசு
சீகர சிந்துர கந்தர
வாகன் சிறைவிடுஞ்சு
சீகர சிந்துர மால்வினைக்
குன்றைச் சிகண்டிகொண்டே. ௩௭

சிகண்டிதத் தத்த மரவாரி
விட்டத் திதிபுத்ரரா
சிகண்டிதத் தத்த நகபூ
தரதெய்வ வள்ளிக்கொடிச்
சிகண்டிதத் தத்த மலர்மேற்
குவித்திடை செப்புருவஞ்
சிகண்டிதத் தத்த கரபோ
பலமென்னுஞ் சேகரனே. ௬௭

சேகர வாரண வேல்வீர
வேடச் சிறுமிபத
சேகர வாரண மேவும்
புயாசல தீவினையின்
சேகர வாரண வெற்பாள
நாளுந் த்ரியம்பகனார்
சேகர வாரண நின்கையில்
வாரணஞ் சீவனென்றே. ௬௮

சீவன சத்துரு கன்பாற்
பிறப்பறத் தேவருய்யச்
சீவன சத்துரு மிக்குமெய்
யோன்கையிற் சேர்த்தசெவ்வேள்
சீவன சத்துருச் செய்யாண்
மருகவெ ணுதிடையே
சீவன சத்துரு வெய்திவெய்
தாப்பழி சிந்திப்பதே. ௬௯

சிந்தூர வித்தக வாரும்
 புகர்முகத் தெய்வவெள்ளைச்
சிந்தூர வித்தக வல்லிசிங்
 காரசெந் தூரகுன்றஞ்
சிந்தூர வித்தக முத்திக்கு
 மாய்நின்ற செல்வதுஞ்சா
சிந்தூர வித்தக னம்போலு
 மிங்கிளந் திங்களுமே. ௭0

திங்களு மாசுண மும்புனை
 வார்செல்வ னென்னையிரு
திங்களு மாசுண மாக்கும்
 பதாம்புயன் செந்திலன்றன்
திங்களு மாசுண மன்போல்
 விழியுஞ் செழுஞ்சருமப்
திங்களு மாசுண நன்றான
 மாற்றமுந் தீட்டினன்றே. ௭௧

தீட்டப் படாவினி யுன்றலென்
 சென்னி கறைப்பிறப்பில்
தீட்டப் படாவி யவரல்லன்
 யான்றிக்கு நான்மருப்புத்
தீட்டப் படாவி தமுகா
 சலன்சிறை விட்டவன்றாள்
தீட்டப் படாவி வனையே
 நினைவன் றிசாமுகனே. ௭௨

திசாமுக வேதனை யன்பாற்
கரன்றிங் கடங்களவ
திசாமுக வேதனை யீறிலு
மீறிலர் சீறுமம்போ
திசாமுக வேதனை வென்கண்ட
வேலன் றினைப்புனத்தந்
திசாமுக வேதனை நண்ணுதண்
கார்வரை சேர்பவரே. எக

சேரப் பொருப்பட வித்தே
னிறைவன் றிரைசிறையைச்
சேரப் பொருப்பட வல்லவன்
சூரைச் சிகரியுடன்
சேரப் பொருப்பட வென்றண்ட
ரேத்திய சேவகன்வான்
சேரப் பொருப்பட வேணியிற்
சேர்த்தவன் செய்தவமே. எச

செய்தவத் தாலஞ்சு சீரெழுத்
தோதிலந் தீதலருஞ்
செய்தவத் தாலஞ்சு கம்பெறச்
சேயுரைக் கேற்றுருப்போய்ச்
செய்தவத் தாலஞ்சு வைக்கனி
யீன்றதென் னேம்வினையே
செய்தவத் தாலஞ்சு கின்றன
மும்மலச் செம்மல்கொண்டே. எரு

செம்மலை வண்டு கடாங்க
மாவென்ற திண்படைவேற்
செம்மலை வண்டு வசவார
ணத்தனைச் செப்பவுன்னிச்
செம்மலை வண்டு தவந்தாழ்ப்
பாணதெண் மங்கையில்வாய்
செம்மலை வண்டு விருப்புறு
மோவிது தேர்ந்துரையே. ௭௬

தேரை விடப்பணி யேறேறி
முப்புரஞ் செற்றபிரான்
றேரை விடப்பணி சூராரி
யென்ன தெரிவையர்பால்
றேரை விடப்பணி வாய்ப்படு
மாறு செறிந்தலைகைத்
தேரை விடப்பணித் தென்றேடி
யென்றுந் திரிபவரே. ௭௭

திரிபுரத் தப்புப் புவிதரத்
தோன்றி சிலைபிடிப்பத்
திரிபுரத் தப்புத் தலைபட
நாண்டொடுஞ் சேவகன்கோத்
திரிபுரத் தப்புத் திரமான்
மருக திருக்கையம்போ
திரிபுரத் தப்புத் துறையா
யுதமெனச் செப்புநெஞ்சே. ௭௮

செப்பா ரமுதலை மன்னே
திகனங் குரும்பைமுலை
செப்பா ரமுதலை கண்கா
னைகைமுருந் தீரிருகண்
செப்பா ரமுதலை வாவியிற்
சென்றபி ரான்மருகன்
செப்பா ரமுதலை வேர்களை
வான்வரைச் சீரினுக்கே. எக

சீராம ராம சிவசங்க
ரானுந் திருமுடிக்குச்
சீராம ராம துகரத்
துழாயென்பர் தெண்டிரைமேற்
சீராம ராம னிறந்திறக்
கத்தொட்ட சேய்கழற்குச்
சீராம ராம னிமையோர்
மகுடச் சிகாவிம்பமே. அய

சிகாவல வன்பரி தப்பாடு
செய்யுஞ்செவ் வேலவிலஞ்
சிகாவல வன்பரி யூரார்
மதனித் திலஞ்சலரா
சிகாவல வன்பரி யங்கங்
குழல்பெற்ற தேமொழிவஞ்
சிகாவல வன்பரி யானல
மன்றினுந் தென்றலுமே. அக

தென்றலை யம்பு புனைவார்
குமார திமிரமுந்நீர்த்
தென்றலை யம்புய மின்கோ
மருக செழுமறைதேர்
தென்றலை யம்பு சகபூ
தரவெரி சிந்திமன்றல்
தென்றலை யம்பு படுநெறி
டோயுயிர் தீர்க்கின்றதே. ௮௨

தீரா கமல சலிகித
போக மெனத்தெளிந்துந்
தீரா கமல மெனக்கரு
தாதமெ்தன் சேயவநூல்
தீரா கமல குகரம்
பொறுப்ப னெனத்திருக்கண்
தீரா கமல மாவே
கருகச் சிவந்தனனே. ௮௩

சிவசிவ சங்கர வேளா
யுததினை வஞ்சிகுறிஞ்
சிவசிவ சங்கர வாமயில்
வீர செகந்திருக்கண்
சிவசிவ சங்கர மாவை
யெனுந்திற லோய்பொறைவா
சிவசிவ சங்கர மான்பட்ட
வாவொளி சேர்ந்தபின்னே. ௮௪

செந்த மராத்துடர் தானவர்
சேனையைத் தெண்டிரைக்கண்
செந்த மராத்துடன் கொன்றசெவ்
வேலை திருமுடிமேற்
செந்த மராத்துட ரச்சூடி
மைந்த திளைத்திளைத்தேன்
செந்த மராத்துட ரின்ஞரி
யென்னுமிச் சேறுபுக்கே. ௮௫

சேறலைத் தாறலைக் கப்பா
லெழுந்து செழுங்கமுகிற்
சேறலைத் தாறலைக் குஞ்செந்தி
லாய்சிந்தை தீநெறியிற்
சேறலைத் தாறலைத் தீர்க்குங்
குமார நிரியவினைர்
சேறலைத் தாறலைக் கத்தகு
மோமெய்த் திறங்கண்டுமே. ௮௬

திறம்பா டுவர்தண் புனத்தெய்வ
மேயென்பர் சேதத்துமாந்
திறம்பா டுவர்முது நீரெனக்
காய்பவர் செந்தினைமேல்
திறம்பா டுவரிதழ் கண்டுரு
காநிற்பர் செப்புறச்செந்
திறம்பா டுவரி லிவர்வல்
லவர்நஞ் செயல்கொள்ளவே. ௮௭

செயலங் கைவாளை யிறைகோயி
லைச்சிவ னாமுறைதைச்
செயலங் கைவாளை முனிகொண்டல்
வானியைத் தேவர்பிரான்
செயலங் கைவாளை முனைவேலை
யன்னவிச் சேயுறையுஞ்
செயலங் கைவாளை யுகள்செந்தில்
வாழ்பவள் சேல்விழியே. ௮௮

சேலையி லாருந் தவன்சூல
மேறச் சினத்தவன்கண்
சேலையி லாருந் திவனோற்
பவையர சிந்திரியுச்
சேலையி லாரும் பராபரி
புக்குறச் சிக்கெனுமிச்
சேலையி லாருந் திறையிட்
டனர்தங்கள் சித்தங்களே. ௮௯

சித்தத் தரங்கத்தர் சித்தியெய்
தத்திரி கின்றதென்னர்ச்
சித்தத் தரங்கத்தர் சந்தி
யேசெந்தி லாய்சலரா
சித்தத் தரங்கத்த ரக்கரைச்
செற்றகந் தாதிங்களிஞ்
சித்தத் தரங்கத்தர் சேயா
ரணத்தந் திகிரியையே. ௯௦

திகிரி வலம்புரி மாற்கரி
யார்க்குப தேசஞ்சொன்ன
திகிரி வலம்புரி செய்யா
ரிலஞ்சிசெந் தூர்கனைதந்
திகிரி வலம்புரி வேறும்
படைத்தருள் சேய்தணியில்
திகிரி வலம்புரி சூடிய
வாநன்று சேடியின்றே. ௬௧

சேடி வணங்கு வளைத்தோ
ளணைப்புணர் சேயவட
சேடி வணங்கு திருத்தணி
காவல நின்செருக்காற்
சேடி வணங்கு கொடியிடை
யாரையென் செப்புமுலை
சேடி வணங்கு தலைக்களி
றீந்தது செல்லநில்லை. ௬௨

செல்லலை யம்பொழில் சூழ்செந்தி
லானறி யானிறைகைச்
செல்லலை யம்பொழி லெங்கணு
மேற்ப வெனத்தெறித்த
செல்லலை யம்பொழி லங்கைக்
கருடிரு மானிறம்போற்
செல்லலை யம்பொழி லாகவ
மாதுயிர் சேதிப்பதே. ௬௩

சேதிக் கனைத்து களதாக்கு
நோக்கினன் செல்வசெந்திற்
சேதிக் கனைத்து நிலைபெறச்
சூரங்கஞ் சிரங்கமால்
சேதிக் கனைத்து வரிதோ
யயில்கொடெற் சேர்க்கவந்தாற்
சேதிக் கனைத்து வருமா
மறலி திறலினையே. ௬௫

திறவா வனக புரிவாச
னீக்கச் சிகரிநெஞ்சந்
திறவா வனச முனியைவென்
றேய்தென் றிசைத்திருச்செந்
திறவா வனமயி லோயந்த
காலமென் சிந்தைவைக்கத்
திறவா வனநின் றிருவான
தண்டைத் திருவடியே. ௬௬

திருக்கையம் போதிக ளோகஞ்ச
மோநஞ்ச மோதிருமால்
திருக்கையம் போசெய்ய வேலோ
விலோசனந் தென்னனங்கத்
திருக்கையம் போருகக் கைந்நீற்றின்
மாற்றித்தென் னூல்சிவபத்
திருக்கையம் போக வுரைத்தோன்
சிலம்பிற் சிறுமிதற்கே. ௬௭

திறமிக் குமர நிகர்வீர்
பகிரச் சிதையுயிர்த் தூச்
திறமிக் குமர சரணமென்
னீருய்விர் செந்திலைமேற்
திறமிக் குமர புரைத்துநின்
றோன்சிலை வேட்டுவனெச்
திறமிக் குமர வணிமுடி
யான்மகன் சீரடிக்கே.

சீரங்க ராக மறமோது
திகிரி செங்கைகொண்ட
சீரங்க ராக மருகந்த
தேசிக செந்திலைமேற்
சீரங்க ராக தனகிரி
தோய்கந்த செந்தமிழ்நூற்
சீரங்க ராக விநோதவென்
பார்க்கில்லை தீவினையே.

தீவினை யற்ற சினந்தீ
ரகத்துண்மெய்த் தீபநந்தந்
தீவினை யற்ற வநந்தா
தெடுத்தனைஞ் செந்திலைமேல்
தீவினை யற்ற புனமான்
கொழுநன் செழுங்கனகத்
தீவினை யற்ற வடியார்க்
கருள்பெருஞ் செல்வனுக்கே.

செல்வந் திகழு மலநெஞ்ச
 மேயவன் றெய்வமின்னூர்
செல்வந் திகழு நமதின்மை
 தீர்க்கும்வெங் கூற்றுவற்குச்
செல்வந் திகழுந் திருக்கையில்
 வேறினை காத்தசெல்வி
செல்வந் திகழு மணவாள
 னல்குந் திருவடியே. (௱)

கந்தரந்தாதி

முற்றிற்று

---

உ

திருச்சிற்றம்பலம்

# திருவகுப்பு

## க. சீர்பாதவகுப்பு

தனனதன தனனதன தனனதன தனனதன
தனனதன தனனதன-தனதான தானதன

உததியிடை கடவுமரகதவருண குலதுரக
வுபலளித கனகரத-சதகோடி சூரியர்கள்

உதயமென வதிகவித கலபகக மயிலின்மிசை
யுகமுடிவி னிருளகல-வொருசோதி வீசுவதும்

உடலுமுட லுயிருநிலை பெறுதல்பொரு ளெனவுலக
மொருவிவரு மனுபவநல்-சிவயோக சாதனையில்

ஒழுகுமவர் பிறிதுபர வசமழிய விழிசெருகி
யுணர்வுவிழி கொடுநியதி-தமதூடு நாடுவதும்

உருவெனவு மருவெனவு முளதெனவு மிலதெனவு
முழலுவன பரசமய-கலையார வாரமற

உரையவிழ வுணர்வவிழ வுளமவிழ வுயிரவிழ
வுளபடியை யுணருமவ-ரநுபூதி யானதுவும்

உறவுமுறை மனைவிமக வெனுமலையி லெனதிதய
வுருவுடைய மலினபவ-சலராசி யேறவிடும்
உறுபுணையு மறிமுகமு முயரமரர் மணிமுடியி
லுறைவதுவு முலைவிலது-மடியேன் மனோரதமும் ()

இதழிவெகு முகககன ததியறுகு தறுகணர
விமகிரண தருணவுடு-பதிசேர்ஜ டாமவுலி
இறைமகிழ வுடைமணியொ டணிசகல மணிகலென
விமையமயி றழுவுமொரு-திருமார்பி லாடுவதும்
இமையவர்க ணகரிலிறை குடிபுகுத நிருதர்வயி
றெரிபுகுத வுரகர்பதி-யபிஷேக மாயிரமும்
எழுபிலமு நெறுநெறென முறியவட குவடிடிய
இளையதளர் நடைபழகி-விளையாடல் கூருவதும்
இனியகனி கடலைபய றொடியல்பொரி யமுதுசெயு
மிலகுவெகு கடவிகட-தடபார மேருவுடன்
இகலிமுது திகிரிகிரி நெரியவளை கடல்கதற
வெழுபுவியை யொருநொடியில்-வலமாக வோடுவதும்
எறுழிபுலி கரடியரி கரிகடமை வருடையுழை
யிரலைமரை யிரவுபக-லிரைதேர்க டாடவியில்
எயினரிடு மிதணதனி லிளகுதினை கிளிகடிய
வினிதுபயில் சிறுமிவளர்-புனமீது லாவுவதும் (௭)

முதலிவினை முடிவிலிரு பிறையெயிறு கயிறுகொடு
முதுவடவை விழிசுழல-வருகால தூதர்கெட
முடுகுவது மருணெறியி லுதவுவது நினையுமவை
முடியவரு வதுமடியர்-பகைகோடி சாடுவதும்

மொகுமொகென மதுபமுரல் குரவுவிள வினதுகுறு
முறியுமலர் வகுளதள-முழுநீல தீவரமும்
முருகுகமழ் வதுமகில முதன்மைதரு வதும்விரத
முனிவர்கரு தரியதவ-முயல்வார்த போபலமும்
முருகசர வணமகளி ரறுவர்முலை நுகருமறு
முககுமர சரணமென-வருள்பாடி யாடிமிக
மொழிகுழற வழுதுதொழு துருகுமவர் விழியருவி
முழுகுவதும் வருகவென-வரைகூவி யாளுவதும்
முடியவழி வழியடிமை யெனுமுரிமை யடிமைமுழு
துலகறிய மழலைமொழி-கொடுபாடு மாசுகவி
முதலமொழி வனநிபுண மதுபமுக ரிதமவுன
முகுளபரி மளநிகில-கவிமாலை சூடுவதும் (௫)

மதசிகரி கதறிமுது முதலைகவர் தரநெடிய
மடுநடுவில் வெருவியொரு-விசையாதி மூலமென
வருகருணை வரதனிக லிரணியனை நுதியுகிரின்
வகிருமட லரிவடிவு-குறளாகி மாபலியை
வலியசிறை யிடவெளியின் முகடுகிழி படமுடிய
வளருமுகி னிருதனிரு-பதுவாகு பூதரமும்
மகுடமொரு பதுமுறிய வடுபகழி விடுகுரிசின்
மருகனிசி சரர்தளமும்-வருதார காசுரனும்
மடியமலை பிளவுபட மகரசல நிதிகுறுகி
மறுகிமுறை யிடமுனியும்-வடிவேல னீலகிரி
மருவுகுரு பதியுவதி பவதிபக வதிமதுர
வசனிபயி ரவிகவுரி-யுமையாள்த்ரி சூலதரி

வனசைமது பதியமலை விசயைதிரி புரைபுனிதை
வனிதையபி நவையனகை-யபிராம நாயகிதன்
மதலைமலை கிழவனறு பவனபய னுபயசதுர்
மறையின்முத னடுமுடிவின்-மணநாறு சீறடியே.()

---

## உ. தேவேந்திரசங்கவகுப்பு

தனதன தனதன தனதன தனதன
தனதன தனதன
தானந்தன தந்தன தானந்தன தந்தன

தரணியி லரணிய முரணிர ணியனுட
றனைநக நுதிகொடு
சாடோங்குநெ டுங்கிரி யோடேந்துப யங்கரி
தமருக பரிபுர வொலிகொடு நடநவில்
சரணிய சதுர்மறை
தாதாம்புய மந்திர வேதாந்தப ரம்பரை
சரிவளை விரிசடை யெரிபுரை வடிவினள்
சததள முகுளித
தாமாங்குச மென்றிரு தாளாந்தர வம்பிகை
தருபதி சுரரொடு சருவிய வசுரர்க
டடமணி முடிபொடி
தானம்படி செங்கையில் வாள்வாங்கிய சங்கரி(வ)

இரணகி ரணமட மயின்மிர்க மதபுள
கிதவிள முலையிள
நீர்தாங்கிநு டங்கிய நூல்போன்றம ருங்கினள்

இறுகிய சிறுபிறை யெயிறுடை யமபட
ரென துயிர் கொளவரின் [குயில்
யானெங்குதல் கண்டெதிர் தானென்றுகொ ளுங்

இடுபலி கொடுதிரி யிரவல ரிடர்கெட
விடுமன கரதல
வேகாம்பரை யிந்திரை மோகாங்கச மங்கலை

எழுதிய படமென விருளறு சுடரடி
யிணைதொழு மவுனிக
ளேகாந்தச கந்தரு பாசாங்குச சுந்தரி (௨)

கரணமு மரணமு மலமொடு முடல்படு
கடுவினை கெடநினை
காலாந்தரி கந்தரி நீலாஞ்சனி நஞ்சுமிழ்

கனலெரி கணபண குணமணி யணிபணி
கனவளை மரகத
காசாம்பர கஞ்சுளி தூசாம்படி கொண்டவள்

கனைகழ னினையல ருயிரவி பயிரவி
கவுரிக மலைகுழை
காதார்ந்தசெ ழுங்கழு நீர்தோய்ந்தபெ ருந்திரு

கரைபொழி திருமுக கருணையி னுலகெழு
கடனிலை பெறவளர்
காவேந்திய பைங்கிளி மாசாம்பவி தந்தவன் (௩)

அரனொடு வடவரை யடியொடு பொடிபட
வலைகடல் கெடவயில்
வேல்வாங்கிய செந்தமிழ் நூலோன்கும ரன்குகன்

அறுமுக னொருபதொ டிருபுய னபிநவ
னழகிய குறமக
டார்வேய்ந்தபு யன்பகை யாமாந்தர்க ளந்தகன்

அடன்மிகு கடதட விகடித மதகளி
றனவர தமுமக
லாமாந்தர்கள் சிந்தையில் வாழ்வாம்படி செந்திலில்

அதிபதி யெனவரு பொருதிறன் முருகனை
யருள்பட மொழிபவ
ராராய்ந்துவ ணங்குவர் தேவேந்திர சங்கமே.(க)

---

## ரு. வேல்வகுப்பு

தனத்ததன தனத்ததன தனத்ததன
தனத்ததன தனத்ததன தனத்ததன
தனத்ததன தான

பருத்தமுலை சிறுத்தவிடை வெளுத்தநகை
கறுத்தகுழல் சிவத்தவிதழ் மறச்சிறுமி
விழிக்குநிக ராகும்

பணைக்கைமுக படக்கரட மதத்தவள
கசக்கடவுள் பதத்திடுநி களத்துமுளை
தெறிக்கவர மாகும்

பழுத்தமுது தமிழ்ப்பலகை யிருக்குமொரு
கவிப்புலவ னிசைக்குருகி வரைக்குகையை
இடித்துவழி காணும்

பசித்தலகை முசித்தழுது முறைப்படுத
லொழித்தவுண ருரத்துதிர நிணத்தசைகள்
புசிக்கவரு ணேரும் (௭)

சுரர்க்குமுனி வரர்க்குமக பதிக்கும்விதி
தனக்குமரி தனக்குநரர் தமக்குமுறு
மிடுக்கண்வினை சாடும்

சுடர்ப்பரிதி யொளிப்பநில வொழுக்குமதி
யொளிப்பவலை யடக்குதழ லொளிப்பவொளி
ரொளிப்பிரபை வீசும்

துதிக்குமடி யவர்க்கொருவர் கெடுக்கவிடர்
நினைக்கினவர் குலத்தைமுத லறக்களையு
மெனக்கோர்துணை யாகும்

சொலற்கரிய திருப்புகழை யுரைத்தவரை
யடுத்தபகை யறுத்தெறிய வுறுக்கியெழு
மறத்தைநிலை காணும் (௮)

தருக்கிநமன் முருக்கவரி னெருக்குமதி
தரித்தமுடி படைத்தவிறல் படைத்தவிறை
கழற்குநிக ராகும்

தலத்திலுள கணத்தொகுதி களிப்பினுண
வழைப்பதென மலர்க்கமல கரத்தின்முனை
விதிர்க்கவளை வாகும்
தனித்துவழி நடக்குமென திடத்துமொரு
வலத்துமிரு புறத்துமரு கடுத்திரவு
பகற்றுணைய தாகும்
சலத்துவரு மரக்கருடல் கொழுத்துவளர்
பெருத்தகுடர் சிவத்ததொடை யெனச்சிகையில்
விருப்பமொடு சூடும் (௯)
திரைக்கடலை யுடைத்துநிறை புனற்கடிது
குடித்துடையு முடைப்படைய வடைத்துதிர
நிறைத்துவிளை யாடும்
திசைக்கிரியை முதற்குலிச னறுத்தசிறை
முளைத்ததென முகட்டினிடை பறக்கவற
விசைத்ததிர வோடும்
சினத்தவுண ரெதிர்த்தரண களத்தில்வெகு
குறைத்தலைகள் சிரித்தெயிறு கடித்துவிழி
விழித்தலற மோதும்
திருத்தணியி லுதித்தருளு மொருத்தன்மலை
விருத்தனென துளத்திலுறை கருத்தன்மயி
னடத்துகுகன் வேலே. (க)

## ௪. திருவேளைக்காரன்வகுப்பு

தானதன தத்ததன தானதன தத்ததன
தானதன தத்ததன-தானத் தானன

ஆனபய பத்திவழி பாடுபெறு முத்தியது
வாகநிகழ் பத்தசன-வாரக் காரனும்
ஆரமது ரித்தகனி காரணமு தற்றமைய
ஞருடனு ணக்கைபரி-திமைக் காரனும்
ஆகமம்வி ளைத்தகில லோகமு நொடிப்பளவி
லாசையொடு சுற்றுமதி-வேகக் காரனும்
ஆணவவ ழுக்கடையு மாவியை விளக்கியநு
பூதியடை வித்ததொரு-பார்வைக் காரனும்
ஆடலைவு பட்டமரர் நாடதுபி ழைக்கவம
ராவதிபு ரக்குமட-லாண்மைக் காரனும்
ஆடகவி சித்ரகன கோபுரமு கப்பிலரு
ணைபுரியி னிற்குமடை-யாளக் காரனும்
ஆயிரமு கத்துநதி பாலனும கத்தடிமை
யானவர்தொ டுத்தகவி-மாலைக் காரனும்
ஆறுமுக வித்தகனு மாறிருபு யத்தரசு
மாதிமுடி வற்றதிரு-நாமக் காரனும் (௮)

யானெனதெ னச்சருவு மீனசம யத்தெவரும்
யாருமுணர் தற்கரிய-நேர்மைக் காரனும்
யாதுநிலை யற்றலையு மேழுபிற விக்கடலை
யேறவிடு நற்கருணை-யோடக் காரனும்

ஏரகமி டைக்கழிசி ராமலைதி ருப்பழனி
யேரணிசெ ருத்தணியில்-வாசக் காரனும்
ஏழையினி ரட்டைவினை யாயதொரு டற்சிறையி
ராமல்விடு வித்தருணி-யாயக் காரனும்
யாமளைம ணக்குமுக சாமளைம ணிக்குயிலை
யாயெனவ ழைத்தருகு-நேயக் காரனும்
ஏதமற நிச்சயம னலையவி ளக்கொளியும்
யாகமுனி வர்க்குரிய-காவற் காரனும்
ஈரிருமரு ருப்புடைய சோளைமத வெற்பிவரும்
யானையள விற்றுவளு-மாசைக் காரனும்*
ஏடவிழ்க டப்பமலர் கூதளமு டிக்குமிளை
யோனுயறி விற்பெரிய-மேன்மைக் காரனும் (௭)

வானவர்பொ ருட்டுமக வானதுபொ ருட்டுமலர்
வாவியிலு தித்தமுக-மாயக் காரனும்
வாரணப திக்குதவு நாரணனு வக்குமரு
மானுமய னைக்கறுவு-கோபக் காரனும்
வாழியென நித்தமற வாதுபர விற்சரண
வாரிசம ளிக்குமுப-கார்க் காரனும்
மாடமதில் சுற்றியத்ரி கூடகிரி யிற்கதிர்செய்
மாநகரி யிற்கடவு-ளாயக் காரனும்
வாளெயிற துற்றபகு வாய்தொறுநெ ருப்புமிழும்
வாசுகியெ டுத்துதறும்-வாசிக் காரனும்
வாளகிரி யைத்தனது தாளிலிடி யப்பொருது
வாகைபுனை குக்குடப-தாகைக் காரனும்

மாசிலுயி ருக்குயிரு மாசிலுணர் வுக்குணர்வும்
வானிலணு வுக்கணுவு-பாயக் காரனும்
வாதனை த விர்த்தகுரு நாதனும்வெ ளிப்படம
காடவியி னிற்பதொர்ச-காயக் காரனும் (ஜ)

மீனவனு மிக்கபுல வோருமுறை பொற்பலகை
மீதமர்த மிழ்த்ரயவி-னோதக் காரனும்
வேரிமது மத்தமதி தாதகிக டுக்கைபுனை
வேணியர்து திப்பதொரு-கேள்விக் காரனும்

வேலைதுகள் பட்டுமலை சூரனுடல் பட்டுருவ
வேலையுற விட்டதனி-வேலைக் காரனும்
மீனுலவு கிர்த்திகைகு மாரனுமெ னக்குமவர்
வீடுபெற வைத்தருளு-தாரக் காரனும்

மேனையரி வைக்குரிய பேரனும நித்ததிறல்
வீரனும ரக்கர்குல-சூறைக் காரனும்
வேதியர்வெ றுக்கையும நாதிபர வஸ்துவும்வி
சாகனும்வி கற்பவெகு-ரூபக் காரனும்

வேடுவர்பு னத்திலுரு மாறிமுனி சொற்படிவி
யாகுலம னத்தினொடு-போம்விற் காரனும்
மேவியபு னத்திதணி லோவியமெ னத்திகழு
மேதகுகு றத்திதிரு-வேளைக் காரனே. (க)

## ௫. பெருத்தவசனவகுப்பு

தனத்த தனதன தனத்த தனதன
தனத்த தனதன தனத்த தனதன

அருக்க னுலவிய சகத்ர யமுமிசை
யதிற்கொள் சுவையென வனைத்து நிறைவதும்
அவஸ்தை பலவையு மடக்கி யகிலமு
மவிழ்ச்சி பெறவினி திருக்கு மவுனமும்
அசட்டு வெறுவழி வழக்க ரறுவரு
மரற்று வனபொருள் விகற்ப மொழிவதும்
அழுக்கு மலவிருண் முழுக்கி னுழல்வதை
யடக்கி யவநெறி கடக்க விடுவதும் (௧)

எருக்கு மிதழியு முடிக்கு மிறைகுரு
வெமக்கு மிறையவ னெனத்தி கழுவதும்
இரட்டை வினைகொடு திரட்டு மலவுட
லிணக்க மறவொரு கணக்கை யருள்வதும்
இருக்கு முதலிய சமஸ்த கலைகளு
மிதற்கி தெதிரென விணைக்க வரியதும்
இறக்க வெனவெதிர் நடக்கும் யமபடர்
கடக்க விடுவதொ ரியற்கை யருள்வதும் (௨)

நெருக்கு வனவுப நிடத்தி னிறுதிக
ணிரப்பு கடையினி லிருப்பை யுடையதும்
நெருப்பு நிலம்வெளி மருத்து வனமென
நிறைத்த நெறிமுறை கரக்கு முருவமும்

நினைப்பு நினைவது நினைப்ப வனுமறு
நிலத்தி னிலைபெறநி றுத்த வுரியதும்
நிலைத்த வடியவர் மலைத்த லதுகெட
நிவிர்த்தி யுறவனு பவிக்கு நியமமும் (ஜ)
உருக்கு திருவரு டிளைத்து மகிழ்தர
வுளத்தொ டுரைசெய வொளித்து விடுவதும்
ஒளிக்கு மொளியென வெளிக்கும் வெளியென
வுயிர்க்கு முயிரென நிகழ்ச்சி தருவதும்
உரத்த தனிமயி லுகைத்து நிசிசர
ரொளிக்க வமர்பொரு சமர்த்த னணிதழை
உடுத்த குறமகண் மணக்கு மறுமுக
னொருத்த னருளிய பெருத்த வசனமே. (௧)

---

## ௯. பூதவேதாளவகுப்பு

தனன தனதன தனன தனதன
தனன தனதன தனன தனதன
தனத னதன தந்தன தந்தன
தனத னதன தந்தன தந்தன
தத்ததன தானதன தத்ததா னத்தனன
தத்ததன தானதன தத்ததா னத்தனன

தந்தத் தந்தனத் தான தாந்தன
தந்தத் தந்தனத் தான தாந்தன
தத்தன தத்தன தத்தன தத்தன
தத்தன தத்தன தத்தன தத்தன
தானதன தந்ததன தானதன தந்ததன
தானதன தந்ததன தானதன தந்ததன
தனதன தனந்தனந் தந்தான தத்ததன
தனதன தனந்தனந் தந்தான தத்ததன
தனதனன தானதன தத்தனன தத்தனன
தனதனன தானதன தத்தனன தத்தனன
தனதன தத்த தனத்தன தத்த தானன
தனதன தத்த தனத்தன தத்த தானன
தானற தான தறதன தந்தன
தானற தான தறதன தந்தன

அருணை கணபண புயக சடிலைகயி
னகில புவனமு முதவு மலைமகள்
அமலை யாரியை யந்தரி சுந்தரி
யிமய மாமயி லம்பைத்ரி யம்பகி
அச்சுதச கோதரிய னைத்துவே தத்தலைவி
யற்புதபு ராதனிவ ரப்ரகா சப்ரக்ருதி
அம்பொற் குண்டலப் பேதை சாம்பவி
விம்பக் கிஞ்சுகப் பூவை பூங்கொடி
அக்ஷர லக்ஷஜ பத்தர்க்ர மத்திடு
சக்ரத லத்தித்ரி யக்ஷிச டக்ஷரி
ஆயிதிரு மைந்தன்முக மாயிரம்வி ளங்கியதொ
ராறுதர வந்தருளு மாறுமுக புண்டரிகன்

அருவரை திறந்துளன் சங்க்ராம கற்கிமுகி
படைபட வஞ்சலென் றங்கீர னுக்குதவி
அரசறிய வாடனமு னிக்கொருத மிழ்க்ரயமு
மபரிக்ர மாகவிவ ரித்தகட வுட்புலவன்
அநுபவ அதுத பக்கட வெற்பு காமதனை
வினைவிடெ ரிக்க நல்லைவைத்தக ழற்க்ரு பாசரன்
ஆசிலாசார தபோதன ரின்புறம்
வாசகாதிக மனோலய பஞ்சரன்
அகரு ம்ருகமத களப பரிமள
விகட முகபட கடின புளகித
அமிர்த பூதரி யண்டர்செ ழுங்கொடி
குமுத வாய்மயில் குஞ்சரி மஞ்சரி
அக்கமொரு கோடிபெறு வத்ரபா ணிக்குமரி
தக்கவம ராவதிபு ரக்குமா னைக்கிறைவன்
ஐயப்பத் தொன்றிலெட் டாறின் மூன்றினி
லைந்திற் றங்குமப் பாலை வான்பொருள்
அப்படி பத்திப முத்தம னத்தின
ரர்ச்சனை மெச்சிய செச்சை மணிப்புயன்
ஆறுநிலை யென்னுமுத லாகியப ரங்கிரியு
மாவின னெடுங்குடியு மாரண முடிந்திடமும்
அருணையு மிலஞ்சியுஞ் செந்தூர்தி ருப்பழனி
யுடியர்மன பங்கயஞ் செங்கோடி டைக்கழியும்
அனவரத நிலமலர் முத்தெறிசு னைப்புனலி [மெனும்
லருவிகுதி பாய்தருசெ ருத்தணியென் வெற்பு
அலகில்தி ருப்பதி யிற்பயில் கற்ப காடவி
யனுபவ னத்தனி ருத்தன ரத்த வாடையன்

ஆறுமா மாதர் பயோதர பந்தியி
லாரவே பாலமு தாருநெ டுந்தகை (வ)
வருண சரவண மடுவில் வருமொரு
மதலை மறைகமழ் குதலை மொழியினன்
மதுக ராரவ மந்திர சிந்துர
மணம ருந்தக டம்புபு னைந்தவன்
மட்டொழுகு சாரமது ரித்ததே னைப்பருக
மர்க்கடச மூகமமை தொட்டுற லெட்டுவரை
மன்றற் றைப்புனைத் தாள்ப தாம்புயம்
வந்திக் குந்தனிக் காம வாஞ்சையன்
மத்தமு டித்தரு ளத்தர்ப்ரி யப்பட
நித்தம றைப்பொரு ளைத்தெளி வித்தவன்
மாதிரமு மந்தரமு நீருநில னுங்கனக
மால்வரையு டன்சூழல வாகவிவி டம்பொழிய
மகரச லிலங்கடைந் திந்த்ராதி யர்க்கமுது
பகிர்தரு முகுந்தன்மன் பஞ்சாயு தக்கடவுள்
மருகன்மற வாதவர்நி னைப்பவைமு டிக்குமவ
னுருகுமடி யாரிருவி னைத்தொகைய றுக்குமவன்
மறவர்பொ ருப்பிலொ ருத்திபொ ருட்ட நாளிள
வடிவமு மூக்க நரைத்தவி ருத்த வேதியன்
மாதரா ரூப னிராகுல சிந்தைய
னாதிகூ தாள மதாணிய லங்க்ருதன்
வரத விதரண விரத வனுபவ
மவுன குருபர னிபுண குணதரன்
வனஜ ஜாதனை யன்றுமு னிந்தற
வலிய பாரவி லங்கிடு புங்கவன்

மட்டிலிரு நாலுதிசை நட்டுநே மிக்கிரியு
முத்தரகு ணதிகுட தக்ஷிண திக்கிரியும்
மங்கத் துங்கவிட் டேறு வாங்கிய
செங்கைப் பங்கயச் சோதி காங்கெயன்
மத்தமலத்ரய மித்தைதவிர்த்தருள்
சுத்தபவித்ரசி வர்த்தியளிப்பவன்
வாரணமுகன்றனது தாதைபைவலஞ்சுழல் [ரன்
வாகைமயில் கொண்டுலகு சூழ்நொடிவருங்கும
மயமுறு ப்ரபஞ்சமுஞ் சங்கேதசட்சமய
வழியுமனமுங்கடந் தெங்கேனு நிற்குமவன்
மதுரமொழி யாலுலக னைத்தையுமுணர்த்துமவன்
வடவனல நேர்கொடிய குக்குடமுயர்த்தகுகன்
மரகத பக்ஷகுலத்துர கத்தி வாகரர்
வடிவையுருக்கி வடித்ததி ருக்கை வேல்கொடு
வாரிகோ கோவென வாய்விட வந்தெதிர்
சூரமா சேனையை மோதுக ளந்தனில் (௨)
உருவ மிருளெழ வெயிறு நிலவெழ
வுலகு வெருவர வசைய வருவன
உடைய நாயகி கண்டும கிழ்ந்திட
நடைவி னோதவி தம்புரி பந்திய
ஒக்கலைவி டாதழுத ரற்றுபா லர்க்குமிக
வுச்சிவெடி யாதுமிணை மெத்தபே தப்புவன
உங்குக் கிங்குவிட் டாழி நான்கினு
மொன்றுக் கொன்றடி பாய்தல் காண்பன
யுத்தக ளத்தினில் ரத்நம ணிக்குவை
யொட்டமொ டொற்றையி ரட்டைபி டிப்பன

யோகினிக ளும்பெரிய சாகினிக ளும்புதிய
மோகினிக ளும்பழைய டாகினிக ளும்புகழ
உவணநிரை கொண்டிடுஞ் செங்காவ ணத்திடையி
லுறவுகொள வந்துதம் பெண்காறை கட்டுவன
உமிழ்குருதி யாறடைய டக்குறட டுக்கியதி
லுபவனமொ ரேழையுமு றித்தருகொ ழுக்குவன
உடுபட லத்தை மறைத்தகு றைக்கு வாலுட
லுதிரச முத்திர முற்று நிலைப்ப டாதன
ஓடைமால் வார ணயூகம டங்கலு
மோரோர்பேய் நீள்க டைவாயில டங்குவ
உடலி னிசிசரர் மவுலி யொலியலு
முதடு மலைவன பதடி முலையின
உததி பேருழம டங்கவு றிஞ்சியு
முதர வாரழ னின்றுகொ ளுந்துவ
உக்கிரவி ராவணனெ டுத்தமே ருக்கிரியு
மொற்றியிரு தோள்கொடுப றித்திடா தப்புவன
ஒன்றித் திண்குரற் கூகை பாம்பொடு
வென்றிச் செந்தலைத் தாலி பூண்பன
ஒக்கமி டற்றிலி றக்குகு றைத்தலை
விக்கிவெ ளுக்கவெ ளுக்கவி ழிப்பன
யோகுபுரி யுங்குகையும் யோகபர ரும்பொருவ
வோடைமத தந்திவயி றாடினிது றங்குவன
உசிதபி சிதங்கொணர்ந் திங்கேற விற்றுமென
மதமலையெ லும்புகொண் டங்காடி கட்டுவன
உதிரநிண வாள்பெருக வொட்டுவன வெட்டுவன
வுடலினடு வூடுருவ முட்டுவன தட்டுவன

ஒழுகுபி ணத்து நிணத்தின ளற்றி லேபழு
வொடியவு ழுக்கில் வழுக்கிப் புரட்டி வீழ்வன
ஊசலார் வார்கு ழையோலையி டும்படி
யோநுசா டீக ரகேடப்பி நிஞ்துவ
கரண மிடுவன குணலை யிடுவன
கழைபை நடிவன பவுரி வருவன
ககன கூடமு டைந்துவி ழும்படி
கதறி வாயனல் கண்கனல் சிந்துவ
கைச்சதியி ழுமுறைவி த்தவா முற்கடித
சச்சபுட சாசபுட சட்பிதா புத்திரிக
கண்டச் சம்பதிப் பேத மாம்பல
கஞ்சப் பஞ்சகத் தாள மாம்படி
கற்சரி யுற்சவ தர்ப்பண லக்ஷண
சச்சரி மட்டிகை யொற்றிய றுப்பன
காயெரிய பங்கியொடு சேகரமி குந்தசைவ
காதுபடு சங்கவள மாலிகைபு னைந்திசைவ
கருணைய திகந்துவந் தொண்கோகு லப்பெரிய
கருமுடியொ டும்படுங் கங்காள மோதுவன
கடிபயிர வாதிகள்ப்ரி யப்படுக திக்கிசைய
நடைநவிலு பாவனை யுதிக்குநட வித்தையின
கடகம டுத்த விடக்கைவ லக்கை வாளின
கருதிய லக்ஷி யலக்ஷண முற்று மோதுவ
காலமா ருத வராளிசி கண்டிகை
பாலசீ காம ரமானவி பஞ்சிகை
கவுட பயிரவி லளிதை கயிசிகை
கவுளி மலகரி பவுளி யிசைவன

கனவ ராடிய ரும்பட மஞ்சரி
தனக னைசிவி தம்பதி பஞ்சமி
கைச்சுலவு கோன்முறைவி தித்தரா கத்தலைவி
துச்சமது சாதிகமே டுத்ததுமே லெட்டுவன
கஞ்சக் கஞ்சநந் றேசி ராஞ்சிகு
றிஞ்சிப் பண்குறித் தியாழையேந்துவ
கற்றவு டுக்கையி டக்கைக ளபபறை
மத்தளி கொட்டிய முற்றுமட டிப்பன
காரெனமு ழங்குகுர லேறுதும சந்த்ரவளை
விரமுர சந்திமிற டாரிகுட பஞ்சமுகி
கரடிப றையங்கனக் தங்கோடி கொட்டுவன
முறைமுறை கவந்தநின் றொன்றோடு கிட்டுவன
கசரதப தாகினிய ரக்கர் துணி பட்டுவிழு
களமுழுதும் வாழியதி ருப்புகழ்மு ழக்குவன
கடியகு ணத்த சினத்தச கத்ர யோசனை
நெடியக முத்த சுழித்தவி ழித்த பார்வைய
காதநா ரூயி ரகோடிவ ளைந்தன
பூதவே தாள மநேகவி தங்களே. (க)

---

## எ. பொருகளத்தலகைவகுப்பு

தனத்த தனதன தனத்த தனதன
தனத்த தனதன தனத்த தனதன
அதிர்த்த பரிபுர பதத்தி பயிரவி
யமைத்த கரதலி ப்ரியத்தை யுடையன

அடித்த தமருக கரத்தர் பயிரவர்
　　நடித்த நவரச நடத்தை யறிவன
அருக்கர் பதமல வுடுக்கள் பதமள
　　வடுக்கு பிணமொரு குறட்டி லடைசுவ
அளக்க ருடைபட மிகுத்த குருதியை
　　யடைத்து மடைபட வுடைத்து விடுவன
அரக்கர் முடிகளை யடிப்ப வகிர்வன
　　வயிற்றி னுலையென விரத்தம் விடுவன
அடுக்க லெனுமவ ரெயிற்றை யவர்கர
　　வசுப்பை யவைகொடு புகட்டி யடுவன
அமிழ்த்தி யடிவிழ பிணத்தி னிணவெளி
　　றளற்றி னிடையடி வழுக்கி விழுவன
அடப்பை யிடவரு மனுக்க ருடன்வரு
　　தடக்கை மதமலை நடத்தி வருவன
குதித்து மகிழ்வொடு மிதித்து நடமிடு
　　குறட்கு மிகுதசை கொடுத்து வருவன (௮)
கொழுத்த குரசத விறைச்சி வகைவகை
　　குவித்து முறைமுறை யவித்து நுகர்வன
குருத்து மலரினும் வெளுத்த நிணமது
　　கொளுத்தி யனலதில் வெதுப்பி யிடுவன
குதட்டி நெடியன வுதட்டி விடுதசை
　　கொடிக்கு முதுசின நரிக்கு முமிழ்வன
குணக்கு வளைகடல் வடக்கி யமதிசை
　　குடக்கு முழுவது மடக்கு வயிறின

குரக்கு மிடறின கரத்தி லெழுகிரி
துலுக்கி யடியொடு பறித்து நிமிர்வன
குதித்து முழுகியு மிரத்த நதியிடை
குடித்து முணர்வொடு களித்து வருவன
குறத்தி யிறைவனை நினைத்து மவரடி
குறித்து வழிபடு குணத்தை யுடையன (௭)
துதிக்கை மலைகளை யடுக்கி யசைசக
நிதிக்க வலைமிசை யிருக்கு மரபின
துளக்க முறுசுடர் விளக்கை யனையன
சுழித்து வெருவுற விழித்த விழியின
துதித்து வழிபட நடத்தல் குறையன
சகித்து வெளிபட நகைத்து வருவன
துணித்த கரியுட றிணித்த மிடறிடை
துவக்கி யவசமொ டுயிர்க்கி நிமிர்வன
தொலைத்த முடிநிரை பரப்பி வயிரவர்
சுழற்றி நடமிடு துருத்தி யிடுவன
துணுக்க முளவவர் அணுக்க மிலையென
வெடுத்த கழிநொடி படித்து வருவன
சுரர்க்கு மகபதி தனக்கு மினியொரு
துளக்க மிலையென மகிழ்ச்சி புகல்வன
தொகுக்கு தொகுதொகு தொகுக்கு தொகுதொகு
தொகுக்கு தொகுவென நடித்து வருவன (௮)
எதிர்த்து மலைவன முடித்து வெளிமுக
டிடித்து விழுமிடி யிடித்த குரலின

இரட்டை யிளமதி யுதித்த தெனவெயி
றெயிற்றி னிலையெழ நெருட்டி வடிவின
இயக்க முறுபல நகத்தி குருதிக
ளிருக்கி பணிதரு பெருத்த குழையின
இடக்கை குடமுழ வுடுக்கை துடிபறை
யெடுத்து முகிலென முழக்கி வருவன
இதத்த கபிசிக மிளித்த பயிரவி
யெழுப்பி யெழுவகை நிருத்த மிடுவன
இறப்பும் வருமெழு பிறப்பு மறவினி
திருத்து மெனமயில் விருத்த மொழிவன
இடைக்க ழியிலொரு செருத்த ணிபிலினி
திருக்கு மறுமுக நெருக்க னிளையவன்
இளைத்து நிசிசரர் பதைத்து மடியவெ
ரிமைப்பி லமர்பொரு களத்தி னலகையே. (க)

---

## அ. செருக்களத்தலகைவகுப்பு

தனனத் தனனத் தனனத் தனனத்
தனனத் தனனத் தனத்த தனதன

குதிரைத் திரள்பட் டபிணத் தையெடுத்
துதிரப் புனலிற் குளிக்கு மொருதிரள்

குருதிக் கடலைப் பெருகப் பருகிக்
குணலைத் திறனிற் களிக்கு மொருதிரள்
கொடுகொட் டிபடத் துடிகொட் டிநடத்
தடமிட் டுவளைத் திருக்கு மொருதிரள்
குடரைப் பயமிட் டுடலைச் சிறுகக்
குலையிட் டதிரச் சிரிக்கு மொருதிரள் (வ)
சதையைச் சிலகைக் கொளமற் றதனைச்
சருவிச் சருவிப் பறிக்கு மொருதிரள்
தறுகட் சிறுகட் டவளக் கவளத்
தமரத் திமிரப் பனைக்கை மதமலை
தலையுக் குளநற் றருணக் கிரணத்
தாளத் திரளைக் குவித்த டியெனுரல்
தனிலிட் டதனைத் தகுசைத் தலமுற்
றிடுநெட் டைமருப் புலக்கை முறைமுறை (௯)
எதிரிட் டதுகுத் திமுடித் தலையொப்
பவடுப் பெனவைத் தெலும்பு விறகினை
எரியிட் டெரியிட் டுருவத் துடனெட்
டுலைவைத் துணைவைச் சமைக்கு மொருதிரள்
இருள்செற் றதடித் தினையொத் திடுகட்
கமெடுத் தெறியத் தெறித்த தலைகளை
இதெனக் கதுனக் கதுமற் றதனுக்
கெனமொய்த் தலவிப் பொறுக்கு மொருதிரள்
அதரத் துவிரற் படவைத் துமிகுத்
தரவத் தொடுகொக் கரிக்கு மொருதிரள்

அழுதொத் தகிணைத் தசைமுக் கியறத்
தவசத் தயிலிற் கிடக்கு மொருதிரள்
அடவிப் புனமுற் றகுறத் திருவுக்
கமைவுற் றமணிப் புயத்த னறுமுகன்
அடன்மிக் கதயித் தியர்பட் டுவிழப்
பொருதிட் டசெருக் களத்தி லலகையே. (க)

---

## ௯. போர்க்களத்தலகைவகுப்பு

தனதன தந்தன தனதன தந்தன
தத்தா தத்தன தனதன தனந்ததாத்
தனத்த தனதன

பகலிர வின்றியொர் புகறிசை நந்திய
பற்பா ஷாத்தகை படமுதல் விசும்புதூர்த்
தடுக்கு பிணமலை

பவுரிவ ரும்பரி புரநரல் பங்கய
வித்தா ரத்தன பயிரவி பதங்கள்வாழ்த்
தெடுத்த பசியன

பரியவொ ழுந்தசை பயிரவ ரென்றுப
லிக்கா திற்பவர் பகரிட மறிந்துபாத்
திரத்தி லிடுவன

பாவிவ ருங்குறள் பசிதணி யும்படி
பட்டார் கைப்படு பரிசையின் முகந்துகு
டிறைச்சி சொரிவன

படுகள மென்பதொர் செறுவில் விளைந்தன
பற்கோ வைப்பயில் பவுரிவி சைகொண்டுதீட்
டிமெத்த வடுவன

பரியணி திண்பணை முடியம டிந்துடல்
பப்பா தித்துணி படவிழு பெருங்கைமாக்
கருக்கல் பகிர்வன

படைவிச யந்தெரி சலதிவ லம்புரி
பற்றார் பட்டுள பலபல விதங்களார்ப்
பெடுக்கு முதடின

பகடுபி ளந்தத னுரிவைபு னைந்திடு
குப்பா யத்தன பதவிய ரிணஞ்செயூட
டுடுத்த வுடையின (வ)

உகமுடி வன்றினும் வெருவவ ரும்பல
வுற்பா தத்தன வொளிமதி வகிர்ந்தகீற்
றெயிற்று நிலவின

உருவமி ருண்டன திகிரிவி லங்கலி
னுட்பாய் கிற்பன வுலவிரி ணமொண்டுகூட்
டமைத்து நுகர்வன

உததியு றுஞ்சுவ வடவைநெ டுங்கன
லூடகா கப்பெரு குதிரபி சிதங்கள்பேர்த்
திறக்கி யிடுவன

உருமுமி டைந்தென வதிர்குர லின்றமி
லொப்பே றிட்டுதி ருதர்மவு லிகொண்டுகோட்
டையிட்டு மலைவன

உலகுகு லுங்கிட வரியது ணங்கையி
னைச்சா திப்பன வுவணப டலங்கள்காக்
கைசுற்றி .வருவன

உலைதரு மென்குட ரிடைபட விந்திர
னுத்தியா னத்தல ருகிர்கொடு புனைந்தகூட்
டுமுற்றி மலைவன

உயரிய முங்குர கதகுல முங்கன
பொற்றேர் வர்க்கமு முடைபடு கலங்கள்போற்
சுழித்து விரைபட

ஒழுகுதி ரந்தனின் முழுகியெ ழுந்தன
வச்சா டத்துட னுடைகட லதிர்ந்துகூப்
பிளக்கு நடையின (௨)

செகதல மெங்கணு மதிரமு ழங்கிய
டிப்பாய் வெற்றிய திரள்வரை பிடுங்கிநாட்
டியொட்டு குழையின

சினமலி வெங்குற ளினமொடு திண்டிறன்
மற்போர் கற்பன திசையள வுநின்றுநீட்
டிவைக்கு மடியின

திசைகளொ டாம்பல குறைகளெ ழுந்தது
டித்தா டச்சிறை செறிகழு கரங்கில்வீற்
றிருக்கு மரசின

திமிரபி லங்கிழி படவிஸாச கொண்டுரு
தித்தா லிப்பன அசரவ டகுன்றினாற்
றிரட்டி நெடியன

சிறியன கிங்கிணி யணிகுரு வின்சர
ணத்யா னத்தின வகண்டசீர்த்
திமெச்சி யிரைவன

திமிலைபெ ரும்பறை சிறுபறை நின்றதி
ரச்சே வித்துயர் சயமகள் விளக்குவேற்
கரத்தை மொழிவன

திரிகட தொங்கிட திரிகட திங்கிட
தித்தீ செக்கண செகககண மொழிந்துகூத்
தனைத்து நவில்வன

சிலைமலி திண்புய வசுரர்சி ரங்களா
டப்பா வைத்தவர் செறிகுடர் நிணங்கள்காய்ச்
சிமிக்க வயில்வன (௬)

நிகரில றம்புரி குருகுல பஞ்சவர்
மெய்த்தூ துக்கொரு நிமிடம திலன்றுபோய்க்
கவித்த மணிமுடி

நிருபர்ப யங்கொள நெறுநெறெ னும்படி
பொற்பீ டத்திடை நிலைபெற விருந்துநூற்
றுவர்க்கு மவரறி

நினைவுற வன்புறு மொருபதி னெண்குண
வக்கோ ணிப்படை நிகிலமு மடிந்துகூ,
றுவர்க்கு நிறைவுற

நிலமகள் வன்பொறை கடியுமு குந்தன்மு
　　தற்சேண் முட்டவு நெறிபட நிமிர்ந்தவாக்
　　கையற்கு மருமகன்

நிமலைத்ரி யம்பகி கவுரி திகம்பரி
　　நிர்ப்பா வக்குண நிபுணி யிரங்குதாய்ப்
　　ப்ரியத்த னறுமுகன்

நிகரக னங்குல சிகரிதொ டும்பெரு
　　வெற்பா ருற்பல சுனையருவி கொஞ்சவோச்
　　சியத்தி லொளிர்சுனை

நியதிய னன்கலர் தணிகையெ னும்பதி
　　நிற்பான் முற்பட நெடுமக ரசிந்துதீப்
　　பறக்க வெகுவித

நிபுடது ரங்கக சவிரத சங்க்ரம
　　நிட்டூ ரக்கொலை நிருதரைமு னிந்தபோர்க்
　　களத்தி லலகையே. (க)

---

## ௰. திருஞானவேழவகுப்பு

தனன தத்தன தனன தத்தன
　　தனன தத்தன தான தானன

சடலை பட்டலை யுடலெ னப்படு
　　தருமசித்திர கூடமா னவை

தவிர தட்சள வெளியி னிற்பன
சமய தர்க்கவி ரோத வாதிகள்
கரத வெற்றுவ புகர்ட தக்கிரி
தளைய றுக்குவ வாசை யாணவ
தளையி பற்கையை விடாந டிப்பன
சனன முற்றிய சாத மாமெழு (எ)
கடல்க டப்பன பரிகொ லைச்சமர்
கடக மப்படி சாய யோதுவ
கருவி னைத்தரு மிருவி னைத்தொடர்
கழல்ப தத்தன யோக சாதகர்
களைப றிப்பன கிளையெ னப்படு
கவலை சுற்றிய காடு சாடுவ
கருணை மெய்த்தவ திருவ ருட்பன
கவள மொக்குவ காம ராசனை (அ)
அடல்கெ டுப்பன வகில கற்பனை
யரணை ழிப்பன கோப மானவை
அவிய நற்பொறை யெனுந திப்பிர
ளயமி றைப்பன லோப மோகிதம்
அவைமு றிப்பன மதமு ழுத்தறி
யடிப றிப்பன ராச தாகியின்
அதிரு ணத்ரய மதிலி டிப்பன
வளவி றத்துவ தூளி வீசுவ (கூ)
இடமு டைச்சிறை மயிலு கைத்தெழு
சிகரி குத்திய வேலை நீள்சுனை

திமு முற்பத மலர்தி ருத்தணி
　　யிறைதி ருப்புகழ் பாடு நாவலர்
திரள்ப்ரி யப்பட வினித விப்பன
　　செயலொ ழித்தரு பூதி மீமிசை
திகழு மற்புத மவுன கிர்க்குண
　　சிவம யத்திரு ஞான வேழமே. (க)

---

## கக. திருக்கையில்வழக்கவகுப்பு

தனத்தன தனத்தன தனத்தன தனத்தன
　　தனத்தன தனத்தன தனத்தன தனத்தன

தருக்குவ செருக்களம் வெருக்கொள வதிர்ப்பன
　　தடக்கர கிமிர்த்துய ருடுக்குல முதிர்ப்பன
தடித்தெழு குலைப்புவி நடுக்குற வதிர்ப்பன
　　தழைச்செவி படைப்பன திரட்கயி லையொப்பன
சதுர்த்தச தலத்தையு மெடுத்தக டவுட்பணி
　　சகச்ரப ணபத்தியு மொடுக்குற நடப்பன
சமுத்ரம தனத்தில முகத்துட னுதிப்பன
　　தரத்தன தலைச்சுர நதிப்புனல் குளிப்பன (வ)
அருக்கர்ப தமுட்பட மிதித்திடு பதத்தன
　　வறப்படு கொலைத்தொழில் புறப்படு முகத்தன

அரக்கர்ப டைகெட்டுமு றியப்பொரு பதத்தன
  வயற்கும மரர்க்குமொ ருபொற்பதி யளிப்பன
அளித்தவ முதுக்கவ ளமொக்குவ னமுத்தெறி
  யலைக்கடல் கலக்குவ குலக்கிரி குலுக்குவ
அடித்தெழு பொருப்பினை நெருப்பெழ விழிப்பன
  வதிக்ரம கமப்ரவு டவிக்ரம மதத்தன (௨)

மருக்குல வுகற்பக வனத்தலர் பறிப்பன
  வளைத்தெழு தருக்களை மொளுக்கென முறிப்பன
மதிப்பிள வெனச்செரு கிவைத்தென மணிச்சதுர்
  மருப்பின விமைப்பற விழித்தந யனத்தன
வளைத்தகி ரியைப்பொடி படுத்தியி பமெட்டையு
  மலைத்தவ ணடிப்பட மடப்பிடி யணைப்பன
மழைப்புயல் கிழிப்பன புனற்பசி தணிப்பன
  மணிக்கண கனப்பண மதத்ரயம் விதிர்ப்பன (௩)

திருத்திய புனத்திடை வனத்தழை யுடுத்தினி
  திருப்பவள் விருப்புறு வரைப்புயன் வினைப்பகை
செகுப்பவ னினைத்தவை முடித்தருள் க்ருபைக்கடல்
  சிவத்தக மலச்சர வணத்தறு முகப்பொருள்
செகத்ரய முகிழ்த்தவு தரத்திரி புரைக்கொரு
  திருப்புதல் வனுற்பல கிரிப்பெயர் தரித்தருள்
திருத்தணி மலைக்கிறை திருப்புகழ் படிப்பவர்
  சிறப்பொடு பெறத்தரு திருக்கையில் வழக்கமே.(௧)

---

## கஉ. வேடிச்சிகாவலன்வகுப்பு

தனதனன தத்தனன தனதனன தத்தனன
  தனதனன தத்தனன தானத் தனதனன

உதரகம லத்தினிடை முதியபுவ னத்ரயமு
  முசமுடிவில் வைக்குமுமை யாள்பெற் றபாலகனும்
உமிழ்திரைப ரப்பிவரு வெகுமுகக ருப்பமுய
  வுதகமகள் பக்கல்வரு சோதிச் சடானனனும்
உவகையொடு கிர்த்திகைய ரறுவருமெ டுக்கவவ
  ரொருவரொரு வர்க்கவனு ரோர்புத் ரனவனும்
உதயரவி வர்க்கநிகர் வனகிரண வித்தவித
  முடையசத பத்ரநவ பீடத் துவாழ்பவனும்
உறைசரவ ணக்கடவுண் மடுவிலடர் வஜ்ரதர
  னுடையமத வெற்புலைய வேதித் தவீரியனும்
உரைபெறவ குத்தருணை நகரினொரு பத்தனிடு
  மொளிவளர்தி ருப்புகழ்ம தாணிக் ருபாகரனும்
உரககண சித்தகண கருடகண யக்ஷகண
  முபநிடமு ரைத்தபடி பூசிக்கும் வானவனும்
ஒருவனும கிழ்ச்சிதரு குருபரனு முத்தமனு
  முபயமுறு மக்நிகர மீதிற் ப்ரபாகரனும் (௮)
அதிமதுர சித்ரகவி நிருபனும கத்தியனு
  மடிதொழுத மிழ்த்ரயவி னோதக் கலாதரனும்
அவரைபொரி யெட்பயறு துவரையவல் சர்க்கரையொ
  டமுதுசெயும் விக்நபதி யானைச் சகோதரனும்

அவுணர்படை கெட்டுமுது மகரசல வட்டமுட
னபயமிட விற்படைகொ டாயத் தமானவனும்
அருணையிலெ டைக்கழியி னூரககிரி யிற்புவியி
லழகியசெ ருத்தணியில் வாழ்கற் பகாடவியில்
அறிவுமறி தத்துவமு மபரிமித வித்தைகளு [னும்
மறியெனவி மைப்பொழுதின் வாழ்வித் தவேதிய
அரிபிரம ருக்குமுத லரியபர மற்குமரு
மருமறைமு டிப்பையுப தேசித் ததேசிகனும்
அமலனுமெ னக்கரச மதிநுண னுமிர்க்குண னு
மகிலபுவ னத்தமர சேனைத் துநாயகனும்
அனுபவனு மற்புதனு மனுகுண னு மக்ஷரனு
மருமனமொ ழிக்குமனு பூதிச் சகோதயனும் (௬)
இதமகிதம் விட்டுருகி யிரவுபக லற்றவிட
மெனதறவி ருக்கைபுரி யோகப் புராதனனும்
ஏனதுமன சிற்பரம சுகமவுன கட்கமதை
யமன்முடிது ணிக்கவிதி யாவைத் தபூபதியும்
எழுமையுமெ னைத்தனது கழல்பரவு பத்தனென
வினிதுகவி யப்படிப்ர சாதித் தபாவலனும்
இமையவர்மு டித்தொகையும் வனசரர்பொ ருப்பு
திதயமும ணக்குமிரு பாதச் சரோருகனும்[மென
எழுதரிய கற்பதரு நிழலில்வளர் தத்தைதழு
வியகடக வஜ்ரவதி பாரப் புயாசலனும்
எதிரில்புல வர்க்குதவு வெளிமுகடு முட்டவள
ரிவுளிமுகி யைப்பொருத ராவுத் தனெனவனும்

எழுபரி ரதத்திரவி யெழுகிலவொ டக்கரிக
ளிடர்படமு ழக்கியெழு சேவற் பதாகையனும்
இணையிலியு நிர்ப்பயனு மலமிலியு நிஷ்களனு
மிளையவனும் விப்ரகுல யாகச் சபாபதியும் (௬)
மதுகையொடு சக்ரகிரி மூதண்ட கோளகையை
வளையவரும் விக்ரமக லாபச் சிகாவலனும்
வலியகண நாதரொடு மறுகுசிறை பட்டொழிய
வனசமுனி யைச்சிறிது கோபித்த காவலனும்
வருசுரர்ம திக்கவொரு குருகுபெயர் பெற்றகன
வடசிகரி பட்டுருவ வேலைத் தொட்டசேவகனும்
வரதனுமனுக்ரகனு நிருதர்குல நிஷ்டுரனு
மநுபவன சித்தனுமனோதுக் கபேதனனும்
வயிரிசைமு ழக்கமிகு மழைதவழ்கு றிச்சிதொறு
மகிழ்குரவை யிட்டிரியும் வேடிக் கைவேடுவனும்
மரகதம ணிப்பணியி னணிதழையு டுத்துலவும்
வனசரர்கொ டிச்சிதனை யாசிக் கும்யாசகனும்
மதனன்விடு புட்பசர படலமுட லத்தனையு
மடலெழுதி நிற்குமதி மோகத் தபோதனனும்
வரிசிலைம லைக்குறவர் பரவியபு னத்திதணின்
மயிலெனவி ருக்குமொரு வேடிச் சிகாவலனே. (௭)

## கரு. சேவகன் வகுப்பு

தனதன தனன தனதன தனன
　　தனதன தனன தனத்தா தனனா

இருபிறை யெயிறு நிலவெழ வுடல
　　மிருள்படு கருப முடைக்கோ விடவே
இறுகிய கயிறு படவினை முடுகி
　　யெமபடர் பிடரி பிடித்தே கொடுபோய் (வ)
அருமறை முறையின் முறைமுறை கருதி
　　யதரிடை வெருவ வொறுத்தால் வகையால்
அறிவொடு மதுர மொழியது குழறி
　　யலமரு பொழுதி லழைத்தால் வருவாய் (உ)
ஒருபது சிரமு மிருபது கரமும்
　　விழவொரு பகழி தொடுத்தோன் மருகா
உரமது பெரிய திரிபுர மெரிய
　　வுயர்கன கிரியை வளைத்தோர் புதல்வா (ஙு)
மருவள ரடவி வனிதையர் பரவ
　　மரகத விதணி லிருப்பாள் கணவா
வளைகடல் கதற நிசிசரர் மடிய
　　மலையொடு பொருத முழுச்சே வகனே. (க)

## கசு. வேல்வாங்கு வகுப்பு

தனதன தந்தன தனதன தந்தன
தந்தன தானந்தன தானந்தன

திடவிய நெஞ்சுடை யடியரி டும்பைகெ
டும்பட தியாங்குறை போயாழ்ந்தது
செயசெய வென்றிசை பரவிய வெங்கள்கொ
டுங்கலி தேசாந்தர மேசாய்ந்தது
செயதுரை நஞ்சுறழ் மயலுறு நெஞ்சினர்
வஞ்சகர் தீமான்கதர் தாமேங்கினர்
சிகரத ரங்கிக மகரநெ ருங்குபெ
ருங்கட றீமூண்டுதன் வாய்மாண்டது
தெரியலர் சென்றடை திசைகளி லெண்கரி
சிம்பெழ மாறுங்கிரி நூறுந்துளே
சிகரநெ டுங்கிரி குகைகடி றந்துதி
கந்தமும் லோகாந்தமு நீர்தேங்கின
சிறையுள ழுந்திய குகைகளொ ழிந்துசெ
யங்கொடு தேவேந்திரர் சேணுண்டனர் (எ)
திரிபுவ னங்களு மொருபய மின்றிவ
ளங்கெழு சீர்பூண்டற நேர்பூண்டன
விடவச னஞ்சில பறையும்வி ரிஞ்சன்வி
லங்கது கால்பூண்டுதன் மேறீர்ந்தனன்
விகசித சுந்தர விதரண வைந்தரு
வெந்தெழில் வீவான்பொழில் பூவாய்ந்தது

விழைவுத ரும்பத சசிதன்வி ளங்கிய
மங்கல நூல்வாங்குகி ளாள்வாழ்ந்தனள்
வெருவியொ துங்கிமை யவரெவ ருஞ்சிறை
வென்றித மேலாம்படி யேமீண்டனர்
விழியொரி ரண்டொரு பதுரத நின்றெரி
கண்டகன் மேல்வாங்கிளை கால்சாய்ந்தது
வெளிமுழு துந்திசை முழுதும்வி ழுங்கியெ
ழுங்கன சூர்மாண்டற வேர்மாய்ந்தது
விபுதர்ப யங்கெட நிருதர்த ளங்கெட
விண்கெடு மேடாம்படி பாடோங்கின
மிடைகுறள் வெங்கொடி கழுகுப ருந்துவி
ருந்தென வூணார்ந்தகல் வானார்ந்தன (௨)
அடவிப டுஞ்சடை மவுலியில் வெம்பணி
யம்பணி யாமாங்கதர் வாமாங்கனை
அனுபவை யம்பிகை யனுதினை யம்பைத்ரி
யம்பகி யாசாம்பரை பாசாங்குசை
அனைகைய சஞ்சலை யதிகுண சுந்தரி
யந்தரி காலாந்தகி மேலாந்திரு
அமலைய லங்கிர்தை யபிநய பங்குரை
சங்கினி மாணங்கணி ஞானங்குரை
அணிமுக பந்திகள் சிறுபொறி சிந்தவி
ளைந்தழல் வாய்கான்றிடு நாகாங்கதை
அபயவ ரம்புரி யுபயக ரந்திக
ழந்தணி யாமாங்கறி தாய்மாண்பினள்

அதலைச ருந்திரு மதலையி பங்கொள்ப
யங்கொடு பாய்மான் கலைவாய் மான்புனை
அணிகுற மின்புணர் தணிகையி லந்தண
னிந்திர ராசாங்கமு நாராய்ந்தவன்
வடவையி னிம்படு மணிமுடி பஞ்செழு (ஜ)
விஞ்சிய மாடம்புடை சாடாண்டகை
வசைகரு துர்த்துரு பதியொடு தம்பிய
ரும்படவே பாண்டவர் தேரூர்ந்தவன்
வளவில்வ ளர்ந்திடை மகளிர்க்கு விக்குத
டங்குடை வார்பூங் குகிக் வார்பூம்புயல்
வரைநிரை கன்றின முழுது மயங்கிப
பண்கெழு வேயேந்திய வாயான்கழல்
மருதிடை சென்றுயர் சகடுதை புந்தடர்
வெம்புளை வாய்கீண்டொரு பேய்காய்ந்தவன்
மதசயி லப்பொர வரவிடு நெஞ்சினில்
வஞ்சக மாமான்பகை கோமான்றிரு
மருகனி ரம்பிய மதிமுக மஞ்சரி
குஞ்சரி வாகாம்பரை தோய்காங்கெயன்
மகபதி தன்பதி பகைகிழி யும்படி
யன்றடல் வாளோக்கிய வேல்வாங்கவே. (க)

## கரு. புயவகுப்பு

தனதன தனன தனதன தனன
தனதன தான தான தனதன தத்தன
தந்த தந்த தந்த தானத் தனந்தன

வசைதவிர் ககன சரசிவ கரண
மகாவிர்த சீல சால வரமுனி சித்தரை
யஞ்ச லஞ்ச லென்று வாழ்வித் துநின்றன

மணிவட மழலை புடைமணி தபனி
யநாணழ காக நாடி வகைவகை கட்டும
ருங்கு டன்பொ ருந்து ரீதிக் கிசைந்தன

வருணித கிரண வருணித வெருத
ருணதப சோதி யாடை வடிவுபெ றப்புனை
திண்செ ழுங்கு றங்கின் மேல்வைத் தசைந்தன

வளைகட லுலகை வலம்வரு பவுரி
விநோதக லாப கோப மயில்வத னத்துவி
ளங்கு மங்கு சங்க டாவிச் சிறந்தன

வரைபக நிருதர் முடிபக மகர
மகோததி தீயின் வாயின மறுகவி திர்த்தயில்
வென்றி தங்கு துங்க வேலைப் புனைந்தன

மதியென வுதய ரவியென வளைப
டுதோல்வி சால நீல மலிபரி சைப்பகை
கொண்டு நின்று மூன்று சாதிக் கமுந்தின

மனகுண சலன மலினமி றரிய
வதீதசு கானு பூதி மவுனசி ரக்ஷர
மந்தி ரம்பொ ருந்தி மார்பிற் றிகழ்ந்தன

வகைவகை குழுமி மொகுமொகு மொகென
வநேகச மூக ராக மதுபம்வி ழச்சிறு
சண்ப கஞ்செ றிந்த தாரிற் பொலிந்தன (வ)

மிசைமிசை கருவி வெளிமுக டளவு
நிசாசர சேனை தேடி விததிபெ றச்சில
சங்க ணங்க றங்க மீதிற் சுழன்றன

வெருவுவ வெருவ வெரிசொரி விழியு
ளாபூதபி சாசு போத மிகுதொனி பற்றிமு
ழங்கு விஞ்சு கண்டை வாசிக் கைகொண்டன

விதமிகு பரத சுரவனி தையர்க
ணமேமெருறும் லீலை யாக விமலச லத்தினை
விண்டி றந்து மொண்டு வீசிப் பொலிந்தன

விதரண தருவின் மலரிடை செருகி
யகூதள நீப மாலை விபுதர்கு லக்குலி
சன்ப யந்த செங்கை யானைக் கிசைந்தன

விகசித தமர பரிபுர முளரி
தொழாவபி ராம வேடர் விமலைதி னைப்புன
மங்கை கொங்கை கண்டு வேளைப் புகுந்தன

விதிர்தரு சமர முறிகர கமல
நகாயுத கோழி வீற விதரண சித்ரவ
லங்கிர் தம்பு னைந்து பூரித் திலங்கின

விரகுடை யெனது மனதுட னகில்ப
னிநீர்புழு கோட ளாவி மிர்கமத கர்ப்பூர
குங்கு மங்க லந்து பூசித் துவைந்தன

விழைபுரி பவனி தொழுதழு துருகி
யகோதையர் தூது போக விடுமது பக்ஷண
வண்டி னந்தி ரண்டு சூழப் படிந்தன (௨)

இசைதனி லினிய கபிஜகை கவுட
வராளித ஞசி தேசி பயிரவி குச்சரி
பஞ்ச ரங்கெ ரிந்து வீணைக் கிசைந்தன

இறுதியி லுதய ரவிகண நிகரெ
னவாறிரு காது தோயு மிலகும ணிக்கன
விம்ப குண்ட லங்கண் மேவிப் புரண்டன

எதிர்படு நெடிய தருவடு பெரிய
கடாமுமிழ் நாக மேக மிடிபட மற்பொரு
திண்சி லம்ப டங்க மோதிப் பிடுங்கின

எழுதரு மழகு நிறமலி திறலி
சையாகவு தார தீர மெனவுரை பெற்றவ
டங்க லுஞ்சி றந்து சாலத் ததும்பின

இருள்பொரு கிரண விரணிய வடகு
லபாரிய மேரு சாதி யினமென வொத்துல
கங்க ளெங்க ணும்ப்ர காசித் துநின்றன

இயன்முனி பரவ வொருவிசை யருவ
ரையூடதி பார கோர விவுளிமு கத்தவள்
கொங்கை கொண்ட சண்ட மார்பைப் பிளந்தன

இபரத துரக நிசிசரர் கெடவொ
ருசூரனை மார்பு பீறி யவனுதி ரப்புனல்
செங்க ளந்து ளங்கி யாடிச் சிவந்தன

எவையெவை கருதி லவையவை தருகொ
டையான்மணி மேக ராசி சுரபிய வற்றொடு
சங்க கஞ்ச பஞ்ச சாலத்தை வென்றன (ஞ)

அசைவற நினையு மவர்பவ மகல
வெமேல்வரு கால தூத ரையுடையு மப்படி
யங்கு மிங்கு மெங்கு மோடத் துரந்தன

அகிலமு மெனது செயலல திலையெ
னயானென வீறு கூறி யறவுமி குத்தெழு
மைம்பு லன்றி யங்கி வீழத் திமிர்ந்தன

அணவெழு துவச முடுகுல முதிர
வியோமமு மேழு பாரு மசலமு மிக்கபி
லங்க ளுங்கு லுங்க வாலிக் கதிர்ந்தன

அடனெடு நிருதர் தளமது மடிய
வலாரிதன் வானை யாள வரசுகொ டுத்தப
யம்பு குந்த வண்ட ரூரைப் புரந்தன

அடவியில் விளவு தளவலர் துளவு
குராமகிழ் கோடல் பாட லளிமுரல் செச்சைய
லங்கல் செங்க டம்பு நேசித் தணிந்தன

அரியதொர் தமிழ்கொ டுரிமையொ டடிதொ
ழுதேகவி மாலை யாக வடிமைதொ டுத்திடு
புன்சொ லென்று நிந்தி யாமற் புனைந்தன

அழகிய குமர னுமைதிரு மதலை
பகீரதி மாதர் வாழு மறுவர் ப்ரியப்படு
கந்த னெந்தை யிந்த்ர நீலச் சிலம்பினன்

அனுபவ னனக னனனிய னமல
னமோகன னேக னேக னபினவ னித்திய
னஞ்ச லென்ப்ர சண்ட வாகைப் புயங்கனே. (க)

---

## கசு. சித்துவகுப்பு

தனன தந்த தான தனன தந்த தான
தனன தந்த தான தனன தந்த தான
தனன தனதான தானன தந்த
தனன தனதான தானன தந்த
தான தானன தனதன தந்தன
தான தானன தனதன தந்தன
தனன தானன தனதன தானன
தனன தானன தனதன தானன
தனன தனந்தன தந்தன தானன
தனன தனந்தன தந்தன தானன
தானன தனதன தானந் தந்தன
தானன தனதன தானந் தந்தன

தனதன தனதன தனன தத்தன
　　தனதன தனதன தனன தத்தன
தத்த தந்த தான தத்தானன
　　தத்த தந்த தான தத்தானன
தனன தத்தான தனதன தந்தன
　　தனன தத்தான தனதன தந்தன
தானதன தானன தாந்தன
　　தானதன தானன தாந்தன
தனத்தன தனத்தன தனத்தன தனத்தன
　　தனத்தன தனத்தன தனத்தன தனத்தன
தான தாத்தன தத்தன தத்தன
　　தான தாத்தன தத்தன தத்தன

அடல்புனைந்த வேலு மயிலு மென்றும் வாழி
　　யரியதொன்று கூற வந்திருந்து கேண்மின்
அளவில் பலகாய மோடாடி யண்ட
　　ரறிய விளையாட லாழிவி யொன்றில்
ஆசை வேறிலை யறுமுக வன்றிரு
　　வாணை மேருவை யடிதலை கண்டனம்
அகில லோகமு மடைவடை வேழுத
　　லருளினைமது சிவனறி யாதல
அமையு மெனும்படி நின்றமனைரத
　　மவைமு ழுதுந்தரு வப்பத ருதுகொள்
ஆதியு முடிவுமி லானந் தந்தரு
　　மாறிரு கரதல நாதன் றந்தவை

அவுஷத முளசில் கிலுகி லுப்பைக
ளரசிலை நருவிலி கரிய சுக்கரி
அத்தி செம்பி ராகை முட்காவளை
துத்தி சங்க மோரி தழ்த்தாமரை
அவுரி கற்றாழை யொடுவைகு நிஞ்சிலி
சிவிறி கத்தாரி பொடுதலை சண்பகம்
ஆரைதொடு வேலிவேல் காஞ்சிரம்
வீரையிரு வேலிபே ரீந்திலை
அமுக்கிணை யெருக்கிலை முருக்கிதழ் செருப்படை
யகத்தித மரத்தைதம தமத்தமொ டுபித்திகை
ஆல் மாத்திக டுக்கைகொ டுக்கழல்
கோலி தேட்கடை நெய்க்கொடை வக்கணை
அகில்ப ரம்பை காரை துடரி தும்பை சூரை
யலரி சம்பு நாவன் மருது சிந்து வாரம்
அறுகு தழுதாழை மாபாலை புன்கு
புரசு பழுபாகல் பூலாவ ழிஞ்சில்
ஆயி லாவிரை யிறலியி ரும்பிலி
யாடி யாவணி புடமிட வென்றழை
அவனி பாடல மனலம கீருக
மிவைச மூலமு மெழுபது சாலடை
அதிம துரந்தக ரஞ்சிறு பாலடை
பதிமுக வெந்திய மின்கய மோதகம்
ஆறிடை யபினரி தாரங் கந்தக
னூறிடை திரிபலை யோரொன் றெண்பலம்

அதிவிட யமுமொழி கிருமி சத்ருவு
மனன்முறு கறுமற முறுகு துத்தமும

அற்ப மொன்று கிரை வித்தேழிடை
யத்தி லொன்று பாதி தக்கோலமும்

அடவி கச்சோல நயினாக றும்பிசி
னரிசய வெட்பாலை யரிசிக நுங்கனி

ஆமலக மேலநான் மூன்றிடை
சேமசிலை கூடலோ காஞ்சனம்

அரப்பொடி கடிப்பகை விடத்திர ணமப்பிர
கசத்தைச கருப்பிவி தைகொத்திம லிதிப்பிலி

ஆலி கோட்ட மெலிப்பகை சச்சிலை
நீலி காய்ச்சு நிலப்பனை கற்பிசின் (வ)

படல்சி வந்த தாழை மணவ சம்பு நீலம்
வருகு ரும்பை கோட றுருக சம்பி ராணி

மரிசி வசவாசி காசீச மஞ்சண்
மகிழ விதைமேதை மாமேதை குன்றி

வாரி வாய்நுரை சயில சலம்புரி
பூரி வாதுமை சணவுபெ ருங்குமிழ்

வடுவில் சீரக பலமயி ரோசனை
கடுகு ரோகணி சிவிதைம னோசிலை

வகைவ கைகொண்டொரு மண்டல மோரொடு
குகையி னிலெண்பது செம்பினி லூறவை

வாதநல் வழிகள நேகம் பண்டையில்
வாகட மலகுரு நாதன் றந்தது

வழிபடு மரியர பிரம ருட்பட
மொழிகிற வகையிது சிறிது பெற்றிலர்
மற்று மிந்த்ர சால முச்சாடன
முற்று மிங்ங னேத ரத்தாழ்விலை
மதலை யர்க்கீது மொழிவது பண்பல
கதவி னிற்றுறை யிடுபய மொன்றிலை
வாலுமூவை யோரிகா ராம்பசு
வாலின்மயிர் கீரிதே வாங்கழை
மரித்தவர் சனித்தகு ழியுப்புறு சலத்தினை [வை
வடித்தினி தெடுத்தொரு குடத்தினி னிறைத்து
மாறி ருேத்திர வித்தைப லித்திடின்
மாடை சேர்க்கவ ருத்தமு னக்கிலை
மணம தின்று நாளை யெனமொ ழிந்து கேளு
மனைக ளெங்கு மோடி யினிவி ரைந்து தேடு
வளையல் குழைபீலி காலாழி தண்டை
மணிவ யிரவீடு மேலீடு செம்பொன்
வாளி பாடக மணிபிறை சங்கிலி
பாளை சூடக மயில மிலம்பகம்
மவுலி நூபுர மயிறிரு வாசிகை
Fவடி தோள்வளை முகவளை மேல்வளை
மரக தக்குண்டலம் வெண்டய மேகலை
யரசி லைகம்பிகு றங்குணி சாலகம்
வாரணி புடைமணி யாரங் கிங்கிணி
வாகுவ லயநெளி பீடங் கண்டிகை

மணிமக ரிகைவளை திகிரி பட்டிகை
பணிகளி லழகிய பணிகள் கொக்கிகள்
வட்ட வம்பொ னோலை முத்தாவளி
சுட்டி சந்து காறை கைக்காறைகள்
வடக முத்தோலை யரைவட முஞ்செறி
கடகம் வித்தார மகரநெ டுங்குழை
மாதரணி தாலிநூல் காஞ்சன
மாலிகை மதாணிபீ தாம்பரம்
மதிப்பரி யகைச்சரி சரப்பணி யிலைச்சினை
பதக்கமி வையுட்பட வணிப்பட லமிட்டுவை
மாடை பாட்டிபு னைத்தகு டப்பண
மோடு கூட்டியு ருக்கவி ருப்புடன் (௭)
இடுப்ர சங்கி யாம லுலைய னந்த கோடி
யெரியில் வெந்தி டாத கரிகி ரம்ப வேணும்
இதுப ழையகவுரி பாஷாண வுண்டை
யிடுச கலவேதி பூநாக செம்பின்
ஈய மானதொ ரிரதமு மெண்பல
மேழு கோடியு மிரவுசி வந்திடும்
யமுனை நீர்கொடு குகைபதி னாயிர
மிறுக வேசமை நிலவறை யூடுவை
எழுப தொடெண்பது வண்டியி லேபத
ரிடுகொ டுவந்துசொ ரிந்துகு வாவிடு
யாமொழி படரச வாதந் தந்தன
நீசிவ குருவுப காரங் கண்டிரு

இரதமொ டுருகிய சருகு பித்தனை
　　பிவையிலை குகைதொறு மிடைந றுக்கிலை
எற்ற வந்தி ராது பொய்க்காளல
　　வெட்டி ரண்டு மாறு தப்பாதுகொள்
எழுப தக்கோணி புடமுள செங்களம்
　　ரணமு கத்தானை படையொடு வந்திரு
ஈழம்வெகு கோடியா ளிந்திட
　　வேழுநீல மாடநீ யேய்ந்துகொள்
இபத்திர ளுரிக்தன பருத்தன தருத்திக
　　ளிலக்கற வுனக்கரு கடிக்கிலை சடக்கென
யாவும் வாய்ப்பது சத்யமு னக்கிலை
　　யேழு நாட்டரு மெத்தவி னைத்தனம்
இறைவர் குன்ற மானை மணமகிழ்ந்த நாளி
　　லிணையி லண்ட ரோடு முனைவு கொண்ட தாகும்
எமது பசிதீர மாராச விந்த்ர
　　வமுது படைபோத வாகாச கங்கை
யாறு போலநெய் சொரிவட கம்படை
　　நூறு சாலொடு பொரியலை யிங்கழை
இடுக மாவடு வடையிடை கிரையி
　　லவண மீறிய கறியடை வேபடை
இருப துதண்டையு டும்புகு வால்சமை
　　துருவை கள்பண்டுச மைந்தவெ லாமழை.
யாமையை யழைமுய லாணங் கண்டறி
　　யோமிது சிவசிவ மேமெலங் கும்படை

இடைவெளி யறவிரு விடுக துக்கமே
யிறவனைக் கயல்விழிகள் மிவைபொ டுத்தன
எட்டு வண்டு வாளை யிபமிசையி
லிட்ட மூண்டி ருடன் முற்பாடழை
இடைகொ ளூட்பாட விளைப்பவை தூம்புட
னடைச ராக்காய் விசிறைட முன்கறி
சுறுபணி வார்விடாப் போம்படி
யேடிபிரி யாதுபா ரேன்சொரி
இருக்கிற சருக்கரை யருக்கமைகத கலிக்கனி
ரசத்தினை டேசை தகைதடு விலைக்குள டையப்படை
ஈச பாக்குடன் வெற்றிலை கர்ப்புரம்
பாரு மேத்த வினிச்ச சமுற்றிரு (௩)
மிடைதருட்ப்ர வாள சடைமேல் நம்ப்ர வாக
விமலர் கொன்றை மாலை கருணை சந்த்ர ரேகை
விரவு மணநாறு பாதார விந்த
வித்தர ணவினோத மாதாவின் மைந்தன்
மீனகேதன னுருவின்மிகுந்தரு
டான வாரிதி சரவண சம்பவன்
விகிர்தி வேதனன் மவுனசு காதன
னகில கார ண னகிலக லாதரன்
விகசித சுந்தர சந்தன பாளித
மிர்கமத குங்கும கஞ்சப யோதரி
வேழமுமுழைகளு மாறும் பைம்புன
மேவுகுறமகள் மேவுந் திண்புயன்

விரிகட றுகளெழ வெருளி விக்ரம
னரிதிரு மருமக னறுமு கத்தவன்
வெட்சி கொண்ட தோளன் வேற்பூடுற
விட்டவென்றி வேன்மு ழூச்சேவகன்
விரவு நக்கீரர் சரணென வந்தருண்
முருக னிட்க்ரோத முனிகுண பஞ்சரன்
மேதகுபு ராணவே தாங்குர
ஞேதரிய மோனஞா னங்குரன்
மிகைத்தவர் புரத்ரய மெரித்தவர் ப்ரியப்பட [வன்
வகஸ்திய முனிக்கொரு தமிழ்த்ரய முரைத்த
வேத மூர்த்தி திருத்தணி வெற்புறை
சோதி கார்த்தி கைபெற்றவி ளக்கொளி
வெருளி வென்ற வேள்வி முனிவர் சங்க மேற
விரவு மிந்த்ர லோக வழிதி றந்த மீளி
மிகவி ருதுகூறு மேவார்கள் கண்டன்
விகட வசுரேசர் சாமோது சண்டன்
மேக வாகன மிகுமத வெண்கய
பாக சாதன னகரிபு ரந்தவன்
விபுத தாரகன் விபுததி வாகரன்
விபுத தேசிகன் விபுதசி காமணி
விபரி தகஞ்சவி ரஞ்சப ராமுக
னபின வகந்தன டைந்ததவர் தாபரன்
மேருவை யிடிபட மோதுஞ் சங்க்ரம
தாரகன் மகுடவி பாடன் புங்கவன்

வெயிலுடமிழ் கொடியொடு வினைமு¡கத்தினின்
மயின்மிசை வருமொரு வரத னிர்ப்பயன்
வித்த கன்ச வாமி நிர்ப்பாவகன்
சத்தி யன்ப்ர தாப வித்தியாதரன்
விரத நட்பாளர் பரியும சஞ்சல
னிருத நட்டுர னிருதர்ப யங்கரன்
வீரமத லோகவேள் காங்கெயன்
சூரரண சூரசூ ராந்தகன்
வினைப்பகை யறுப்பவ னினைத்தது முடிப்பவன் [கடல்
மனத்துயர் கெடுத்தனை வளர்த்தருள் கிர்பைக்
வேலன் வாய்த்த திருப்புகழ் கற்றவர்
சீல மேத்திய சித்தப்ர சித்தரே. (க)

---

## கள. கடைக்கணியல்வகுப்பு

தனதன தனந்த தத்த தனதன தனந்த தத்த
தனதன தனந்த தத்த தானன

அலைகடல் வளைந்து டுத்த வெழுபுவி புரந்தி ருக்கு
மரசென நிரந்த ரிக்க வாழலாம்
அளகைய ரசன்ற னக்கு மமரர ரசன்ற னக்கு
மரசென வரஞ்செ லுத்தி யாளலாம்
அடைபெறு வதென்று முத்தி யதுமது ரசெந்த மிழ்
மருள்பெற நினைந்து சித்தி யாகலாம் [க்கு
அதிரவ ருமென்று முட்ட வலகில்வி னைசண்டை நிற்க
வடலெதிர் புரிந்து வெற்றி யாகலாம் (வ)

இலகிய நலஞ்செய் புட்ப கமுமுட னிறம்வெ ளுத்த
　　விபவ ரெனும்பொ ருப்பு மேறலாம
இருவர வர்நின் றிடத்து மெவரெவ ரிருந்தி டத்து
　　மொருவனி வனென் றுணர்ச்சி கூடலாம்
எமபடர் தொடர்ந்த ழைக்கி லவருட னெதிர்ந்து
　　விடியென முழங்கி வெற்றி பேசலாம் [ளுட்க
இமையொழி யவும்ப ரிப்ப தகலவிடு முங்கள் வித்தை
　　யிளையினி விடும்பெ ருத்த பாருளீர் (௨)

முலையிடை கிடந்தி ளைப்ப மொருமொரு சிக னவண்டி
　　முகையவிழ் கடம்ப டுத்த தாரினன் [ரைப்ப
முதலிபெ ரியம்ப லத்துள் வரையச லமண்ட பத்துண்
　　முனிவர்தொ ழவன் றிருத்த மாடினன்
முனைதொறு முழங்கி யொற்றி முகிலென விரங்கவெ
　　முறைநெறி பறந்து விட்ட கோழியான் [ற்றி
முதியவு ணரன்று பட்ட முதியகு டர்நன்று சுற்று
　　முதுகழு குபந்த ரிட்ட வேலினன் (௩)

மலைமரு வுபைம்பு னத்தி வளருமி ருகுன்ற மொக்கி
　　வலிகுடி புகுந்தி ருக்கு மார்பினன்
மழலைகள் விளம்பி மொய்த்த வறுவர்மு லையுண்டு முற்
　　வடிவுடன் வளர்ந்தி ருக்கும் வாழ்வினன் [றும்
மலையிறை மடந்தை பெற்ற வொருமத லையென்று
　　மலையிடி யவுந்து ணித்த தோளினன் [தித்து
மயிலையு மவன்றி ருக்கை யயிலையு மவன்க டைக்க
　　ணியலையு நினைந்தி ருக்க வாருமே. (௪)

அறநெறி முறைமையி லொழுகிய வழங்கிய பண்பெனு
மம்பொன் சேர்த்தக லிங்கஞ் சயசாரமும்
அவனவ ளதுவென மொழியவு மிலதொரு வன்பிணி
யுங்கொண் டாக்கமு மின்பங் களுமேதரும் (ஞ)
இரவலர் மிடிகெட வுதவிய விதரண கங்கண
மிங்கங் காப்பிலெ னுஞ்சுந் தரகாகளம்
எனதறு துறவினு முயர்கொடை யவிரத சங்குல
கெங்குங் கேட்டுவ ழங்கும் பொறையாமுர
சிமையவர் கணமுனி கணமுட னினிதுப்ர பஞ்சமி
றைஞ்சுங் கீர்த்திது ரங்கந் திறல்வாரணம்
இருவினை கெடவொரு நிரமய பரமவு னந்தரு
மின்பந் தேக்கிய வன்பின் சிவலோகமே. (க)

---

## கக. மயில் வகுப்பு

தானதன தந்ததன தானதன தந்ததன
தானதன தந்ததன தந்த தனன

ஆதவனு மம்புலியு மாசுறவி ழுங்கியுமி
ழாலமரு வும்பணியி ரண்டு மழுதே
ஆறுமுக னைந்துமுக னொருமுக னெங்கடவு
ளாமெனமொ ழிந்தகல வென்று விடுமே

ஆர்கலிக டைந்தமுது வானவ ருந்தவரு
ளாதிபக வன்றுயில னந்தன் மணிசேர்
ஆயிரமி ருந்தலைக ளாய்விரிப ணங்குருதி
யாகமுழு துங்குலைய வந்த றையுமே (ஏ)
வேதமுழு தும்புகலி ராமனொரு தம்பிமிசை
வீடண ருந்தமையன் மைந்த னிகலாய்
வீசுமர வஞ்சிதறி யோடவரு வெங்கலுழன்
மேலிடி யெனும்படிமு ழங்கி விழுமே
மேதினிசு மந்தபெரு மாசுணம யங்கநக
மேவுசர ணங்கொடுலை கெங்கு முழுமே
வேலியென வெண்டிசையில் வாழுமுர கந்தளர
வேயமலை னுஞ்சினமு டன்ப டருமே (அ)
போதினிலி ருந்தகலை மாதினைம ணந்தவுயர்
போதனை யிரந்துமலர் கொண்டு முறையே
பூசனைபு ரிந்துகொடி யாகிமகி ழொன்றுதுகிர்
போன்முடிவி ளங்கவரு மஞ்ச மடுமே
பூதரொடு கந்தருவர் நாதரொடு கிம்புருடர்
பூரணக ணங்களொடு வந்து தொழவே
போரிடுவ வென்றுவெகு வாரணக ணங்களுயிர்
போயினமெ னும்படியெ திர்ந்து விழுமே (கூ)
கோதகலு மைந்துமலர் வாளிமத னன்பொருவில்
கோலவுட லங்கருகி வெந்து விழவே
கோபமொடு கண்டவிழி நாதரணி யும்பணிகள்
கூடிமன மஞ்சிவளை சென்று புகவே

கூவியிர வந்தமுணர் வாழியென நின்றுபொரு
　　கோழியொடு வென்றிமுறை பம்ப கருமே
கோலமுறு செந்திநகர் மேவுகும ரன்சரண
　　கோகனத மன்பொடுவ ணங்கு மயிலே. (க)

---

## ௨௰. கொலுவகுப்பு

தனதன தனதன தனதன தனதன
　　தனந்த தனன தனந்த தனன

அருமறை யவன்முத லரியரன் மகபதி
　　யனங்க னிமையோ ரினங்க ளொருபால்
அருணனு மதியமு மனலெழு கனலியு
　　மணங்கி னெடுசூழ் கணங்க ளொருபால்
வருணனு நிருதியும் வளியொடு தனதனு
　　மகிழ்ந்து மிசவே புகழ்ந்த தொருபால்
வயிரவ ரொடுபட ருவணரு முரகரும்
　　வரங்கள் பெறவே யிரங்க வொருபால் (௨)
இருடிக ளெவர்களு மினியகி னரர்களு
　　மிணங்கி யெதிரே வணங்க வொருபால்
இபமுக வனுமெழி லிளவல்க ளனைவரு
　　மியன்ற நெறியே முயன்ற தொருபால்

உருமலி குறளின மொடுவசு முசுமுக
றுறைந்து பரிவாய் நிறைந்த தொருபால்
உடுவொடு நடுவுப னிருவரு முறை முறை
புகந்து தொழவே யிருந்த தொருபால் (க)

அடல்விடை முகனமை கதையுற வெருசன
மதுங்கி யருசே யொதுங்க வொருபால்
அயன்முடி திருகிய வயவனு நியமமொ
டடங்கி வலமே தொடங்க வொருபால்
மடல்புனை புகமொடு வருபதி னொருவரு
மருங்கி னுறவே நெருங்க வொருபால்
மருவொடு துவரிரு வருமிசை வலமொடு
வசிந்து மனமே கசிந்த தொருபால் (கஉ)

மிடலிறை விறலரி விமலர்க ளருள்சுதன்
வியந்து விரைவாய் நயந்த தொருபால்
வெயில்விரி சுடரவன் மகனொடு மதிமகன்
விளம்பு முறையே கிளம்ப வொருபால்
உடலொளி மவுனிக ளுடனுப னிடதரு
முளங்கு விரவே விளங்க வொருபால்
உமைதிரு மகணில மகள்கலை மகளொடு
முகந்தெ வருமே தொகுந்த தொருபால் (உ)

அதிபதி ரதிபயி ரவிபக வதிசசி
யரம்பை யருமே நிரம்ப வொருபால்
அழகிய கவுரியொ டிலகிய வலவையு
மிடைந்து தயவாய் மிடைந்த தொருபால்

மதியர சருகிறை வசியரும் வினைஞரு
மலிந்து முகமே தொலிந்த தொருபால்
வருசிவ னடியவ ராகர வெனமுறை
வழங்கு கடல்போன் முழங்க வொருபால் (உ௯)

விதிமுறை கருதியை வகைபுரி கருவிகள்
விளைந்த வொலிவா னளைந்த தொருபால்
விதமுட னபிநய வனிதையர் சதிமுறை
விரிந்த நடமே புரிந்த தொருபால்

உதிர்தரு மலர்விரை யுறுபுகை மிர்கமத
முமிழ்ந்த மணமே கமழ்ந்த தொருபால்
ஒழுகிய கிரிதொடு பணிதம தடுசுட
ருவந்த வொளியே நிவந்த தொருபால் (௩)

அரியக டெனமுக டளவிய வொருகுடை
யமர்ந்த நிழலே சமைந்த தொருபால்
அருமட வனமென விருபுடை கவரிக
ளசைந்த வழகே யிசைந்த தொருபால்

வரிசைசெய் துயிலொடு வனமயில் சிவிறியின்
வயங்கு சிறுகா லியங்க வொருபால்
மறுகட லினிலெழு நிறைமதி யமுதென
வரிந்து பனிநீர் சொரிந்த தொருபால் (௩௧)

விரியிருள் வலிதரு கிரணம தெனநல
மிகுஞ்சு டிலில்வீ சுகுஞ்ச மொருபால்
வியன்மர கதமணி மிளிர்தரு களசெதிர்
விரைந்து நிரையாய் நிரைந்த தொருபால்

உரியவெ ளிலையுட னுயரிய கழுகினி
லருந்த கனியே பகிர்ந்த தொருபால்
உலகுள வனிதைய ரவரவர் விரதமொ
டுணர்ந்து கனியே கொணர்ந்த தொருபால் (௪)

அறுசதி ரவரென வறுமணி மவுலிக
ளடர்ந்து வெயிலே படர்ந்த தொருபால்
அறுமதி யெனவறு திருமுக சததள
வளர்ந்த மலரே மலர்ந்த தொருபால்

மறுவறு கடலென மருவுப னிருவிழி
வழிந்த வருளே பொழிந்த தொருபால்
வனைதரு மகரமு மணியணி பணிகளும்
வயங்கு குழையே தயங்க வொருபால் (௪௨)

இறுகுபொன் மலையொடு மிடறுப னிருபுய
மிசைந்து நெடுவா னசைந்த தொருபால்
எழிலினை யனையப னிருகையி லயின்முத
லிலங்கு படையே துலங்க வொருபால்

உறுவரை யருவியை நிகர்தரு முரமிசை
யுடன்கொள் புரிநூல் கிடந்த தொருபால்
உருமென விகலிமு னெதிர்பொரு மவுணரு
ளுடைந்த வுடைவாள் சிறந்த தொருபால் (௫)

அனவர தமுமறை முறையிடு பரிபுர
மலங்கு மிருதாள் குலுங்க வொருபால்
அளவறு கலவியின் முழுகிய குறமக
ளமர்ந்து ளொயிலாய் நிமிர்ந்த தொருபால்

வனசரு வினிலுயர் சதமக னருண்மகள்
    வதிந்த மனையே பொலிந்த தொருபால்
வநமடு பவரிடப் வலியச லதகமலர
    வளர்ந்த சபையே கிளர்ந்த தொருபால் (௫)
நினைவொடு பணிபவர் வினைதுகள் படவெதிர்
    நினைந்து திருநீ றணிந்த தொருபால்
நிறைமல ரொடுநல கலவைபு முயர்ந்து
    நினைந்து தரவே புனைந்த தொருபால்
தினகர னுலவுச னிதியினி லிரவலர்
    தெளிந்த தமிழே பொழிந்த தொருபால்
சிவபர கிரியினி லொருசிவன் வடிவொடு
    திருந்த முருகோ னிருந்த சொலுமே. (௬)

---

## உக. வீரவாள் வகுப்பு

தானன தத்ததன தானன தத்ததன
    தானன தத்ததன தந்தனத் தனன

பூவுளோ னுக்குமுயர் தேவர்கோ னுக்குமெழு
    பூவில்யா வர்க்கும்வரு துன்புதீர்த் திடுமே
பூதசே னைக்குளொரு கோடிசூர் யப்பிரபை
    போலமா யக்கரிய கங்குலீக் கிடுமே

பூதிபூ சிப்பரமர் தோளிலே விட்டதொரு
  போர்வைபோ னெட்டிலைற மருங்குசேர்த் திடுமே
போரிலே நிர்த்தமிடு வீரமா லக்ஷ்மிமகிழ்
  பூசைநே சித்துமலர் தும்பைசாத் திடுமே (௭)

பாவரூ பச்கொடிய சூரனார் பெற்றபல
  பாலர்மா ளத்தனைச்சூ ழுண்டுதேக் கிடுமே
பானுகோ பப்பகைஞன் மேனிசோ ரக்குருதி
  பாயவே வெட்டியிரு துண்டமாக் கிடுமே
பாடுசேர் யுத்தகள வீதிலே சுற்றுநரி
  பாறுபேய் துய்த்திட நிணங்களூட் டிடுமே
பாடியா டிப்பொருத போரிலே பத்திரக
  பாலிசூ லப்படையை வென்றுதாக் கிடுமே (௮)

ஆவலா கத்துதிசெய் பாவலோர் மெய்க்கலிக
  ளாமகோ ரக்களைக ளைந்துநீக் கிடுமே
யாருமே யற்றவனென் மீதொரா பத்துறவ
  ராமலே சுற்றிலுமி ருந்துகாத் திடுமே
ஆடல்வே ணற்படைக ளாணையா வுக்குமுத
  லாணையா வைத்துவலம் வந்துபோற் றிடுமே
ஆலகா லத்தைநிகர் காலசூ லத்தையும
  ருதபா சத்தையுமரிந் துபோட் டிடுமே (௯)

மேவலார் முப்புரமு நீறவே சுட்டவொரு
  மேருவாம் விற்பரமர் தந்தபாக் கியவான்
வேடர்மா னுக்குமுயர் தேவயா னைக்குமிசை
  வேலர்தா ளைத்தொழுது யர்ந்தவாழ்க் கையினன்

வீறுசேர் மிக்ககண நாதனு ரெட்டுவகை
 வீரர்நே யத்தமைய னென்றதோட் டிணைவன்
மேன்மையாம் லக்ஷரத வீரர்பூ சிக்கவரு
 வீரவா குத்தலைவன் வென்றவாட் படையே. (௧)

---

## ௨௨. சிவகிரிவகுப்பு

தத்த தத்த தத்த தத்த தத்த
 தத்த தத்த தத்த தத்த தத்த
  தத்த தத்த தனதானா

மெத்த மெத்த வக்ர மத்தின் மெத்த
 மெத்த விக்ர மத்தின் மெத்த மெத்த
  வுக்ர வெற்றி மிகுபாசமே
விட்டு விட்டு றுக்கு றுக்கு கட்டு
 கட்டு குத்து குத்து வெட்டு வெட்டெ
  னச்சி னத்து நமனுடியே (௨)
சத்த மிட்ட தட்டி நெட்டெ யிற்றி
 னைக்க டித்து றுக்கு தர்க்க மிட்டெ
  னைப்பி டிக்க வருபோதிலே
தத்த ளிக்கு புத்தி யைத்தி டப்ப
 டுத்தி யொத்தி டத்த ணிப்பு றுத்தி
  மெய்த்து னைக்கு வரவேணுமே (௨)

எத்த லத்து மெப்ப திக்கு மெப்ப
டிக்கு மெச்ச ரித்து நற்ப தத்தை
யுச்ச ரிக்கு நினைவாகியே
இட்டம் வைத்த வர்க்க நுக்ர கச்ச
முத்ர வித்தை யிற்ப்ர சித்த நித்ய
முத்த மிழ்க்கு மருள்போதனே (௬)
அத்ர பத்ர சித்ர மிட்ட யிற்ப
டைத்த யிற்கி ணைத்த லர்க்க னுற்ற
பொற்கு றத்தி மணவாளனே
அத்த னுக்கு மைக்கி தத்த புத்ர
சித்தி முத்தி யைச்செ யற்பு தச்சி
வக்கி ரிக்குண் முருகேசனே. (௭)

---

## உ௬. திருச்செந்தில்வகுப்பு

தந்த தந்த தந்த தந்த தந்த
தந்த தந்த தந்த தந்த தந்த
தந்த தந்த தன தானன

சந்த பந்த முந்து விந்தை செஞ்சொ
லின்ப்ர பந்த நந்து சங்க மங்க
லம்பொ ருந்து தமிழ்பாடியே

தஞ்ச மென்று சென்று சென்று நஞ்சு
விஞ்சு நெஞ்ச வஞ்சர் தங்கண் முன்பு
நின்று நின்று மெலிவேோதியே (௮)

சிந்தை நொந்து நொந்து நைந்து நைந்து
வெம்பி வெம்பி யங்கி சிந்தி யிந்த
வெங்கு டம்பை யழிபோதுமா

சிங்க முன்பு குந்த தந்தி யின்கு
லங்க லங்கு பண்பொ சிந்த துன்ப
மென்றொ ழிந்து கரையேறுவேன் (௯)

அந்த ரங்க ளண்ட ரண்ட மண்ட
லங்கு லுங்க நின்ற சைந்த சைந்து
பந்தெ ழும்ப வசுராதி யோர்

அங்க டங்க டண்ட துண்ட கண்ட
பந்தி சண்டை வந்த லைந்து ருண்டு
மண்டை சிந்த வடர்கோபனே (௰)

கந்த சந்த நுங்கு கும்ப கொங்கை
யிந்தி ரன்ம டந்தை கங்க ணம்பு
ரந்த வென்றி யணிநேயனே

கம்பு மஞ்ச முந்தி கழ்ந்தி ருந்தி
டுந்தி றஞ்செ றிந்து கஞ்ச நன்ற
லர்ந்த செந்தின் முருகேசனே. (௧)

## உச. திருப்பழனிவகுப்பு

தந்தனன தந்தனன தந்தனன தந்தனன
தந்தனன தந்தனன தந்தனன தந்தனன
தந்தனன தந்தனன தந்தனன தந்தனன
தனதானன

எந்தவினை யும்பவமு மெந்தவிட மும்படரு
மெந்தவிக லும்பழியு மெந்தவமு வும்பிணியு
மெந்தவிகழ் வுங்கொடிய வெந்தவசி யுஞ்சிறிது
மணுகாமலே

எந்தவிர வுந்தனிமை யெந்தவழி யும்புகுத
வெந்தவிட முஞ்சபையி லெந்தமுக மும்புகலு [மை
மெந்தமொழி யுந்தமிழு மெந்தவிசை யும்பெரு
சிதருமலே (௧)

வந்தனைசெய் துன்சரண நம்பதல்பு ரிந்தவருள்
வந்தனுதி னந்தனிலு நெஞ்சினினை வின்படிவ
ரந்தரவு வந்தருளி தம்பெறுவ தன்றிநெடு
வலைவீசியே

வஞ்சவிழி சண்டனுறு கின்றபொழு துங்குமர
கந்தவென நன்கறைய வுந்தெளிவு தந்துயிர்வ
ருந்துபய முந்தனிமை யுந்தவிர வஞ்சலென
வரவேணுமே (௨)

தந்தனன தந்தனன டிண்டிகுடி டிண்டிகுடி
குண்டமட குண்டமட மண்டமென நின்றுமுர
சந்திமிலை பம்பைதுடி திண்டிமமு முங்குமொலி
திசைவீறவே

தண்டவமர் மண்டசுரர் மண்டைகிண மென்றலகை
யுண்டுமிழ்தல் கண்டமர ரிந்திரன் வணங்குபத
தண்டைசிறு கிங்கிணிபு லம்பிடவ ரும்பவனி
மயிலவாகனே (௯)

செந்தளிரை முந்துபட மென்றுளம ருண்டுநிறை
சந்தனவ னங்குலவு மந்திகுதி கொண்டயல்செ
றிந்தகமு கின்புடைப துங்கிடவ ளைந்துகிமிர்
மடல்சாடவே

சிந்தியவ ரம்பைபல வின்கனியில் வந்துவிழ
மென்கனியு டைந்தசுளை விண்டநறை கொண்டுசிறு
செண்பகவ னங்கள்வளர் தென்பழனி யம்பதியின்
முருகேசனே. (க)

---

## உரு. திருப்பரங்கிரிவகுப்பு

தான தந்தன தான தந்தன தான தந்தன
தான தந்தன தான தந்தன தான தந்தன
தான தந்தன தான தந்தன தான தந்தன
தான தந்தன தான தந்தன தான தந்தன
தனதானன

சாதி யுங்குல மாவ துங்குடி யாவ துஞ்சன
மாவ துங்கிளை தார முந்திர பால ரும்பிர [பசு
தான மும்பெரு காண்மை யும்பெறு தான மும்
மான முஞ்சிவ ஞான மும்பல கோல மும்புரி
தொழிலோடுமே

தாழ்வ கன்றிடு வாழ்வும் வெம்பிணி நோயு மங்கதி
லாது ரந்தனி லாவ துந்தளர் சாவொ ழிந்திடு
யோக முஞ்சிவ பேறு மெந்தநி தான முஞ்செய்த
ராசு கண்டது போல்வ ரும்பொது வாகு மெ
திருதாளையே [ன்றுன (௭)

ஓதி னெஞ்சய ரார்தி னந்திரி கால முந்தொழு
வோர்வி ரும்பிய தேது மன்புட னேத ருங்க்ருபை
யாக வந்தனு பூதி தந்துமு னூல்க டந்திட
வேபு ரந்தருள் கூரு மிங்கித சேவை நம்பிய
படிகாணவே

ஓகை வந்தனை யாய்வ ணங்கிய வேழை சிந்தையு
ளேநி னைந்திடு வேளை வந்தினி தாய்வ ரந்தர
வேணு மென்றக மேவ ருந்தியு மோதி னன்றின
நான்வி ளம்புத னீய றிந்துமி தேனி ரங்கிலை
யறிவேனையா (௮)

ஆதி யந்தம றாதி விந்துவு நாத மும்பிரி
யாநி றைந்தவ ரூப வின்பசொ ரூப சுந்தர
சோதி மின்பொலி நீதி யம்பொரு ளாக நின்றப
ராப ரன்கரு ணாலை யன்புல வோரி றைஞ்சிட
வெதிர்காளிவா

தாட லின்செக சேகி ணங்கிண சேகு டண்டம
டாட மண்டம தாகி ணங்கிண தோதி ணங்கிண
தாதி மிந்திமி தோவெ னுந்தொனி யார்சி லம்
தாளமிஞ்சிட வேந டம்புரி பாத நம்பர[பொலி
னருள்பாலனே (௯)

மாதி ரந்திசை யாக வந்திக டாச லந்திரை
மாச லம்புவி மாக மண்டக டாக மும்பொனின்
மேரு வின்றலை யேகு லுங்கிட வாச மொன்றிய
கால்பொ ருந்துகள் வானி ரம்பிட வேவ ருங்
வடிவேலனே [கதிர்

வான ரங்கதிர் தாவு தண்டலை மேவு கொண்டலை
யூடு நின்றலை மாவி னங்களி கூரு நண்பொடு
கோக னஞ்செறி வாவி சிந்திய பால ருந்திய
போர்கி றந்திரு மூவர் விஞ்சையர் சூழ்ப ரங்கிரி
முருகேசனே. (க).

## திருவகுப்பு

முற்றிற்று

# திருச்செந்தூர்

# சுப்பிரமணிய அகவல்

சிற்றம்பலநாடிகள்

:: அருளியது ::

உ
திருச்சிற்றம்பலம்

# திருச்செந்தூர்ச் சுப்பிரமணியரகவல்

## காப்பு

கந்தூ ரலைவாயி னண்ணியுல கேத்தவொளிர்
செந்தூர்த் திருவகவல் செப்புவே—னிந்தூருஞ்
செஞ்சடையான் யானைச் சிரமுடையா னன்பிலக
ணெஞ்சடையான் பாத நினைந்து.

---

ஓமெனுந் தாரக வொண்பொருள் சிவனுக்
காமென மொழிந்தே யருட்குரு வானோன்
பொற்புறு பொதிய வெற்புறு முனிக்கு
நற்பொருள் விளக்கு ஞான தேசிகன்
பொய்வழிச் சமணப் புலையிரு ணீக்கிச்
சைவம் வளர்க்குஞ் சம்பந்த மூர்த்தி
முருகன் குமரன் மூவிரு முகன்மான்
மருகன் சிவனருண் மைந்தன் கந்தன்
மலைமகள் பாலன் வயங்கிளர் வேலன்
கலைபயில் புலவன் கார்த்தி கேயன்
வளையொரு மருப்பு வாரண முகவற்
கிளையவன் குகன்மயி லேறும் பெருமான்

சூரசங் காரன் சுப்பிர மணியன்
வீரருள் வீரன் விரைகமழ் கடம்பன்
சேந்தன் வள்ளி தெய்வ யானை
காந்தன் செவ்வேள் காங்கேயன் சிலம்ப
னுயிர நாமத் தையன் றய்யன்
சேயருட் கோமான் சேவற் றுவசன்
வரங்கிளர் கருணைப் பரங்கிரி யுறைவோன்
மாவினம் விளங்கு மாவினன் குடியோ
னந்தா ரலைவாய்ச் செந்தூர்க் கடவுள்
பாரகம் விளக்கு மேரகத் தமர்வோன்
மாலய னிறைஞ்சுஞ் சோலைமா மலையோன்
குன்றுதோ றாட னன்றென மகிழ்ந்தோன்
பாசக் கங்குல் பசையறப் பருகி
நேசர்க் கின்ப நிறையொளி பரப்பித்
திருவளர் செழும்பொற் செந்தா மரைக்கு
மருவுமோர் சான்றாய் மலர்ந்தபொற் பதமு
நினைப்பொடு மறப்பு நீங்கிடு மதீத
மனைப்பர நாத மறையொலி யலம்பும்
பாந்தளஞ் சுடிகைப் பன்மணி யிழைத்த
காந்துசெஞ் சுடர்க்காற் கழற்பரி புரமுங்
கண்குளிர் கனகக் கவின்கிடந் திலங்குங்
கிண்கிணி யிசைக்குங் கிளர்திரு வரையும்
பட்டுடை வரிந்து தொட்டகூர் வாளுங்
கட்டுறு யோக பட்டிகைச் சிறப்பு
மிந்திர வில்லிரண் டெதிர்பொருத் துவபோற்
சுந்தர வாழி சூட்டுமங் குலியு

மன்னிரு முகிலான் மணிதரு நிதிசேர்
பன்னிரு கமல பாணியு மவற்றிற்
சூலமும் வேலுந் துரோணமுஞ் சரமும்
பாலமுங் குலிசமும் பரிசையும் வாளு
மாழியு மழுவு மபயமும் வரதமுஞ்
சூழுமுன் கைக டிலங்குபொற் கடகமு
மந்தரந் தழுவும் வாசுகி யன்ன
சந்தத மொய்ம்பிற் றழைத்தகே யூரமும்
பரிதிமண் டலம்போற் பதக்கமுத் தாரந்
தருசரப் பணிக டயங்குபூண் மார்பு
மட்டிகை பணிநல் லக்கிருந் துவளை
விட்டொளி விரிக்கும் வியன்கந் தரமு
மூவிரு திங்கண் முதிர்ந்தபூ ரணம்போன்
மேவுசண் முகங்கள் விளங்குநற் பொலிவு
முளரிமுந் நான்கு மூவிரு குமுதம்
வளர்மதி யுதயத் திடைமலர்ந் தனபோன்
முகந்தொறுங் கருணை யுகந்தகண் களுஞ்சி
ருகந்தபொற் குதலை யொழுகுவாய் வனப்புந்
தொட்டபொற் குழைக டிக்குகுண் டலமுஞ்
சுட்டியு நுதலி லிட்டவெண் ணீறு
மன்னிரு மகளிர் மாட்டலால் வணங்காச்
சென்னிசேர்ந் தொளிருஞ் சேகரச் சிறப்பு
மகபதி மகளும் வள்ளியந் திருவுஞ்
சுகமணஞ் சூட்டிந் தொங்கலுங் கடம்புங்
கோதைகு ழன்றோர் கொங்கையாற் பூசு
மேதமில் சுகந்த லேபனப் பூச்சு

மரகதப் பொருப்பும் வயிரவான் பொருப்பு
நிரல்வல மிடமார் நெடியபொற் கிரிபோ
லகிலமு மீன்ற வன்னையரி ருவர்
மகிழ்வுற விருபான் மன்னிவாழ்ந் திருப்பப்
பன்னிறந் தளிர்க்கும் பச்சைவான் கிரிமேற்
றன்னிரு கோடி சூரிய ருதித்தாங்
கரவர சஞ்ச வடுதிறன் மயூரக்
குரகத மேறிக் குலவு காட்சியுங்
கரந்தெனை யாளுங் கருணையாற் புவிமேற்
சரந்தரு மானுடச் சட்டை சாத்தி
அழியா வொளிவந் தழியா மொழியை
வழியா மொழிய வந்தனங் குருவா
யாணவக் கடற்கு ளலைபடு துரும்பும்
பூணுறு மாயைப் புலிவாய்ப் பசுவுங்
கருமச் சூறைக் காற்றுறு சருகுந்
தருமிச் சுழலைச் சார்ந்திடு மெளியனின்
வருத்தங் குறித்து வருந்தே னுனக்குத்
திருத்தகு முணர்வு செப்ப வேண்டி
வந்தன முத்தி வழங்குது மென்று
னந்தகன் மொழிகேட் டன்பொடுந் துதித்தேன்
கற்பக வனம்போற் கமழ்பூங் காவிற்
பொற்புற விளங்கும் பொலன்மணிக் கனகப்
பன்னக சாலையுட் பதுமபீ டிகைமேற்
றன்னுபூந் தருக்கள் சூழ்கற் பகம்போற்
சங்கமீ ளுைப்பட் டயங்குவெண் மதிபோ
லங்கை கூப்பி யடியர்நின் றேத்த

இனிதெழுந் தருளி யென்முக நோக்கிப்
புனிதநீ ராடப் போகென மொழிந்தா
னீரிடை மூழ்கி நெடுங்கலை யணிந்து
சார்தலு மோமச் சடங்குக ளியற்றி
வெண்ணீ றணிந்து விதியெழுத் தஞ்சுந்
தெண்ணீர் மையினிற் செவியுறப் புகட்டி
அறுகெரு வுடன்கை யள்ளுநீ நடனென்
மறுகுட லாவி வான்பொருள் கொண்டான்
பரவசஞ் சிதநம் பார்வையா லொழிந்த
விரவுமுற் பவங்கள் வினையுடம் பளவி
லத்த னருண்மே லாகா மியங்கள்
பற்றில நினது பண்புபோ லிருந்த
நம்பெரு வடிவை நாடுகென் றருளித்
தம்பொற் கரமல ரென்றலை தீண்டி
முழுநிலம் புரப்ப முடிசூட் டுவபோற்
செழுமணிப் பதமென் சிரமிசைப் பொருத்திப்
பாத தீர்த்தம் பரிகல சேட
மாதரக் குழவிக் கன்னைபோ லருத்திக்
குருபதம் பணிதல் குஞ்சர முகனைக்
கருதல்சங் கற்பங் கங்கையின் பூசை
திருந்துமுத் திரைக டிக்குபந் தனநீ
டருந்துயர் நீக்கு மந்திர சந்தி
தத்துவத் திரயந் தாளத் திரயஞ்
சுத்தா சமனந் தொடுமிடந் தொடுகை
கரமுட னங்கங் கருதிடு நியாசம்
விரவுத ருப்பணம் விளங்குநீ றணிகை

அஞ்செழுத் தோதி யாதவற் பணிதல்
விஞ்சுமா கமத்து விதிமுறை முடித்துப்
பண்டையோர் நம்மைப் பரவுசொற் பாடல்
கொண்டுநீ துதிகள் கூறெனை விளம்பிப்
பத்திகூர் விரதம் பயின்றிடி னுலாஞ்
சத்திநி பாதந் தருமெனப் பகர்ந்தா
னன்னமிட் டெவர்க்கு மரும்பசி தீர்த்துப்
பன்னருஞ் சாலை படித்துறை தடாகம்
வந்தா ரருந்தும் வாசநீர்ப் பந்தர்
நந்தா வனங்க ணலம்பெற வமைத்தே
ஈங்கிவை முதலா வெண்ணுன் கறமுந்
தீங்கிலா வண்ணஞ் செய்கென மொழிந்தான்
காலையி லெழுந்து கடிமலர் பறித்து
மாலிகை தொடுத்து மதிமுடிக் கடவு
பூசனைக் குதவிப் புனிதவா லயத்தின்
வாசல் விளக்கிட் டலகொடு மெழுக்கிட்
டாறுகா லமுஞ்சென் றரன்பத மிறைஞ்சி
ஏறுளா னடியார்க் கேவல்பூண் டொழுக
லித்திற முதலா வியற்றுதல் சரியை
சுத்தசா லோக்கியந் துய்க்குமென் றிசைத்தான்
பொய்வகை நீக்கிப் பூத முதலா
ஐவகைச் சுத்தி மெய்வகை விளக்கி
மணம்பொலி கந்த வர்க்கமா மலர்க
ளிணங்குநற் றாப மெழில்குலாந் தீபந்
தருநை வேத்தியந் தாம்பூல முதலாய்
வருமுப சார வகைபல வியற்றி

அகந்தவி ருளத்தோ டகம்புற மிறைஞ்சிச்
சுகங்கிளா ரங்கித் தொடுகடன் முடித்துப்
போற்றுறு மிலிங்க பூசனைக் கிரியை
சாற்றுசா மீப்பியந் தருமெனப் பகர்ந்தான்
கட்டளை சப்பணங் கட்டளை யிட்டுத்
தட்டுறு மலந்தீர் சாதன மொழிந்து
கடுங்கொலை வெறும்பொய் களவுகட் காமம்
படும்பெயர் பஞ்ச பாதகந் தீர்த்துக்
காமங் கோபங் கசடுறு முலோபந்
தீமன மோகஞ் சேர்மத மாற்சரிய
மீண்டிவை முதலா வெண்ணில பாவம்
பூண்டன வொழியப் புந்திதந் தருளி
மன்னுகீ ழரணி வருத்தமி னுணர்வாய்ப்
பின்னுமே லரணி பிரணவ மாகக்
கடையவே ஞானக் கனலெழு மென்றே
தடைபடாப் பாச தகனஞ் செய்தா
னருளொனுந் தலத்தி லறிந்துகான் மடக்கி
இருளற விருக்கு மியற்கையும் விண்டான்
பன்னிரண் டங்குலம் பறிந்திடும் பிராணன்
பின்னதி னன்கும் பிரிந்துபோ மதனை
லாயுளுங் குறைந்திட் டாக்கையுந் தளர்ந்து
சாயுமென் றுரைத்துச் சாகா திருக்க
நாடியோர் பத்து நாடிநா டிகள்புக்
கோடிய வாயு வொருபதுந் தேர்ந்து
சொன்னநா டிகளிற் சுழுமுனை நடுவா
மின்னதின் பக்கத் திடைபிங் கலையா

மக்கினி திங்க ளாதவன் கலைகள்
புக்கமுச் சரமும் போய்மீண் டியங்கு
மூலகுண் டலியா முரகமூச் செறிந்து
வாலது மேல்கீழ் மண்டல மிட்டுப்
படந்தனைச் சுருக்கிப் படுத்துறங் குவது
நடந்துமே னோக்கி ஞானவீ டளிக்கு
மண்டல மூன்று மருவுதூண் புகவக்
குண்டலி யெழுப்புங் கொள்கையீ தென்றுன்
முன்னதி ரேசக முப்பத் திரண்டு
பின்னது பூரகம் பேசுமீ ரெட்டுக்
கும்பக நாலோ டறுபதாக் கூறுந்
தம்பமாத் திரையின் றன்மையு முணர்த்தி
மூலமே முதலா முடிநடு வுச்சிப்
பாலளா வினுநீள் படுதொளை நோக்கி
மூலா தா ரத்தின் முச்சுழிச் சுடரை
மேலா தா ரத்தின் மெல்லெனத் தூண்டி
இருவழிக் காலு மொருவழி நடத்திக்
கருவழி யடைத்துக் கமலமா றுருவிப்
பன்னிரண் டந்தம் பரிதியு மதியு
மன்னியொன் றென வண்ணமுந் தெரிந்து
கமடமைந் தடக்குங் கருத்தெனப் பொறியின்
மமதைக ளடக்கி மனோலய மாக்கி
மூலக் கனலான் முழுமதி யுருக்கிப்
பாலைப் பருகும் பண்புதந் தருளி
இட்டகா மியமு மெண்ணெண் கலையு
மட்டமா சித்தியு மன்புறக் கொடுத்துப்

பன்னிரு பட்சியும் பறவா வண்ண
மென்றுளே திறுத்து மியற்கையும் விண்டான்
மூலமே முதலா மூவிரு தலத்தின்
கோலமும் பூதக் குறிகளு மதன்பா
லைம்பதோ டொன்று மக்கர விதமும்
பொன்பொலி கமலப் பூவிரு மூன்றுந்
தாரக வெழுத்துஞ் சார்பெழுத் தஞ்சும்
வாரண முகவன் மலரோன் றிருமால்
வருத்தமி லுருத்திரன் மகேச்சுரன் சதாசிவ
னுருத்தெளிந் திடநம் முருவே யாகு
மாறுமா முகத் தமர்ந்தது மிதுவே
வேறிலை யென்று மெய்ம்மொழி செப்பி
இலங்குமா யிரத்தெட் டிதழ்த்தா மரைமேற்
றுலங்கிடு நடனச் சோதியுங் காட்டி
இருபத் தோரா யிரத்தறு நூறாய்
மருவிநா ளோறும் வளர்சுவா சத்தைச்
சங்கென வாங்கிச் சமனுறக் கும்பித்
தங்கெனன் றெழுப்பு மசபையு மருளிப்
பொருளரு ளான்மாப் பொருந்திடுந் திரோதை
மருவிரு மலமாய் வயங்குமஞ் செழுத்திற்
றிரோதையு மலமுந் தீர்த்தத னிடத்தில்
வரோதய மான வாசியை நிறுவி
வளம்பொலி சிவாய வாசியென் றுளத்தில்
விளம்புக நின்னை விளக்குமா னந்த
முத்தியஞ் செழுத்து மொழிந்தன மிதனைச்
சித்தசாந் தியினிற் செப்பென மொழிந்தான்

வாசிவா வென்ன வழங்குமூன் றெழுத்தும்
பேசுதன் முதிர்ந்த பேறென மொழிந்தா
னின்பமாம் வாசி யென்னுமீ ரெழுத்தி
லன்புறு மகிமை யதிசய மென்றான்
சீயெழுத் தொன்றே சிந்தையிற் கருதத்
தூயநற் சுடராய்த் தோன்றுவை யென்றான்
விந்துவு நாதமு மேவிய வெளியிற்
சிந்தையை நிறுவிச் சிவன்வடி வாகித்
தாக்குவை மூல நோக்குவை யதீதம்
போக்குவை பிறவி யாக்குவை யின்பெனத்
தராப்புகு நாப்போற் சமனுற நிற்கு
மிராப்பக லற்ற விடத்தே யிருத்தி
நலம்படர் சோதி நடனகுஞ் சிதத்தாட
சிலம்பொலி கேட்குந் திறம்பா வித்தான்
மயற்பொறி புலன்வாய் மனம்புகு நனவி
லியற்றிடு தவங்க ளியமநிட் டையதாஞ்
சார்பொறி விடுத்த சாக்கிரக் கனவு
சேர்தரு கருத்தாற் செய்தவ நியம
நீங்காக் காண நீங்கவே நனவிற்
றாங்காத் தூக்கச் சுழுத்தியா சனமா
மறிந்தொண் ணூறு மாறும்வே றுக்கிப்
பிறிந்துதற் கண்டு பிரமமே தாணைச்
சாதனம் விடுத்த சாக்கிர துரியம்
பேதமற் றிருக்கை பிராணா யாமஞ்
சான்றுசாக் கிரம்போய்த் தானிருந் தமையுந
தோன்றிடா துலகைச் சுழற்றுறுங் கால்போற்

பறந்திடுங் காலாற் பரமறந் தளவிற்
பிறந்திடு மதீதம் பிரத்தியா காரம்
வானெனு மகண்ட வடிவுகண் டெங்குந்
தானென் றிருக்கை தாரணை யாகுங்
காட்சிக ளனைத்துங் கண்ணதாய் விளங்கி
ஆட்சியி னமைந்த ததுவே தியானந்
தற்பதந் தொம்பதஞ் சார்ந்திடு முபாதி
கற்பனை திரக் கண்டசி பதமாஞ்
சச்சிதா னந்த சமரச நிலைதேர்ந்
துற்றசிற் பதம்பெற் றுறங்குதல் சமாதி
மன்னிடு சாம மறையுப நிடதஞ்
சொன்னவாக் கியத்தின் றொகையிதே ஞான
யோகவெட் டங்க முண்மைநீ யுணர்தி
யேகசா ரூப்பிய மிதுவென மொழிந்தான்
சரியை கிரியை தருக்கமா யோகஞ்
சுருதியின் முறையே தொடங்கிய வனைத்து
நானெனும் போத நாட்டமே யன்றி
ஈனமி லுணர்வுக் கின்பங் காணே
னென்றுநான் வினவி யிறைஞ்சலு நகைத்து
நன்றென மொழிவான் ஞானமு ரைக்கிற்
பாச ஞானம் பகர்பசு ஞான
மீச ஞான மென்னமூன் றுளவா
மதுகேள் பாச மாவ தாணவ
மதிமயற் கன்ம மாயை யிரண்டுந்
தெருமரல் காட்டுங் கருமமுந் திரோதையு
மருவிடும் பஞ்ச மலங்கா ணிதனை

ஆசென வுணரா தகமென விருக்கை
பாச ஞானப் பண்பது வாகுந்
தரும்பசு ஞானஞ் சாற்றுதுங் கேண்மோ
வரும்பவ மூட்டு மலமைந் தவற்றி
ணைவ மொன்று மகலா மையினுற்
காணுறு விகடக் கருவிக டேர்ந்து
தன்னை யுணர்ந்து தானே பிரம
மென்னக் கருதி யிருப்ப தாகும்
பதிஞா னத்தைப் பகருது மகங்கூர்
மதிஞா னத்தால் வரும்பவ மொழியா
தாகையா லருள்புக் காணவ மொழிந்திட்
டேகமா மின்பத் தெய்துவ தாகுந்
தத்துவ முழுதுஞ் சடமெனக் காணு
தித்தைநீ நடத்தற் கிறைவனோ வல்லை
அறிவனு மல்லை யறியா னல்லை
செறியருள் காட்டத் தேர்ந்துகாண் பவனீ
யாதுசார்ந் திடினும் யானது வென்னும்
போதநின் றுணர்வு புகன்றிடிற் சிறிதா
மறைத்திடு மூல மலத்தினுற் பாசச்
சிறைக்குளே கிடந்து தேகநா னென்று
வல்வினை புரிந்து மயங்கினை யந்தத்
தொல்வினைப் பயன்கள் சூட்டின மிப்பா
லிருவினை யொப்பு மலபரி பாகந்
திருவருள் பதிக்கத் தேடிவந் தனமயா
மேலொரு மலத்து விஞ்ஞா னகலர்க்
கோவறு முத்தி யுணர்வினின் றளிப்போம்

பெருகிரு மலங்கொள் பிரளயா கலர்க்கு
மருவுநன் மூர்த்தி வடிவுகொண் டருள்வோ
மும்மல முடைய சகலனீ மொழியி
னம்மல நீக்கி யாட்கொண் டருள
மானைக் காட்டி மான்பிடிப் பவர்போன்
மானுட வடிவாய் வந்தனந் தெண்ணீர்
மீனது போல விழியுற நோக்கி
ஆனதோர் கமடம் போலகத் துன்னிப்
பறவை போலப் பரிசஞ் செய்து
திறமிகு முன்னூற் றெளிவுரை பகர்ந்து
பக்குவத் தடைவே பாலித் தருணீ
புக்கிட வேண்டிப் போந்ததென் றிசைத்தான்
பல்பல சமயப் பகுதிசேர் நிலையுஞ்
சொல்வகை மறப்புந் துகளற மொழிந்தான்
றெய்வஞ் சிவமே சிவனருள் சமயஞ்
சைவஞ் சிவத்தொடு சம்பந்த மென்றான்
பூதம் பழித்துப் பொறியற வுணர்த்தி
வாதமாங் கரண வல்லப நீக்கிப்
பித்துறுங் கலாதிப் பிணக்கற விடுத்துச்
சுத்த தத்துவந் தாடண மாக்கி
முப்பது முப்பது முப்பதொ டாறெனச்
செப்புங் கருவிகள் சேரா தகற்றித்
துன்னிடு மத்துவா சோதனை கண்டு
தன்னை யுணர்ந்து தனித்திரு ணீக்கி
யாமா மூலக மனைத்திலுஞ் சாட்சி
நாமே யென்னு ஞானமுங் கடந்திட்

டண்ட பிண்டம் யாவுந் தோன்று
துண்டெனு முணர்வூ டுறக்கமும் விட்டு
விசுவக் கிராசம் வீறுப சாந்த
மசிபதங் குறிக்கு மாசையுந் தீர்த்துக்
கால்புகா விடத்திற் கறங்காத் தீபமு
மேல்விசை தீர்ந்து வீழ்ந்தபம் பரமுஞ்
சித்திர வடிவுந் திரைதீர் புனலு
மொத்தவந் நிலைசார்ந் தொளியரு ணோக்கி
என்செய லேது மில்லையென் றெய்து
தன்செய ணோக்கிச் சார்கென மொழிந்தான்
சும்மா விருக்கச் சொன்னதோர் வார்த்தை
அம்மா வதிசய மாருடன் புகல்வேன்
கரைசேர்த் தருள்வான் கருணையை நோக்கி
இரைதேர் கொக்கொத் தேசற விருந்தே
னென்செய லகன்றேன் யானற வீசன்
றன்செய லடக்குந் தன்மையுங் கண்டே
னுத்தும கத்தோ டடைதரு பௌதிகம்
போற்றுதெய் விகமிவை புரிவதுங் கண்டேன்
புலக்கணக் கதவு பூட்டினேன் சிந்தை
அலக்கண் டீர்ந்த வறிவையுங் கண்டேன்
பொறிபுலன் கரணம் பொருந்திடுங் கலாதி
அறிகரு விகள்போ யடங்கிடங் கண்டேன்
றூழுமென் னிழப்பிற் றயங்குறு விளக்கிற்
சூழுறு மொளிபோற் றுலங்குதல் கண்டேன்
பஞ்ச வருணப் படாம்விரித் ததுபோல்
விஞ்சுபல் சோதி விளங்கிடக் கண்டேன்

சித்திர படத்திற் சேர்பல வடிவ
மொத்த வனேக மொழிக்குளே கண்டேன்
பஞ்சமூர்த் திகளும் பஞ்சசத் திகளும்
விஞ்சைபோ லொளிக்குள் வெளிப்படக் கண்டேன்
மண்ணெடுங் கடல்போல் வரைமா திரங்க
ளெண்ணில் புவனமு மென்னுளே கண்டே
னெழுவகைத் தோற்றத் தியைந்தபல் லுயிரும்
வழுவறச் சோதி வானிடைக் கண்டேன்
றன்னுளே சகமுஞ் சகத்துளே யானும்
பின்னமற் றிருக்கும் பெற்றியுங் கண்டேன்
பளிங்கு போலப் படரொளி விந்து
விளங்குவெண் மதிபோல் வெளிப்படக் கண்டேன்
பரிதி போலப் படரொளி தோன்றி
ஒருபது நாத மொலிக்கவுங் கண்டே
னக்கினி போலு மனந்தமீன் போலுந்
தக்கபே ரொளியாய்ச் சராசர மனைத்தும்
புரந்தரு ளகண்ட பூரண மாகிப்
பரந்தசெஞ் சுடரைப் பரையெனக் கண்டே
னருட்பரை யொளிக்கு ளழுந்துமந் நேர
முருக்கமுங் கண்ணீ ரொழுக்கமுந் திகைப்புங்
கம்பமும் புளகமுங் களிப்புட னகையுஞ்
சிமபுள்போல் வலியுஞ் சித்தியுங் கண்டேன்
மேலுள விஞ்சை விதிநெறி விடுத்த
பாலனுன் மத்தன் பக்குவங் கண்டே
னோங்கும் பரைக்கு ளுள்ளொளி யாகித்
தேங்குமா னந்தச் செழுஞ்சுடர் கண்டே

னுள்ளொளிக் குவமை யொன்றுங் காணேன்
விள்ளவுந் தரமோ மீமிசை விளங்கித்
தெளிபடுஞ் சுடரைச் சிவமென் றுணர்ந்து
களிபடு ஞானக் கண்ணினாற் கண்டேன்
பார்த்திடு மென்னைப் பசையற விழுங்க
வார்த்ததில் வீழ்ந்துற் றானந்த மானேன்
றன்னைத் தந்தா னென்னைக் கவர்ந்தான்
பின்னைப் பெறுமோர் பேற்றையுங் காணேன்
சுயம்பிர காசஞ் சொரூபா னந்த
மியம்புதற் கரிதா மின்பப் பெருக்கந்
தாடலை போலுஞ் சாறலை போலுங்
கூடலை யென்றாற் கூறவும் படுமோ
பேய்பிடி யுண்டான் பெற்றி போலச்
சாய்படு கருவிச் சங்கமு நானும்
பகலோன் வெயிலிற் பாயிருள் விண்மீன்
சகசமாய்க் கலந்த தன்மையும் பெற்றேன்
காந்த மிரும்புங் கனல்படு மிரும்பும்
வேய்ந்தவிந் தனமும் வெந்நீ ருப்புங்
குளிகைபொன் மதுரங் கொண்டநா வென்னத்
தளிவிடா தென்னைத் தடுத்தாட் கொண்டான்
விண்டேன் பிறப்பை வேதா கமத்தோர்
சண்டை தீர்ந்து சமரச மானேன்
றிருமலி செந்தூர்ச் சேவற் பெருமான்
நிருமல ஞான நிகழ்த்தியாட் கொண்ட
திவ்வண்ணந் தமியேற் கிருநிலப் பரப்பி
னவ்வவர்க் களிக்கு மருணெறி யுணரே

ணைகயா விந்த வருள்பெறல் வேண்டி
ணேகையாற் றிருச்செந் தூரிடத் தேகிக்
குமரவேள் சரணங் குறித்துமா தவத்தீர்
விமலமெய்ஞ் ஞான நீவிரும் பெறுவீ
ருத்தம ராவீ ருண்மையீ தென்று
சிற்றம் பலவன் செய்யுளாற் புகன்றான்
கருத்துற விதனைக் கற்போர் கேட்போர்
திருத்தகு மன்பாற் றினந்தொறுந் துதிப்போர்
பெறும்பல னிதனைப் பேசுதுங் கேண்மி
னுறும்பலன் வேண்டு முலகத் தோரே
பாவந் தீரும் பார்மிசை தரும
மேவிளம் பிறைபோன் மேன்மேல் வளருந்
துட்டதே வதைக டொட்டதும் வஞ்ச
ரிட்ட பில்லி யிடர்களுந் தீரும்
வாதம் பித்தம் வலிபடுங் காசஞ்
சீதம் வெதுப்புத் திரா நோய்கள்
வேதனை மிகுந்த வியாதிக ளெல்லாம்
ஆதவற் கண்ட பனிபோ லகலுஞ்
சாகா வரமுந் தந்திடு முடம்பிற்
போகாப் பீடை போக்கிரட் சிக்கும்
வறுமை நீங்கும் வாழ்வுண் டாகுஞ்
செறிதரு மட்டமா சித்தியுங் கொடுக்குஞ்
சரியை கிரியை சார்ந்திடு மியோகந்
தெரிதரு ஞானமுஞ் செறிந்துவாழ் குவரே.

அம்மா திருச்செந்தூ ரம்மா னருணோக்கிச்
சும்மா விருக்கை சுகம்.

திருச்சிற்றம்பலம்

# திருச்செந்தூர்க் கந்தர்கலிவெண்பா

பூமேவு செங்கமலப் புத்தேளுந் தேறரிய
பாமேவு தெய்வப் பழமறையுந்—தேமேவு

நாதமு நாதாந்த முடிவு நவைதீர்ந்த
போதமுங் காணாத போதமா—யாதிநடு

அந்தங் கடந்தநித்தி யானந்த போதமாய்ப்
பந்தந் தணந்த பரஞ்சுடராய்—வந்த

குறியுங் குணமுமொரு கோலமற் றெங்குஞ்
செறியும் பரம சிவமா—யறிவுக்

கனாதியா யைந்தொழிற்கு மப்புறமா யன்றே
மனாதிகளுக் கெட்டா வடிவாய்த்—தனதருளின்

பஞ்சவித ரூப பரசுகமா யெவ்வுயிர்க்குந்
தஞ்சமென நிற்குந் தனிப்பொருளா—யெஞ்சாத

பூரணமாய் நித்தமாய்ப் போக்குவர வும்புணர்வுங்
காரணமு மில்லாக் கதியாகித்—தாரணியி

லிந்திரசா லம்புரிவோன் யாவரையுந் தான்மயக்குந்
தந்திரத்திற் சாராது சார்வதுபோன்—முந்துங்

கருவின்றி நின்ற கருவா யருளே
உருவின்றி நின்ற வுருவாய்த்—திரிகரண
மாகவரு மிச்சை யறிவியற்ற லாலிலய
போகவதி காரப் பொருளாகி—யேகத்

துருவு மருவு முருவருவு மாகிப்
பருவ வடிவம் பலவா—யிருண்மலத்துண்
மோகமுறும் பல்லுயிர்க்கு முத்தியளித் தற்குமலை
பாகமுற வேகடைக்கண் பாலித்துத்—தேகமுறத்

தந்த வருவுருவஞ் சார்ந்தவிந்து மோகினிமான்
பெந்த முறவே பிணிப்பித்து—மந்த்ரமுத
லாறத்து வாவுமண்டத் தார்ந்தவத்து வாக்களுமுற்
கூறத் தகுஞ்சிமிழ்ப்பிற் கூட்டுவித்து—மாறிவரு

மீரிரண்டு தோற்றத் தெழுபிறப்புள் யோனியெண்பா
னாரவந்த நான்குநூ றாயிரத்துட்—சேர்வரிய
கன்மத்துக் கீடாய்க் கறங்குஞ் சகடமும்போற்
சென்மித் துழலத் திரோதித்து—வெந்நிரய

சொர்க்காதி போகமெல்லாந் துய்ப்பித்துப் பக்குவத்தா
னற்கா ரணஞ்சிறிது நண்ணுதலுந்—தர்க்கமிடுந்
தொன்னூற் பரசமயந் தோறு மதுவதுவே
நன்னூ லெனத்தெரிந்து நாட்டுவித்து—முன்னூல்

விரதமுத லாயபல மெய்த்தவத்தி னுண்மைச்
சரியைகிரி யாயோகஞ் சார்வித்—தருள்பெருகு
சாலோக சாமீப சாரூப மும்புசிப்பித்
தாலோகந் தன்னை யகற்றுவித்து—நால்வகையாஞ்

சத்திநி பாதந் தருதற் கிருவினையு
மொத்துவருங் கால முளவாகிப்—பெத்த
மலபரி பாகம் வருமளவிற் பன்னா
ளலமருதல் கண்ணுற் றருளி—யுலவா
தறிவுக் கறிவாகி யவ்வறிவுக் கெட்டா
நெறியிற் செறிந்தநிலை நீங்கிப்—பிறியாக்
கருணை திருவுருவாய்க் காசினிக்கே தோன்றிக்
குருபரனென் றோர்திருப்பேர் கொண்டு—திருநோக்கா
லூழ்வினையைப் போக்கி யுடலறுபத் தெட்டுநிலை
மேழுமத்து வாக்க ளிருமூன்றும்—பாழாக
ஆணவ மான படலங் கிழித்தறிவிற்
காணரிய மெய்ஞ்ஞானக் கண்காட்டிப்—பூணு
மடிஞானத் தாற்பொருளு மான்மாவுங் காட்டிக்
கடியார் புவனமுற்றுங் காட்டி—முடியாது
தேக்குபர மானந்தத் தெள்ளமுத மாகியெங்கு
நீக்கமற நின்ற நிலைகாட்டிப்—போக்கும்
வரவு நினைப்பு மறப்பும் பகலு
மிரவுங் கடந்துலவா வின்ப—மருவுவித்துக்
கன்மமலத் தார்க்குமலர்க் கண்மூன்றுந் தாழ்சடையும்
வன்மழுவு மானுமுடன் மால்விடைமேன்-மின்னிடத்துப்
பூத்த பவளப் பொருப்பொன்று வெள்ளிவெற்பில்
வாய்த்தனைய தெய்வ வடிவாகி—மூத்த
கருமமலக் கட்டறுத்துக் கண்ணருள்செய் துண்ணின்
றொருமலத்தார்க் கின்ப முதவிப்—பெருகியெழு

மூன்றவத்தை யுங்கழற்றி முத்தருட னேயிருத்தி
ஆன்றபர முத்தி யடைவித்துத்—தோன்றவரும்
யானெனதென் றற்ற விடமே திருவடியா
மோனபரா னந்த முடியாக—ஞானந்
திருவுருவா விச்சை செயலறிவு கண்ணா
அருளதுவே செங்கை யலரா—விருநிலமே
சந்நிதியா நிற்குந் தனிச்சுடரே யெவ்வுயிர்க்கும்
பின்னமற நின்ற பெருமானே—மின்னுருவந்
தோய்ந்தநவ ரத்நச் சுடர்மணியாற் செய்தபைம்பொன்
வாய்ந்த கிரண மணிமுடியுந்—தேய்ந்தபிறைத்
துண்டமிரு மூன்றுநிரை தோன்றப் பதித்தனைய
புண்டரம் பூத்தநுதற் பொட்டழகும்—விண்ட
பருவமலர்ப் புண்டரிகம் பன்னிரண்டு பூத்தாங்
கருள்பொழியுங் கண்மலரீ ராறும்—பரிதி
பலவு மெழுந்துசுடர் பாலித்தாற் போலக்
குலவு மகரக் குழையு—நிலவுமிழும்
புன்முறுவல் பூத்தலர்ந்த பூங்குமுதச் செவ்வாயுஞ்
சென்மவிடாய் தீர்க்குந் திருமொழியும்-வின்மலிதோள்
வெவ்வசுரர் போற்றிசைக்கும் வெஞ்சூ ரனைத்தடிந்து
தெவ்வருயிர் சிந்துந் திருமுகமு—மெவ்வுயிர்க்கு
மூழ்வினையை மாற்றி யுலவாத பேரின்ப
வாழ்வுதருஞ் செய்ய மலர்முகமுஞ்—சூழ்வோர்
வடிக்கும் பழமறைக ளாகமங்க ளியாவு
முடிக்குங் கமல முகமும்—விடுத்தகலாப்

பாச விருடேரந்து பல்கதிரிற் சோதிவிடும்
வாச மலர்வதன மண்டலமு—நேசமுடன்
போகமுறும் வள்ளிக்கும் புத்தேளிர் பூங்கொடிக்கு
மோக மளிக்கு முகமதியுந்—தாகமுடன்
வந்தடியிற் சேர்ந்தோர் மகிழ வரம்பலவுந்
தந்தருளுந் தெய்வமுகத் தாமரையுங்—கொந்தவிழ்ந்த
வேரிக் கடம்பும் விரைக்குரவும் பூத்தலர்ந்த
பாரப் புயசயிலம் பன்னிரண்டு—மாரமுதந்
தேவர்க் குதவுந் திருக்கரமுஞ் சூர்மகளிர்
மேவக் குழைந்தணைந்த மென்கரமு—மோவாது
மாரி பொழிந்த மலர்க்கரமும் பூந்தொடையல்
சேர வணிந்த திருக்கரமு—மார்பகத்தில்
வைத்த கரதலமும் வாமமருங் கிற்கரமு
முய்த்த குறங்கி லொருகரமு—மொய்த்த
சிறுதுடிசேர் கையுமணி சேர்ந்ததடங் கையுங்
கறுவுசம ரங்குசஞ்சேர் கையுந்—தெறுபோ
ரதிர்கே டகஞ்சுழற்று மங்கைத் தலமுங்
கதிர்வாள் விதிர்க்குங் கரமு—முதிராத
கும்பமுலைச் செவ்வாய்க் கொடியிடையார் வேட்டணைந்த
அம்பொன் மணிப்பூ ணகன்மார்பும்—பைம்பொற்
புரிநூலுங் கண்டிகையும் பூம்பட் டுடையு
மரைஞாணுங் கச்சை யழகுந்—திருவரையு
நாதக் கழலு நகுமணிப்பொற் கிண்கிணியும்
பாதத் தணிந்த பரிபுரமுஞ்—சோதி

இளம்பரிதி நூறா யிரங்கோடி போல
வளந்தருதெய் வீக வடிவு—முளந்தனிற்கண்

டாதரிப்போர்க் காருயிரா யன்பரகத் தாமரையின்
மீதிருக்குந் தெய்வ விளக்கொளியே—யோதியவைந்

தோங்காரத் துள்ளொளிக்கு முள்ளொளியாயைந்தொழிற்கு
நீங்காத பேருருவாய் நின்றோனே—தாங்கரிய

மந்திரமே சோரியா வான்பதமே மாமுடியாத்
தொந்தமுறும் வன்னமே தொக்காகப்—பந்தனையா

லொத்த புவனத் துருவே யுரோமமாத்
தத்துவங்க ளேசத்த தாதுவா—வைத்த

கலையே யவயவமாக் காட்டுமத்து வாவி
னிலையே வடிவமா நின்றோய்—பலகோடி

அண்ட முருவாகி யங்கஞ் சராசரமாய்க்
கண்டசத்தி மூன்றுட் கரணமாய்த்—தொண்டுபடு

மாவிப் புலனுக் கறிவளிப்ப வைந்தொழிலு
மேவித் தனிநடத்து மெங்கோவே—மேவ

வருமட்ட மூர்த்தமாம் வாழ்வேமெய்ஞ் ஞானந்
தருமட்ட யோகத் தவமே—பருவத்

தகலாத பேரன் படைந்தோ ரகத்துட
புகலாகு மின்பப் பொருப்புஞ்—சுகலளிதப்

பேரின்ப வெள்ளப் பெருக்காறு மீதானந்
தேரின்ப நல்குந் திருநாடும்—பாரின்ப

மெல்லாங் கடந்த விருநிலத்துட் போக்குவர
வல்லா துயர்ந்த வணிநகருந்—தொல்லுலகி

லீறு முதலுமகன் றெங்குநிறைந் தைந்தெழுத்தைக்
கூறி நடாத்துங் குரவனுமே—மேறுமதந்
தோய்ந்து களித்தோர் துதிக்கையினாற் பஞ்சமலங்
காய்ந்தசிவ ஞானக் கடாக்களிறும்—வாய்ந்தசிவ
பூரணத்துட் பூரணமாம் போதம் புதுமலரா
நாரகத்துட் கட்டு நறுந்தொடையுங்—காரணத்து
ஓங்கார மோவா தளிக்குடர்ந்த வான்கொடியும்
வந்தநவ நாத மணிமுரசுஞ்—சந்ததமு
நீக்கமின்றி யாடு நிலைமையைப் போற்புவன
மாக்கி யளித்தருளு மாணையுந்—தேக்கமழ்ந்து
வீசும் பனுவல் விபுதர் தனித்தனியே
பேசுந் தசாங்கமெனப் பெற்றோனே—தேசுதிகழ்
பூங்கயிலை வெற்பிற் புனைமலர்ப்பூங் கோதையிடப்
பாங்குறையு முக்கட் பரஞ்சோதி—யாங்கொருநாள்
வெந்தகுவர்க் காற்றாத விண்ணோர் முறைக்கிரங்கி
ஐந்து முகத்தோ டதோமுகமுந்—தந்து
திருமுகங்க ளாறாகிச் செந்தழற்க ணாறு
மொருமுகமாய்த் தீப்பொறியா றுய்ப்ப—விரிபுவன
மெங்கும் பரக்க விமையோர்கண் டஞ்சுதலும்
பொங்கு தழற்பிழம்பைப் பொற்கரத்தா—லங்க[மாண்
ணெடுத்தமைத்து வாயுவைக்கொண் டேகுதியென் றெம்
கொடுத்தளிப்ப மெல்லக் கொடுபோ—யடுத்ததொரு
பூதத் தலைவகொடு போதியெனத் தீக்கடவுள்
சீதப் பகீரதிக்கே சென்றுய்ப்பப்—போதொருசற்

றன்னவளுங் கொண்டமைதற் காற்றுள் சரவணத்திற்
சென்னியிற்கொண் டெய்ப்பத் திருவுருவாய்—முன்ன
ரறுமீன் முலையுண் டழுதுவிளை யாடி
நறுநீர் முடிக்கணிந்த நாதன்—குறுமுறுவற்
கன்னியொடுஞ் சென்றவட்குக் காதலுருக் காட்டுதலு
மன்னவள்கண் டவ்வுருவ மாறினையுந்—தன்னிரண்டு
கையா லெடுத்தணைத்துக் கந்தனெனப் பேர்புனைந்து
மெய்யாறு மொன்றாக மேவுவித்துச்—செய்ய
முகத்தி லணைத்துச்சி மோந்து முலைப்பா
லகத்துண் மகிழ்பூத் தளித்துச்—சகத்தளந்த
வெள்ளை விடைமேல் விமலன் கரத்திலளித்
துள்ள முவப்ப வுயர்ந்தோனே—கிள்ளைமொழி
மங்கை சிலம்பின் மணியொன் பதிற்றோன்றுந்
துங்க மடவார் துயர்தீர்ந்து—தங்கள்
விருப்பா லளித்தநவ வீரருக்குண் முன்னோன்
மருப்பாயுந் தார்வீர வாகு—நெருப்பிலுதித்
தங்கட் புவன மனைத்து மழித்துலவுஞ்
செங்கட் கடாவதனைச் சென்றுகொணர்ந்—தெங்கோன்
விடுக்குதியென் றய்ப்பவதன் மீதிவர்ந்தெண் டிக்கு
நடத்தி விளையாடு நாதா—படைப்போ
னகந்தை யுரைப்பமறை யாதி யெழுத்தொன்
றுகந்த பிரணவத்தி னுண்மை—புகன்றிலையாற்
சிட்டித் தொழிலதனைச் செய்வதெங்ங னென்றுமுனங்
குட்டிச் சிறையிருத்துங் கோமானே—மட்டவிழும்

பொன்னங் கடுக்கைப் புரிசடையோன் போற்றிசைப்ப
முன்னம் பிரம மொழிந்தோனே—கொன்னெடுவேற்

றாரகனு மாயத் தடங்கிரியுந் தூளாக
வீர வடிவேல் விடுத்தோனே—சீரலைவாய்த்

தெள்ளு திரைகொழிக்குஞ் செந்தூரிற் போய்க்கருணை
வெள்ள மெனத்தவிசின் வீற்றிருந்து—வெள்ளைக்

கயேந்திரனுக் கஞ்ச லளித்துக் கடல்சூழ்
மயேந்திரத்திற் புக்கிமையோர் வாழச்—சயேந்திரனாஞ்

சூரனைச்சோ தித்துவரு கென்றுதடந் தோள்விசய
வீரனைத்தூ தாக விடுத்தோனே—காரவுணன்

வானவரை விட்டு வணங்காமை யாற்கொடிய
தானவர்க ளற்படையுஞ் சங்கரித்துப்—பானு

பகைவன் முதலாய பாலருடன் சிங்க
முகனைவென்று வாகை முடித்தோய்—சகமுடுத்த

வாரி தனிற்புதிய மாவாய்க் கிடந்தநெடுஞ்
சூருடலங் கீண்ட சுடர்வேலோய்—போரவுண

னங்கமிரு கூறா யடன்மயிலுஞ் சேவலுமாய்த்
துங்கமுட னார்த்தெழுந்து தோன்றுதலு—மங்கவற்றுட்

சீறுமர வைப்பொருத சித்ரமயில் வாகனமா
ஏறி நடாத்து மிளையோனே—மாறிவரு

சேவற் பகையைத் திறல்சேர் பதாகையென
மேவத் தனித்துயர்த்த மேலோனே—மூவர்

குறைமுடித்து விண்ணங் குடியேற்றித் தேவர்
சிறைவிடுத்தாட் கொண்டளித்த தேவே—மறைமுடிவாஞ்

சைவக் கொழுந்தே தவக்கடலே வானுதவுந்
தெய்வக் களிற்றைமணஞ் செய்தோனே—போய்விரவு
காம முனிந்த கலைமுனிவன் கண்ணருளால்
வாமமட மானின் வயிற்றுதித்துப்—பூமருவு
கானக் குறவர் களிகூரப் பூங்குயில்போ
லேனற் புனங்காத் தினிதிருந்து—மேன்மைபெறத்
தெள்ளித் தினைமாவுந் தேனும் பரிந்தளித்த
வள்ளிக் கொடியை மணந்தோனே—யுள்ளமுவந்
தாறு திருப்பதிகண் டாறெழுத்து மன்பினுடன்
கூறுமவர் சிந்தைகுடி கொண்டோனே—நாறுமலர்க்
கந்திப் பொதும்பரெழு காரலைக்குஞ் சீரலைவாய்ச்
செந்திற் பதிபுரக்குஞ் செவ்வேளே—சந்ததமும்
பல்கோடி சன்மப் பகையு மவமிருத்தும்
பல்கோடி விக்கினமும் பல்பிணியும்—பல்கோடி
பாதகமுஞ் செய்வினையும் பாம்பும் பிசாசுமடற்
பூதமுந்தீ நீரும் பொருபடையுந்—தீதகலா
வெவ்விடமுந் துட்ட மிருகமுத லாமெவையு
மெவ்விடம்வந் தெம்மை யெதிர்ந்தாலு—மவ்விடத்திற்
பச்சைமயில் வாகனமும் பன்னிரண்டு திண்டோளு
மச்ச மகற்று மயில்வேலுங்—கச்சைத்
திருவரையுஞ் சீறடியுஞ் செங்கையு மீரா
றருள்விழியு மாமுகங்க ளாறும்—விரிகிரணஞ்
சிந்தப் புனைந்த திருமுடிக ளோராறு
மெந்தத் திசையு மெதிர்தோன்ற—வந்திடுக்க

ணெல்லாம் பொடிபடுத்தி யெவ்வரமுந் தந்துபுகுந்
துல்லாச மாக வுளத்திருந்து—பல்விதமா
மாசுமுத ஞற்கவியு மட்டாவ தானமுஞ்சீர்ப்
பேசுமியல் பல்காப் பியத்தொகையு—மோசை
எழுத்துமுத லாமைந் திலக்கணமுந் தோய்ந்து
பழுத்த தமிழ்ப்புலமை பாலித்—தொழுக்கமுட
னிம்மைப் பிறப்பி லிருவா தனையகற்றி
மும்மைப் பெருமலங்கண் மோசித்துத்—தம்மைவிடுத்
தாயும் பழைய வடியா ருடன்கூட்டித்
தோயும் பரபோகந் துய்ப்பித்துச்—சேய
கடியேற்கும் பூங்கமலக் கால்காட்டி யாட்கொண்
டடியேற்கு முன்னின் றருள்.

கந்தர்கலிவெண்பா

முற்றிற்று

---

## வரலாறு

குமரகுருபர சுவாமிகள் ஐந்தாண்டு வரையும் ஊமையாய் இருந்து, ஐந்தாமாண்டிலே திருச்செந்தூர் முருகக் கடவுளது திருவருளினாலே தமிழ்ச் செய்யுள் பாடுந் திறமையுண்டாகப் பெற்றுக் கந்தர்கலிவெண்பா என்னும் இந்நூலை அருளிச் செய்தார். கல்வியில் விருப்பமுடையவர்கள் இக் கலிவெண்பாவை நாடோறும் முறையாக உளங் குவிந்து அன்புடன் ஓதக்கடவர்.

திருச்சிற்றம்பலம்

உ

திருச்சிற்றம்பலம்

# திருத்தணிகையாற்றுப்படை

## காப்பு

### நேரிசை வெண்பா

சீரார் தொடைபுனைந்த செம்பாவை முன்புபோ
லேரார் தணிகை யிளவற்கு—நேராகக்
கூட்டுமால் வேற்றுருவங் கொள்ளாமை யெப்பொருளுங்
காட்டுமா லங்கைக் களிறு.

---

பொன்மலைத் திருவிற் பன்னக நெடுநாண்
மாயப் பகழித் தாயக் குரிசின்
முரணமை யிருகாற் றிரண்மறைப் புரவி
அலர்மறை வாழ்க்கை வலவத் தேரும்
வழங்குதற் கமையா வண்மையி னிசைக்கும்
பெருந்தகு பாடற் றிருந்திசைப் புலவ
ரறன்கடைக் ககலாப் பிறங்குதம் முளத்திற்
சாலாக் கல்வி மாலார்க் ககலா
வரன்மாண் டமைந்த வுரன்மாண் பலகையிற்
றண்டா விருப்பி னெண்டோண் முதல்வனோ

டாறது பயிலிய வருமறைக் கேள்வி
மாயிருந் தமிழ்க்கடல் வடமொழிக் கடலென்
றுயிரு கடலு மாற்றலிற் கடையா
ஐயந் திரிபெனு மழல்விடம் படாது
வெய்யசெம் பொருளெனு மிளிர்தீஞ் சுதைத்திர
ளாராக் காதலி னாராது கைப்பவு
மூன்றுவிர லழுந்தா துடறசை திணிந்து
கான்றதேந் தெரியற் கருங்குழன் மகளிர்க்
கணங்குள நிறீஇ யாருயிர் கவர்க்கும்
வளங்கவின் கொழிக்கும் விளங்குசீ ரிளமையும்
பல்வகைத் தொழிலும் பண்புற நவின்று
சிந்தை வழிச்செலு மைந்துநிலை பெறீஇய
ரளவினைத் திறத்தி னயரா யாக்கையு
மளகைக் கோமா னுளமழுக் கறுப்ப
நிலந்தினக் கிடந்த நெடுநிதிச் செல்வமு
நீடின் றிரியு நிலைமை நாடி
ஏற்போ ரங்கைக் கொடைக்கட னிறுத்து
நோற்போர் நோற்கும் நோன்மைசா லறனெனு
முறுதி யாக்க மொய்யெனக் கழலவும்
வரைத்திரள் புரள்விற் றிரைத்தெழுந் திரைக்கணம்
விலங்கின வழங்கும் விழுக்கலன் செறித்து
மொளிறுவே லழுவத் துருத்தெழுந் தடர்த்துக்
குளிறுவார் முரசும் பிளிறுமால் யானையும்
வைத்தபல் படையும் வழாதுகைக் கொண்டு
பராபவத் தெவ்வர் வரிசையி னிறுக்கும்
திறைகே ழுரிமை முறைநேர் நடாவியும்

தத்தந் தொழிலிற் றலைநின்று வளர்க்கும்
பொருளெனும் வெறுக்கை போற்றாது நழுவவும்
மிஞிறுந் தேனும் வெறிகவர் தும்பியும்
கஞலிப் பட்குரல் கஞற்றுவ சுழலும்
இருடுஞ்சு மலர்ப்பொழின் மருள்சில் லோதிப்
பூவார் சோலைப் புறத்தகப் படுத்து
மேவரத் தடைஇய விதுக்குறை கடுக்கும்
திவளொளி மாண்டகு வயுநுதல் வாணுதல்
தீங்கதி ரமிழ்தத் திங்கட் பிளவி
னீங்குகார்க் கறையு நிலாத்தவழ் வெண்மையும்
விராயுருக் கொண்டென மிளிர்மதர் மழைக்கட்
செங்குமு தத்துச் சிறுமதி கிடந்தெனச்
செவ்வா யகத்த செயிர்தீர் வெண்பல்
விலங்குபாய் கதிர்க்குழை வீழ்ந்துசெகிற் றுயல்வர
வள்ளையி னொழுக்கிய வள்ளொழிற் செஞ்செவி
செவ்வாய் கவுட்டுணைச் சேல்விழி நெற்றி
இவ்வா யுறுப்பா னின்சுவை யமிழ்த
உறுகொடை யாற்றி வறிதுகொடை காட்டும்
வளைநிதி தன்னைக் குடுமிகைக் கொண்டவ்
வளைமேல் கொண்டு வயங்கொளி தோற்றும்
பதும மாநிதி யிதுவெனக் கவன்று
தாவா வுறுவர் மேவா வுள்ளமு
மோவப் படமென வுஞற்றுறு திருமுகப்
பகுவாய்ப் பொற்குழை மகரமீ றுஅன்
றைதுமீக் கிடத்தலி னைங்கணைக் கிழவோன்
வெய்துதன் றுணை விளக்கிய வுயர்த்த

வணங்குதவழ் கொடியி னிணங்குபணை வேய்த்தோட்
காம்புபடை யடுத்த கதிர்மணிக் குன்றின்
தோள்புடை யடுத்த சுடர்ப்பூட் கொங்கை
குவிமுலைத் துணைகொள் சவிமணி மார்பிற்
றத்தம தேணி கடவாது தணிய
தள்ளுநின் றுணர்த்துந் தள்ளாக் குறியி
னணிவயிற் றொழுகிய மணிமயிர் வல்லி
நெடுகுமயி ரொழுக்கு நெடுவழிப் படர்ந்து
கடுமுலைக் கோட்டுக் களிறுபட வெடுத்த
படுகுழி யனைய பயம்படு கொப்பூழ்
நடுநின்று வாழ்வோர் நலத்தொடு முரண
நடுநின்று தேய்ந்த விடுகுகொடி மருங்குல்
வையக முயிர்த்தோன் மதிபுனைந் தியற்றலிற்
கைபுனைந் தியற்றுங் கதிர்மணித் திண்டேர்
கடாதுருக்கொண் டோடுந் தடாதமை யல்குற்
கீழ்மே லாகக் கிளர்ந்தெழி னத்தகு
வாழையொடு பொருஉம் வார்ந்தசெறி குறங்கின்
வேற்றொரு தாமரை மேவந்து தொழில்செய
வீற்றிருந் தருளும் விரைமல ரேய்க்கு
மலத்தக மலர்ந்த நலத்தகு சீரடி
மயிலியன் மருளு மியன்மட மாதரைச
சீலம் விழைவே செயல்குறி யிவற்றான்
நால்வகைப் பேதமு மாலறத் தெரிந்து
மருந்துமந் திரத்துந் திருந்துவிழை வேற்றித்
தேயம் பயிற்சி சேட்டை யியல்பே
இன்பத் துறையே யிருவகைத் தொழிலே

இங்கித வகையே யிவைநனி நாடி
இருவகைப் பொழுதொடு மேற்ப மருவிய
மூன்று காலமு மூன்று வேகமு
மொப்பக் கலவி யுளுற்றுபே ரின்ப
அவாவுளம் பொதிந்துகொண் டூற்றுவெம் படர்நோய்
தவாதுபிறை போலத் தணிவின்றி வளர
உவாமதி போல வுருவே தபவும்
கடவுட் பொங்கரும் தடமருப் பாவும்
சிந்தா மணியு நந்தா நிதிகளும்
கலன்முத லான வளம்பல கொழிப்ப
பல்வகைக் கணமும் பணிந்தெழுந் தேத்த
தெவ்வுத் தானவ ரவ்வித் தேங்க
விரிகதிர்ப் பிழம்பு மரிமான் றவிசிற்
களிகூர் நெஞ்சாற் காவல் வைகு
மொளிகூர் மகவா னுறுபத மாதி
எளிதினுய்த் தளிக்குந் தெளிவினை போலாது
பார்முதிர் புணரிப் பாயற் கடவுள்
வார்மதுப் பொகுட்டு மரைமலர்ப் புத்தே
ளென்றிவர் தமக்கு மெய்தற் கரிய
சரியை கிரியை யோகத் தவநிலைப்
பெயர்பொச் சாப்பப் பிறக்கணித் துகவு
மூன நாடக முளுற்றிய திருவருள்
ஞான நாடக நவிலிய மாறனு
மாறு மலப்பகை நோனது கழலத்
தானு னந்தத் தனியுயிர் மடங்கக்
கட்காண் குருமுதற் கடவு ளாகி

உயிரே யவத்தை யுணர்த்துந் தன்மை
அருளி னியல்பே யாங்கதன் பயனே
பெரும்பெயர்த் திறமே பெற்றவர் முறையென்
றினைவகை யேழு மறிறபத் தெரிப்பத்
தாழாது கேட்டு வீழாது சிந்தித்
தங்கைக் கொண்ட வமிழ்தெனத் தெளிந்து
பொங்குபே ரின்பம் புணராது புணரு
நிட்டை கூட நிலையது நீங்கவும்
பஃறிறப் பகைஞர் படையொடு நேர்ந்தென
வெஃறிறங் காட்டாது வீற்றுவீற் றுடற்றும்
பிணிக்கோட் பட்டுப் பேதுறு மனத்தான்
முந்தையோ ரீட்டு முழுநிதிச் செல்வமும்
பொய்ம்மை யாளர் புகழெனத் தேய
நோய்ப்பகை யாளர்க்கு நொடிந்தென் சிதரிற்
பல்வகை மருந்துக்குப் பகர்விலை தொலைச்சி
அதுவென வெறுவிய தன்றுமற் றிதுவென
முன்னைநாண் மருந்தை முறைமுறை யிகழாப்
பின்னைநாண் மருந்தைப் பெட்டுவாய் மடுத்துப்
பண்டைநோய் மேலும் பருகுபன் மருந்தான்
மண்டுநோய் வேறு மரீஇக்கிளர்ந் துருப்ப
உரைத்தவென் மொழிவழி யொழுகினை யல்லைகொல்
பெருத்துநோய் தெறுமென மருத்துவ ரொழியத்
தெய்வத் திறத்தாற் றீர்வுகாண் பாமென
உள்ளூர் வயின்வயிற் றெள்ளிதி னோங்கும்
புரிமுறுக் கவிழ்க்கும் பூம்புனற் றீர்த்தமும்
பல்வகைத் தெய்வப் பசும்பொற் கோட்டமும்

படிந்தும் பணிந்தும் பயன்கா ணுமை
அணியயற் புறநகர் மணிகெழு கோட்டமும்
விரத நியதிப் பரவுக டனுதிப்
பல்வேறு தொழிலொடு படர்ந்துபணிந் தேத்தியுங்
கவலை நெஞ்சங் கையறு பிணையச்
சேட்சென் றொராஅல் செய்தென வலித்து
மிக்கநோய்க் கிரங்கு மொக்கல்புறந் தழுவ
வறுமைக் கவற்சியு மிறுகுறப் பிணிப்ப
வில்லுந் தமரு மிசைபயி னுடு
மென்மெலக் கழீஇ விரிகதிர்ப் படையா
விருள்கால் சீக்கு மெழுபரித் தேரோன்
கடுஞ்சினந் திருகிய கொடுமைகூ ரமயத்து
முளிமுதன் முருக்கிய முழுங்கழல் போழ்ந்து
வளியுலாய்ப் புறத்தும் வழங்குநர்த் தெறூஉம்
பைதரு கானத்துப் படர்நெறி யொதுங்கலின்
முந்துபர லுழந்த வெந்துயர்க் கொப்புள்
பிந்துபர லுழத்தொறூஉம் பிளந்துநீ ருகுப்ப
இயங்காச் செல்ல லிணையடி தாங்க
வெயிற்பகை யுழந்த வேர்ப்புற நனைப்பச்
சூறை மாருதந் துறைத்துறை யெடுத்த
பூழி போர்த்த பொறுபறு மாசு
கலுழ்நீ ரல்லது கயந்தலை யின்மையிற்
கழுவுதல் புரியா முடைபயில் காயமோ
டிலையின் மராத்த நிலையின் மென்னிழற்
சேய்வரல் வருத்தஞ் சிதைபாக் கசைந்து
நெட்டுயிர்ப் பெறிந்து நினைதரு மிரவல

ஆற்றா நின்னுளத் தவலமினி யொழிக
புளிஞரு மருளும் போக்கருஞ் சுரத்து
வீற்றுவீற் றெழுகு மாற்றினிற் றிரியா
தொருநெறி யெதிர்ப்பா டுற்றது முன்னைப்
பழுதறு பெருந்தவப் பயனது போலும்
விழுமவெந் துயர் முழுதொரால் வேண்டிற்
பணியா தின்னே காணிய வெழுமதி
தோறேர்க் கோடுந் திருக்கோட் டிரலையி
ரெய்ப்பகை யென்ன வாய்ப்பிலா தமையு
மடுத்தடுத் தியானு மலமரு காலை
ஊனுநர் வைகிய சீர்கெழு மாந்தரு
ளீண்டி கலவி யுறுதொழின் முதலா
மண்டிய பகுப்பின் வரையறைப் படாது
வேறுவே றுயிர்க்கும் வெம்பிணி யாளருங்
கருவி போழ்ந்த பெரும்புண் ணுறுநருங்
குட்டம் பெருநோய் முட்டிய வாத
முயலக ளாதி மொய்ப்பிணி யுழவரும்
பாப்புக்கோ ளாதிப் பலவகைக் கடிஞரும்
பேய்கோட் படுநரும் பித்துமீக் கூர்நரு
முறுப்புக் குறைநரு மொண்குண மிழநரு
மின்ன பஃறிறத் தெனைவரு மன்றிக்
கல்விவேட் டவருங் காண்முளை வீழ்நருஞ்
செல்வம் வீழ்நருந் தேயநா டுநரு
மலர்முலை மடவார் கலவிகா முறுநரு
மிரண்டறு கலப்பி னின்பநச் சுநரு
மினையபல் வேறு நினைவின ரெவரும்

வாட்டுவ தணைப்பவும் வேட்டன மணைப்பவு
மேற்கொண் டெழுந்து மேனு ணோர்ந்த
பொற்கிழித் திரளும் பூந்துகின் முடையும்
மணிப்பூட் பேழையும் வார்தரு கவரியும்
பைம்பொற் கவிகையுஞ் செம்பொற் சிவிகையு
மூர்தியுங் கொடியும் வார்விசி முரசுஞ்
சூட்டுவா ரணமுந் தோகைய மயிலுந
தத்தமக் கியன்ற தழீஇயினர் போது
மோசைதிக் கதிர்க்கு மாசனப் பெருக்கங்
காண்டொறுங் காண்டொறு மீண்டிய களியே
னுடங்குசென் றிறுப்பா ரொருப்பட் டெழலுந்
துன்னிய விழுமநோய் தன்ன நீங்க
உறுதுயர் யாக்கை சிறிதுவலி யெய்த
ஒய்யெனக் கிளர்ந்த வுவகைநெஞ் சத்துப்
படர்பே ருக்கம் பிடர்பிடித் துந்த
வெழுந்தன னிம்மென வேகுத றொடங்கி
அடிபெயர்த் தோறு மனேர்ப்பிணி கழுவ
உவரி நீரிற் றவவெழு மகிழ்வா
லவன்மிசை பாடாஅ வணைத்து நெறியாகச்
சென்றன னடுத்து மன்றனகர் நுழைதலும்
வெருவுநோ யிருகூற் றொருகூறு விலங்கக்
காட்சி யார்வங் கையிகந் தீர்த்தலின்
நறுமணங் கமழு நந்திநதி குடையா
தெழுமுனி வரர்த மெழுசுனை யாடா
தலைமலைப் பகைஞ னருட்கயம் படியாது
நாக வண்சுனை நன்புன றோயாது

விண்டு தீர்த்த மேவரக் குளியா
தலரவ னிருஞ்சுனை யழிபுனன் முழுகா
தெத்துயர்த் திரளு மத்தினத் தகற்றுஞ்
சரவணப் பொய்கைத் தடம்புனற் றுளைந்து
மென்மெலக் குன்ற மீமிசை யிவர்ந்து
காலை நண்பகன் மாலைமூப் போதும்
வைகல் வைகன் மலர்மூன்று தெரிக்கும்
நீலப் பைஞ்சுனை நேர்கண்டு தொழுது
புரண்டனர் சூழும் பொற்பினர் மிடைதலி
னடியிடப் படாஅ வாரிடை வீதி
ஒதுங்குபு பைப்பைய வொருமுறை சூழ்ந்து
தாவுமெண் ணிலத்துத் தோயாது வெறுத்த
தேவர்கள் குழுவுந் தேயத் தொழுதியுந்
தடைஇய வாய றடையாது நுழைந்தாங்
கொருவர்மெய் மணிப்பூ ணொருவர்மெய் வடுச்செய
நெருங்கிச் சென்று நித்தில வாணகை
வள்ளி நாயகி மணத்தினை முடித்த
கள்ள வேழக் கடவுளைப் பணியா
வீரரொன் பதின்மர் வார்கழ றாழ்ந்துமற்
றாவயின் வதியு மமரரைத் தொழுது
பூதப் பகுப்பும் பூதகா ரணமு
மிந்தியக் கூட்ட மிரண்டுமுக் குணமு
நந்துமாங் காரமு நலத்தகு கரணமு
மிறுவாய் மாயை யெழுவா யேழுஞ்
சுற்ற மென்னத் தோன்றிய வைந்தும்
விராய்நின் றியக்கி மராதுநின் றொளிரு

மாரா வின்ப வருணிலை யம்ம
தீரா மலப்பிணி தீர்த்தருள் கொழிப்ப
அருட்டிரு வுருவுகொண் டவிர்மணித் தவிசின்
ஞான சத்தியுங் கிரியா சத்தியும்
வானவர் கோமான் வளம்பயின் மகளுங்
கானவர் நலங்கூர் கன்னியு மென்ன
இரண்டு பாலு மிருந்தனர் களிப்பக்
கண்டமெய் யடியர் கலவினர் போற்றக்
காணு விண்ணவர் கலவா தேத்தக்
கட்கடை யொழுகுங் கருணை நோக்கமோ
டினிதுவீற் றிருக்கு மெழிலினேர் காண்டலு
மெஞ்சுநோய் துவர விரியல் போக
விஞ்சுநாற் பொருளு மேவந்து துவன்ற
ஆற்றாக் கடுந்துய ரருநர குழப்பவர்
நோற்றமுன் னூழ்நனி நூக்கலு நொடிப்பி
னுயிடை நின்று மாயிருந் துறக்கம்
புக்குழிப் பொலிவித் தொக்கதோற் றத்து
விம்மித மகிழ்ச்சி மெய்தவ வீக்க
ஒருகதி விட்டுமற் றொருகதி யடைந்தவர்
மயங்கறி வென்ன வுயங்குமுன் னுயங்க
லெய்யே னுகி யிறுமாப் பெய்தி
செய்முறை தெரியாது திருமுன் னிற்ப
இருமைப் பயனு மெளிதினுற் றளிக்கும்
பூதியுந் திருவுருப் பூச்சுநன் களித்திட்
டென்னைத் தன்வச மாக்கிய வுலகை
என்வச மாக்கி யென்றுமோ ரியல்பி

னின்றதன் னிலையி னீங்கா திருத்தி
விடாதுவிட் டருள மெய்யருண் மேற்கொண்
டொழியா தொழிந்து வழிவரு கின்றன
னத்தகு பெருமா னருள்விளை யாடலைச்
சற்றிது கேண்மதி தவமேம் படுந
விச்சொன் றின்றி விளைவுமிக் காக்கியும்
விச்சுமிக் கிருப்ப விளைவுமுழு தொழித்து
மொளிதலை வளர்ப்ப வொளிகளைத் தணித்து
மழுக்கினைக் கழுவ வழுக்கினை யேற்றியு
முறுந்தொழி லாளர்க் குறுதுசே ணகன்றும்
வறுந்தொழி லாளர்க் குவந்துடன் கலந்தும்
விதித்தநல் விதிகளை விலக்கென வுவர்த்தும்
விலக்கினை விதியென மேதக நயந்து
மித்தகு தொழின்மை நித்தலு மியற்றிப்
பெற்றபே ரின்பருள் பெற்றிய னஃதான்
திருமுது குரவ ரெழுவாய்ச் சுற்றமொடு
துயரிலங் குலகந் தோற்றுதற் பொருட்டுத்
தந்தை யென்ன வைந்துமுக னாகியு
மன்னையென்ன மனோன்மணி யாகியு
முன்முறை தந்தையர் தாய ரென்ன
நாதனுஞ் சிவமே நலத்தகு விந்து
மேதகு சத்தி வேறுவே றாகியும்
பின்முறை தந்தையர் தாய ரென்ன
மகேச னுருத்திரன் மகேசையுமை யாகியுந்
தமைய னென்னத் தந்திமுக னாகியுந்
தனைய னென்னத் தாமரை மருட்டு

மூவிரு முகமு முன்னான்கு கரமு
மருவிவீற் றிருக்கு மொருதா ளாகியுங்
கடப்படு மிரண்டு கைசோ ளியங்க
நாண வார்குழ னகையிழை யானையைக்
கானவ ரரும்பெறற் காமரு மாதினைக்
கற்பினிற் களவினிற் பொற்புற மணந்தும்
பொருட்டுறை முழுதும் புரையின்றி நடப்ப
அண்டகோ டி-ஞ மரைக்கணத் தளவையின்
வறிதுநகை தோற்றி யிறுவது புரியு
மெறுழ்வலி யாற்ற லெய்யான் போல
மந்திரந் தூது செல்விகன் மற்று
மாற்றிவெஞ் சூர்வலி காற்றியுல கோம்பியு
மெல்லா மறிந்தறி விக்குமவ் வியல்பைக்
கண்கூ டாகக் காட்டுவ னதாஅன்று
மூவகை யுருவாய் மூவுல குயிர்த்து
மூவகை யுருவு முயங்காப் பரம்பொருள்
பந்தம் வீடு பல்லுயிர்க் கமைத்தும்
பந்தம் வீடு படாத பெருந்தகை
ஆருயிர்க் குயிரா யமைந்தன நடாவியு
மாருயிர் காட்சிக் கணுகா வருந்திறற்
றுணை நின்று தற்காண் டனிமுத
லளிகளி னளியா வளிகளுஉங் களிய
ணொளிகளி னொளியா வொளிகளுஉங் கொளியன்
வெளிகளின் வெளியா வெளிகளுஉங்கு வெளிய
னளவினி னளவா வளவினூஉங் களவ
னின்று னொருவனை முன்னுபு சென்றவன்

பூங்கழற் சேவடி போற்றுதி யாயின்
பேரரு நுறுத்த பேதுறு நோயுங்
காரண நோயுங் கையிகந் திரியக்
கடைக்கணித் தருளிக் கரையினுற் பொருளுங்
கொடைக்கட னீயிர் குறித்த வளவையி
னெண்மடங் காற்றி யென்றுந் தீரா
அகம்படித் தொழின்மையி னழுத்துவ னன்றே
ஆடகப் பசும்பொற் பாடகச் சீறடி
நாடக மகளிர் நவிற்றிய வாடற்
சிலம்பு கிண்கிணி தீங்குழன் முழவ
முரசந் தூரி முழங்கொலி யானும்
விண்டல முரிஞும் வியன்மணிப் புரிசைக
கொண்டல்கண் படுக்குங் கோபுர நிரைக
ளாடுகொடி சுமந்த மாடநெடு மாளிகை
இன்னன பிறவு மன்னுத லானு
மொலிதிரைக் கடலு மோங்குபல் வரையு
முடங்குதொக் கண்மி யொண்டுறை யாடி
இருபகுப் பினவா யிருகரை மருங்கும்
நோற்றன வதியும் பேற்றினைத் தெரிக்கு
மும்மையு மளிக்கு மூவா முழுமுத
லைம்முக னாகி யமர்ந்தவி ரட்டமு
மறுமுக னாகி யமர்ந்தகீழ்க் கோட்டமும்
பொன்னு மணியும் புதுமலர்க் குலையும்
திரைக்கையிற் றாஉய்த் திளைத்தெழுந் தொழுகு
நந்தி யாற்று நறும்புனன் மடுக்குங்
குரங்குகதிர்ச் சாலியங் கொழுந்தீங் கரும்புங்

குலைப்பூங் கதலியுங் கோட்டெங் கினமுங்
கோள்கண்மீப் பரிக்கும் பாளைக் கமுகும்
வயின்வயிற் பொதுளி வளம்பல வுறந்த
முருகலர்ப் பண்ணை யொருபுறஞ் சூழ
அவரை துவரை யரிற்கதிர் வரகு
சாமை யிறுங்கு தழைந்தன விளையுங்
கொல்லை முல்லை கோழிணர்ப் பூவையும்.
பந்தர் மாதவி யுந்திய கோங்கும்
பைங்காற் கொன்றை பசும்பொற் சுண்ணமும்
வளியுளர்ந் தெடுப்ப மறுபுல வரைப்பும்
போர்த்தன கமழ்ந்து பொறிவண் டழைக்கு
மரும்புலப் புறவ மொருபுறஞ் சூழச்
செருந்திமந் தாரங் குருந்துவழை பாடலம்
கோங்கு சண்பகம் வேங்கைமகிழ் சந்தனம்
குங்கும மரவங் கோழகிற் கப்புர
மில்ல மாவிரை வில்லம் பாங்கர்
பிடர்ஞெமை நமையாண் டடர்வரை யெகின்சே
வசோகந் தேக்கே யாத்தி சூத
மருது போதி வஞ்சி காஞ்சி
ஞாழல் புன்னை நரந்தை மாதுளை
பொகுட்டரை யிருப்பை பூஞ்சினைச் சரள
முன்னம் பலாசு முருக்கை வருக்கை
சோதி மாமரந் தொத்தின நாக
மன்றி யனைத்துந் துன்றிய கறிக்கொடி
மல்லிகை முசுண்டை மற்றும் பரித்து
மணங்கமழ் காமர் வல்லி யொன்றே

இணங்குபூத் தருந்த னிகழ்ச்சியை நாடி
வசைபடத் தத்த மிசைவிளக் குவபோற்
பொறிவரிச் சுரும்பும் வெறிநுகர் தேனுந்
தோகைமா மயிலுந் தொடிக்கட் பூவையுங்
கிள்ளையுங் குயிலுந் தெள்ளுகுரற் காட்டி
வண்டளிர்ப் பொதும்பர் மருங்குகால் வளைஇ
நுண்டளி நறுந்தே னொலாது திவளுந்
ததைமலர்ச் சினைய தருவைந் துடுத்த
பொன்னகர் வறுமையை முன்னிநக் காங்கு
வேரனரன் றுக்க வெண்மணிக் குப்பையும்
பிறழ்பற் பேழ்வாய்ப் பின்முன் பார்வைச்
சிங்கவல் லேறு பொங்குசினந் திருகி
எழுந்துதாய்த் துமிப்ப விருங்கடா யானை
மத்தகம் பிளந்து மாயிருங் குன்றத்து
வெண்புன லருவி வீழ்வன போலச்
சலசல வுக்க தரளக் குவாலு
நிலவுராய்த் தவழ நெமிர்ந்தன மிளிருங்
கவான்மலைப் புனத்துக் கதிர்த்தினை காக்கு
முவாமதி முகத்தா ரோச்சினர் விடுக்குங்
கவணையின் மணியோ சங்குற் கானவர்
விலங்கினந் துரக்கு மிலங்குகூர்ங் கணையோ
வலைத்தர விசும்பி னிலைத்தரு கலன்கள்
பல்வகை மின்கொடி யொல்கிவீழ்ந் தென்ன
வெல்வரை நிரையும் பில்குகதிர் மணிப்பூங்
காழுந் தாமமுங் கவினத் ததைஇய
மண்டப மேடை மாடமே னிலைக

ளியங்கா னிலத்தே ரியங்குமணிப் பஃறேர்
விமானவூர் திகளும் வேற்றுமை தோற்று
வளம்பல தழீஇயெம் மருங்குமெய் யடியா
ரிடுமகிற் றாமமு மெக்கரிற் குவைஇய
படரொளி யூட்ட பளிதக் குப்பை
கான்றதீம் புகையுங் கழுமிவிண் கெழுமி
இமையார் நாட்ட மிமைப்பன செய்ய
மல்ல லாவண மறுகும் வீதியு
நாடொறு மெழிலா னவநவ மாகி
இமைக்குநர் நாட்ட மிமையாமை செய்ய
மண்டலம் விண்டல மாற்றிய தென்ன
இறும்பூது பயவா வோர்குலாய்க் கிடந்த
திசைகாப் பாள ரிசைநிறை தேவ
ரலரவ னெடுமா லாதிய கடவுளர்
முதுக்குறை யன்பின் முறைமுறை பழிச்சச்
சாறுநா ளல்லது வேறுநா ளறியா
துலகமுழு தோம்புபல் சிறப்பி
னிலைபெறு தணிகை மலைகிழ வோனே.

திருத்தணிகையாற்றுப்படை

முற்றிற்று

உ

திருச்சிற்றம்பலம்

# திருச்செந்திற்கலம்பகம்

## பாயிரம்

மதிக்கும் பரிதிக் கடவுளுக்கும்
வழங்கும் விழியா னருண்மதலைக்
கிதக்கும் படக்குங் கலம்பகப்பா
விசைக்குந் தமிழா லினிதிசைத்தான்
புதுக்குந் தமிழ்த்தென் கடல்கடக்கப்
பொருத்துந் தோணி போலியல்செய்
துதிக்குந் தமிழார் துறைசைநகர்ச்
சுவாமி நாத தேசிகனே.

## விநாயக வணக்கம்

நிலம்பக வீழ்சடை நீறணி வான்மைந்த
னீடயிலோன்
கலம்பகஞ் செந்தமிழ்ப் பாமாலை யாற்செந்திற்
கண்மருவு
சிலம்பக மெல்லடி வல்லபை கேள்வனைத்
திங்கள் வெண்கோட்
டிலம்பக யானை முகத்தானை வாழ்த்தி
யியம்புவனே.

# நூல்

## மயங்கிசைக் கோச்சகக் கலிப்பா

### நாலடித்தரவு-உ

சொல்வாய்மை தருங்கடவுட் சுருதிகரு தியபொருளைப்
பல்சான்ற பெருங்கேள்விப் பனிமலய முனிவினவ
அம்புயனு மறியாத வறமுதலாந் தமிழ் மூன்றுஞ்
சம்புவுமன் றுடனுணரத் தருவோய்நீ முருகோனே
கண்சுருங்க விரித்தபசுங் கலவமயி லெனத்திருமுன்
மண்சுருங்க விரித்தகுண மணியாழி யெழுபரித்தே
ரந்தினக ரனைத்தடுக்கு மணிமணிமா ளிகைப்புரிசைச்
செந்தினகர்ச் சினகரத்துத் திருத்தகவீற் றிருந்தனையால்.

### ஈரடித்தாழிசை-சு

ஊனாகி யுயிராகி யுணர்வாகி யுணர்வுதவுங்
கோனாகி வினையளவுங் குணத்தளவுந் தனக்களவாய்
விரவாதி யந்தமிலா வெளியாகித் தெளியாது
பரவாதி யருமுலவாப் பாமறையுந் தாமறைய
வாக்குமன முங்கடந்து மண்ணொடுவிண் ணிடத்தியற்றும்
போக்குவர வொழிந்துவிழிப் புலத்துருவு மருவமுமாய்
வேதாந்தஞ் சித்தாந்தம் விளங்குகலாந் தந்தெளிந்த
போதாந்த நாதாந்தப் புறத்தினும்அப புறம்போகி
உணர்ந்தாரு முணராரு முணராம லுயிர்க்குயிராய்ப்
புணர்ந்தாலு மாறுறு புலனலமுங் கலவாது
நின்றதனிப் பரம்பொருளா நினக்கொருபே ரிலையெனினும்
நின்றுருக னெனப்பெறுவ கிளையோய்நின் விளையாட்டே.

ஓரடி அராகம்-௪

அருமறை முறையிட வறைகழல் பறையிட
வடியரு ணினைவ துன்னடி
ஒருமையி னிருமையு முதவிய மதியென
வொளியொடு குளிர்வ தான்முகம்
வருமுலை வனிதைய ரிருவரு மயிலின
மழையென விழைவ தன்னெழில்
பெருகலை கெழுகலி கடலினு மெழுமடி
பெருகுவ துருகு நின்னருள்.

பெயர்த்தும்-ஈரடித்தாழிசை-௬

தாயென்றுந் தந்தையென்றுஞ் சகமீன்று தருமுனக்குச்
சேயென்று பின்னுமொரு திருநாமம் வருமாறென்
முந்திலென்றே யடியருள முளரிதொறு மிருந்தாய்க்குச்
செந்திலென்றே யுரைக்குமொரு திருப்பதியும் விருப்புளதே
அயிலேற்று வருங்கால மல்லானீ கொல்லாயோ
மயிலேற்ற மேனுனக்கு மற்றேற்றம் பெற்றிலையோ
ஓராறு பனிமதியி னொடுபவள வரையினிரைத்
தீராறு தினகரரு மிடையிடையே யுதித்தாங்குக்
கருணைபொழி திருமுகமுங் கணமணிக்குண் டலநிரையுந்
திருநெடுந்தோள் களுங்கமலச் சேவடியுந் தூவடிவும்
பாடாது நினையாது பரவாத வெனக்குவினை
கூடாத தொண்டரொடுங் கூட்டியுநீ காட்டினையால்.

நாற்சீரடி அம்போதரங்கம்-உ

பிறந்தது மிறந்ததும் பெரும நின்புகழ்
மறந்தது மல்லது வணங்கி லேனினைக்-

காமமும் வெகுளியுங் களிம யக்கமுந்
தாமிடை கலந்தெனைத் தலைம யக்கலால்.

நாற்சீரடி அம்போதரங்கம்-௪

உண்பது முடுப்பது முவந்து தேடினேன்
கண்படை நனவினிற் கலங்கி வாடினே
னுய்திற மிதுவென வுணர்வு போயினேன்
செய்திற மிதுவெனுந் தெரிவில் பேயினேன்.

முச்சீரடி அம்போதரங்கம்-௪

எவ்வா றெனையுய் யக்கொள்வா
யெழுதா மறையின் றிறத்துள்ளாய்
செவ்வா னனையான் றிருப்பிள்ளாய்
தெரியா தினியுன் செயல்விள்ளாய்.

இருசீரடி அம்போதரங்கம்-௮

மெய்யுநீஇ பொய்யுநீஇ விண்ணுநீஇ மண்ணுநீஇ
ஐயைநீஇ செய்யைநீஇ யாதிநீஇ சோதிநீஇ.

தனிச்சொல்

என வாங்கு

ஆறடிநேரிசையாசிரியப்பா-சுரிதகம்

நீயல தில்லை யாவையு முலக
மற்றவற் றிடையா னவத்துடற் பொறையொடு
கறங்கெனத் திரியாது பிறங்குசுற வெறியு
நந்தூர் கடற்றுறைச் செந்தூர் பரவுவன்

காமரு பூந்தொடைக் கடம்பநின்
றாமரை மலரடி தருகமா வெனவே. ௧

### வெண்பா

*எனதே குகன்செந்தி லேத்துதொழி லன்னேன்
றனதே யெனையாளுந தன்மை-வினவின்
மறத்திமணா ளன்புமுதல் வாழ்வையெலா நெஞ்சே
குறத்திமணா ளன்புகழே கொள். ௨

### கலித்துறை

*கொள்ளார் பவப்பிணி கூற்றுக்கஞ்
சாரன்பர் கூட்டமல்லா
னள்ளார் பிணியி னலிவு படார்தெய்வ
நாளுமற்றொன்
றுள்ளார் முருகன்செந் தூர்பிரி
யாதவ னொண்கமலக்
கள்ளார் விரைமலர்த் தண்டையந்
தாடொழக் கற்றவரே. ௩

### ஆசிரியவிருத்தம்

*கற்றாலு நீடூழி கழித்தாலுங் கழியாத
கரையில் வாழ்வு
பெற்றாலு முருகனடிக் கன்புபெறா தவருலகிற்
பிறவி தீரா
ரிற்றாலுங் கலிநலிய விரந்தாலும் பேதையரா
யெழுத்தா றுள்ளத்

தற்றூது மவனிருக்குஞ் செந்திலென்றூர் முந்திலென்று
மடைவர் தாமே. ௪

## ஆசிரியப்பா

தாமரை பயின்ற நான்முகக் கடவு
ளெழுதா மறைப்பொருட் பழுதாங் குரைப்ப
வீங்குமணிக் கடகந் தாங்குதிணி தடக்கை
முன்வருத் தியவா றின்னமும் வருத்த
விரும்பிய தாலெனத் திரும்பிட நஞ்சேய்
பாயிருள் பருகும் பல்கதிர்க் குழவி
ஞாயிறு சுறவெறி நாண்முரி திரைமுகட்
டெழுவது போல மழைதழை கலாபச்
செறிமயிர்ச் சிறையார் பொறிமயிற் புறத்துச்
சேயொளி மேனி திகழ்வீங் கெழுந்தனை
தெய்வவான் சுருணியு மொய்வரை யருணியுந்
தூவலங் கயிலுஞ் சேவலங் கொடியு
மாறு முகமு நீறணி புயங்களும்
பண்டைய மறைபுகழ் தண்டையந் தாள்களுங்
கந்தநின் றைமமுஞ் செந்திலம் பதியும்
வணங்கவு நினைக்கவும் வாழ்த்தவு
மிணங்கலிற் பரவினே னெனை விதித் ததற்கே. ௫

## வெண்பா

அதற்கிதற் கென்றுள் ளவம்போக்கி யாக்க
முதற்பொருட்கு மின்றி முயன்று-றுதற்கணவன்
சந்ததியா னஞ்செய்யான் றூனுவந்து செந்திநகர்
வந்ததியா னஞ்செய்யா மல்.

## புயவகுப்பு-ஆசிரிய வண்ண விருத்தம்

*மலர்தலை ஞாலத் தலகில வாமுற் றுயிர்களு
முந்திக் கண்பண்டு தந்தன
மறைபகர் வாய்மைத் திசைமுக னோவுற் றிடுமுறை
தண்டித் தன்றங்கை கன்றின
மகபதி வானத் தரசுவ பூமற் றிருமுடி
யன்பிற் கொண்டும்பு லைந்தன
வழிபடு கீரற் கழிசிறை தீரப் பரிவொடு
முந்திச் சென்றஞ்ச லென்றன (வ)
குலமட மான்மெய்ப் புதல்வியும் யானைக் குமரியு
மொன்றுத் தின்பங்க வர்ந்தன
குழையுமென் வாய்மைத் தமிழ்நனீபத் தொடையலு
மொண்பொற் சந்துந்த வழ்ந்தன
குரைகழ லடித் தொழுநெறி சேர்கொத் தடியவர்
தங்கட் டின்பங்க ளைந்தன
குவிமுலை வேலைக் கவிழிணர் மாவைத் தடிதலு
மன்றிக் குன்றம்பி ளந்தன (ஒ)
உலகுண ராமுத் தமிழுணர் நீதிக் குறுமுனி
வந்தித் தென்றும்பு கழ்ந்தன
உலைமலி வாகைத் திருநெடு வேலிற் சிரமலி
தங்கட் கங்கங்கி யைந்தன
உமைமுலை பீர்விட் டொழுகிய பாலுக் கழுதுயர்
பொன்றக் கொண்டங்க ணுந்தின
உறுகெழு கோலத் திருமுது சூரைக் கிளையொடு
மஞ்சக் கொன்றங்கண் வென்றன (ஐ)

கலவம யூரத் துரகத மேறிப் புவனியு
　　மெண்டிக் கெங்குந் திரிந்தன
ககனவ ளாகத் தளவிய கோழிக் கொடிவளர்
　　கம்பத் தம்பம்பொ ருந்தின
கலைமதி போலத் திருமுக நீள்கட் கடையருள்
　　பொங்கிச் சிந்துந் திபம்பின
கடலலை வாய்முத் தினவலை வீசிக் கரைபொரு
　　செந்திற் கந்தன்பு யங்களே. எ

## கலித்துறை

புயமா றிரண்டுக்கும் பொன்னணி
　　யாம்புள்ளி மான்மகட்குங்
கயமான் மகளுக்குங் கண்ணிணை
　　யாங்கடுங் கூற்றுவந்தா
னயமாய தொண்டர்க்கு நற்றுணை
　　யாஞ்செந்தி னன்னகர்மே
வியமான் மருகன் றிருக்கரத்
　　தேந்திய வேற்படையே. அ

## கலிவிருத்தம்

படைக்கணார் மையலேயைப் படுவ தல்லது
கடைக்கணான் பரகதி காணு மாறுண்டோ
உடைக்கணு திபன்றனக் கிளஞ்செந் தூர்த்தமிழ்த்
தொடைக்கணன் றுயர்புயத் தோகை பாகனே. கூ

## குறளடி வஞ்சிப்பா

பாகந்தரு பனிவான்மதி
தாரகையொடு கார்முகிலிடைப்

பொருதெனவளை யுடனிலகிய
நவமணியுமிழ் கலிகெழுபுனற்
றிரைபொருமொலி முரசுடனதிர்
பைந்தமிழ்வளர் செந்திலின்வருசேயோன்
திருந்தடி துணையெனச் சேர்பவர்
பொருந்துவர் யாரும் புகலரு நெறியே. ௰

கலிப்பா

*நெறிக்குஞ்சித் தலைமறலி நெருங்கியெதிர்
வருங்காலஞ்
செறிக்குஞ்சித் திகடருநின் செந்திலுமென்
புந்தியதே
பொறிக்குஞ்சித் திரத்தினுடப் பொரியாகப்
புகுந்து கொத்திக்
கொறிக்குஞ்சித் திரச்சரணப் படைச்சேவற்
கொடியோனே. ௧௧

வண்டோச்சி மருங்கணைதல்-ஆசிரிய விருத்தம்

கொடியாநின் றிடைதேய்ந்து கொழுங்கலவைத்
துணைமுலையுங் குழலுந் தாங்கி
ஒடியாநின் றுளதின்னு முமக்குமிரங்
காதவுள்ள முளவோ வண்டீர்
வடியாநின் றிலங்கிலைவேல் வலனேந்தி செந்திலரு
மருந்தன் னுடன்
முடியாநின் றளியெனுஞ்சொன் முடியாநின்
றநுராக முயல்கின் றீரே. ௧௨

## வண்டுவிடுதூது—வெளிவிருத்தம்

ஈர நாண்முகை யிளமுலைப் பசப்பொழித் தளியீரே
சூர ணாள்விழித் துணையிணை கொள்வதற் களியீரே
நார நாளமென் னளினநீர்ச் செந்தில்புக் களியீரே
ஆர ணாள்வரு வேங்கையின் மலர்கொணர்ந் தளியீரே.

## வஞ்சித்துறை

*அளியாலுஞ் சோலை
ஒளிசேர்வான் செந்தூர்
தெளிவாயா னெஞ்சே
அழியாவீ டுண்டே. கச

## மேகவிடுதூது—கலித்துறை

உண்டு வாரிதி பசுஞ்சிறைக் கிளிமயி லுருவாகி
எண்டி சாமுகம் புதைத்தயி லெனமினி யிரைத்தீரேற்
கண்டு நாணிரு கண்களு முள்ளமுங் களிகூரக் [வீரே.
கொண்டல் காளினிச் செந்தில்வாழ் குமரனைக் கொணர்

## அம்மானை-மடக்குத்தாழிசை

வீரனெடு வெள்வேல் வியன்செந்தி லெம்பெருமான்
பாரிலுயி ரெல்லாம் படைத்தனன்கா ணம்மானை
பாரிலுயி ரெல்லாம் படைத்தனனே யாமாகி
லாரணங்க ணான்கு மறிவனோ வம்மானை
அறிந்து சிறையயனுக் காக்கினன்கா ணம்மானை. கரு

இரங்கல்-வஞ்சிவிருத்தம்

மான்மகள் காதலர் மஞ்சூருந்
தேன்மலி காவுயர் செந்தூரர்
கான்மணா நாறு கடம்பேனும்
யான்மகிழ் கூர விரங்காரே. ௧௭

ஓரோலிவெண்டுறை

காரேய் நிறத்தறுகட் கறவுடைக் கடுங்கூற்றங் கலந்த காலை
யாரே விலக்குவா ரந்தோ நமரங்கா ளறிதி ரன்றே
நீரே யுயப்போமோ நின்று வலித்தீரேற்
கூரேய் வடிவேற் குமரன் குடநாட்டுச்
சீரேய் திருச்செந்தில் சென்று தொழுமினே. ௧௮

வெண்பா

தொழுதிரந்து வெம்பசியாற் சோர்ந்திடுவார் கைபார்த்
தழுதலமந் தேங்கி யலைவார்-முழுதும்
பெருகுகலை வாரிமணி பெய்திரைக்குஞ் செந்தில்
வருகுகனை வாழ்த்தா தவர். ௧௯

கலிப்பா

வரங்கொண்ட வுமைமுலைப்பான் மணங்கொண்ட
செவ்வாயும்
பரங்கொண்ட களிமயிலும் பன்னிரண்டு
கண்மலருஞ்
சிரங்கொண்ட மறையிறைஞ்சுஞ் சேவடியுஞ்
செந்தூரன்
கரங்கொண்ட வேலுமென்றன் கண்ணைவிட்டு
நீங்காவே. உ௦

## பாண்-கலித்துறை

நீங்காத நேயத்தி னீதைத்த
　　　　தையலு நின்னையன்றிப்
பாங்காய பாண பிரிந்தவெதன்
　　　　றுலுமை பாலன்செந்தில்
யாங்கா ணலமெனி லெம்மை
　　　　விழைவுதி யேதிலரைத்
தாங்காது நின்மதி துன்னூசி
　　　　யின்றிறந் தான்பிழைத்தே. உ௧

## ஆசிரியவண்ணவிருத்தம்

*பிழையாத தொண்டர் சிறிதேசெ யன்பு
　　பெரிதாக நெஞ்ச மகிழ்வா
ருழையினு மெங்கள் குறமாது கொண்க
　　ருமைபாலர் தங்கு மிடமாம்
புழைவாய் திறந்து வளைசூலு ழைந்து
　　பொழியார மிந்து வெனவே
மழைபோன் முழங்கி யலையாழி சிந்து
　　வளமேவு செந்தி னகரே. உ௨

## தலைவிகூற்று-வெண்பா

நகைமதிய மேவடவை நாப்போலிவ் வண்ணந
தகைமதியாய் நின்று தழல்வா-யகமகிழ்ந்து
கற்பசலை தந்தார் கடற்செந்தில் வாயெமக்குப்
பொற்பசலை தந்தார்முன் போய். உ௩

### கலித்துறை

போய்வத ணரம்ப மாடார் திருச்செந்தில் புக்குறையார்
சேய்மலர்த் தாளிணை சிந்தைசெய் யார்திரு மான்மருகன்
காய்சின வேலு மயிலுமென் ணர்கடல் சூழுலகிற்
பேயறி வாளரெவ் வாறறுப் பார்தம் பிறப்பிணையே.

### தலைவிநெஞ்சொடுகிளத்தல்-ஆசிரியத்தாழிசை

பிறர்வாய் வசையடங்கப் பிஞ்ஞகன்சேய் திண்டோ
ணறவார் துணர்க்கடம்பு நாம்பெறுதல் வேண்டிச்
சிறைவான் புனற்செந்தில் சேருதுமா னெஞ்சே
குயில்வா யொலியடங்கக் கூத்தன்சேய் திண்டோ
ணயமாந் துணர்க்கடம்பு நாம்பெறுதல் வேண்டிச்
செயிர்தீர் புனற்செந்தில் சேருதுமா னெஞ்சே
முந்நீ ரொலியடங்க முக்கணன்சேய் திண்டோ
ணன்னீர்த் துணர்க்கடம்பு நாம்பெறுதல் வேண்டிச்
செந்நீள் புனற்செந்தில் சேருதுமா னெஞ்சே. உரு

### கைக்கிளை-மருட்பா

நெஞ்சே நுதல்வியர்க்கு நீடுருகன் செந்திலன்னாட்
கஞ்சேல் விழிக ளவையிமைக்கும்-பஞ்சே
ரடிநிலந் தோயு மதனாற்
கமழுங் குழலிவள் கடவிடத் தணங்கே. உசா

### பாங்கிவேண்டல்-வெண்பா

அணங்கா மிவளுக் கவிர்மதிய மொன்றோ
வணங்கா வருந்தென்ற லொன்று-வணங்கூ
ரிளமுருகா செந்தினக ரெந்தாய்வந் தாளா
யுளமுருகா வேயிசையு மொன்று. உஎ

## தலைவியைவியத்தல்-கலித்துறை

ஒன் றுடை யான்புலித் தோலுடை
யான்மைந் தனேங்குபரங்
குன் றுடை யான்றிருச் செந்திலன்
ஞர்குல வாழையிள
மென் றுடை யானடை யாலிடை
யால்விழி வேற்கடையா
னின் றுடை யானிற்ப ராலெவ
ரேனு நிலைகுலைந்தே. உரு

## மதங்கியார்-கலித்தாழிசை

குலைகுலுங்கு வாழையின் கோழிலைப் பசுங்கொடைக்
குளிர்நிழற்கண் ணிரவிதேர்க் குரகதங்க ளருவிபா
யலைகுலுங்கு நறவமுண் டயர்வுயிர்த்த காவுசூ
ழங்கணைந்தை செந்தில்பாடி யாடுமா மதங்கியார்
முலைகுலுங்கு மாகின்மாரன் முடிகுலுங்கு மமுதவாய்
மொழிகுலுங்கு மாகிலாவி பழிகுலுங்கு மல்குலங்
கலைகுலுங்கு மாகிநடு நிலைகுலுங்கு மாமுகக்
கஞ்சமுங் குலுங்குமாகி னெஞ்சமுங் குலுங்குமே.

## இரங்கல்-இன்னிசைவெண்பா

குலுங்கு முலைமேற் குளிர்பசலை கண்ணீ
ரலங்கு மருநாணு மாய்வளையு நீங்கு
மிலங்கிலைவே லோனை யெறிகடற்செந் தூர்வாய்
வலங்கொளமுன் போமடவார் மாட்டு. நடு

## சித்து-ஆசிரியவிருத்தம்

மாட்டே மல்லேஞ் சித்துவித்தை
மகனே செந்திற் குகன்பாணுங்
கேட்டே யறிந்த துனக்குரைப்பக்
கேளா யிதுபொ யல்லமெய்யே
வேட்டேம் பசியா லுண்ணவின்று
விளங்கும் கஞ்சந் தனிலேபொன்
காட்டே மாகி னீபடைத்த
கறியுஞ் சோறும் வேண்டாவே. ௯௧

## இரங்கல்-கலித்துறை

வேண்டின ராணு லூனகு வேலர் வியன்செந்தி
லாண்டகை யாணுர் மானனை யாரை யகல்வாரோ
கூண்டடல் வில்லிட் டம்பு சொரிந்தே கொலைவேடம்
பூண்டு நெருங்கிக் கொண்டன் முழங்கிப் பொழிநாளே.

## பனிக்காலம்-வஞ்சித்தாழிசை

நாள்வனச முகங்கூம்ப
நீள்குளிர்செய் பனிக்காலம்
வேண்மருவு செந்திலினெங்
கேள்வர்தமை நினையாவே
மகன்றிலொடும் பெடைசேவல்
புகன்றணையும் பனிக்காலங்
குகன்றனது செந்திலினெம்
மகன்றவரை நினையாவே

தொலைபவர்மெய் குனியமதன்
சிலைகுனியும் பனிக்கால
மலைமகள்சேய் செந்திலினெந்
தலைவர்தமை நினையாவே. ௫௫

## வெண்டாழிசை

நினைவு மொன்றே யுரையு மொன்றே
பனவன் செந்தில் பணியா தொன்றே
வினையில் வீழ்ந்தவர் பால். ௫௬

## கலிப்பா

*பால்வெள்ளை நீற்றானும் பல்லுயிரும் படைத்தானுஞ்
சூல்வெள்ளை மணிப்பணிலஞ் சுமந்ததிருக் கரத்தானுஞ்
சால்பெள்ள வில்லாத தனிநெடுவேற் படையானுஞ்
சேல்வெள்ளம் பரந்துலவுந் திருச்செந்தி லிடத்தானே.

## கலித்துறை

*இடத்தான மாறெழுத் தெண்ணக்கண் ணார்நின்
னிணையடிகும்
பிடத்தான மாறும் பிரியா திருக்கப்
பெருங்கருணைக்
கடற்றா னெனக்கருள் வாய்செந்தில் வாய்த்தென்
கலைமுழு துங்
குடத்தான மாதவற் கோதிய ஞானக்
குருபரனே. ௫௭

## மடக்கு-ஆசிரியவிருத்தம்

பரவு வாரி வளையீரே பரவு வாரி வளையீரே
படரு நாக வரும்பீரே படரு நாக வரும்பீரே
யரவப் புணரி மகரமே யரவப் புணரி மகரமே
யவலங் கழிய நந்தனமே யவலங் கழிய நந்தனமே
பிரமாத் தண்ட லைப்புடைத்தான் பிரமாத் தண்ட
[லைப்புடைத்தான்
பிறவா னுழைசெந் தினகரனே பிறவா னுழைசெந்
யுரவ ராலே நாவாயே யுரவ ராலே நாவாயே[தினகரனே
யோதக் கடனீர்க் குருகீரே யோதக் கடனீர்க் குருகீரே.

## தலைவியைவியத்தல்-கலிப்பா

ஈரமவை யோரிரண்டுங் கிளவிதனக் கிணையாகு
மாரமவை யோரிரண்டு மலர்முலைமே லணியாமாற்
றூரமவை யோரிரண்டுந் தாமுடையான் செந்திலன்ன
கோரமவை யோரிரண்டுங் கொண்டமதர் விழியார்க்கே.

## ஊசல்

ஆர்க்குமது கரமாட மாலை யாட
வணிகலையு மேகலையு மிடையு மாட
வார்க்குவிமென் முலையுமணி வடமு மாட
மதிமுகமு நுதல்வெயர்வு நகையு மாடத்
தார்க்கமல வடிச்சிலம்பு புலம்பி யாடத்
தாழ்குழையு நீள்விழியுந் தழுவி யாடக்
கூர்க்கதிர்வேற் குகன்செந்தில் பாடி யாடிக்
கோகனகத் திருவனையீ ராடி ரூசல். ௯௬

## ஆசிரியவிருத்தம்

ஊச லாட்டெனப் போய்வரு பிறப்பெனு
முடற்பொறைச் சிறுவீட்டிற்
றேசி லாதபுல் லறிவுடை வாழ்க்கையின்
றிறந்திறந் தொழிவேனோ
காசி லாநெடுங் கடலலை வாய்த்தடங்
கரைவரி வளையீன்ற
மாசி லாமணி யேய்செந்தின் மேவிய
வானவர் பெருமானே. ௪௰

## களி-தாழிசை

பெருமை மாநிலம் வலம தாய்வரு
பீலி மாமயி லூர்தியார்
பிள்ளை யார்வளர் செந்தி லம்பதி
யுள்ள மேதகு களியரேம்
பரைம னோன்மனி புவனி நாரணி
பால லோசனி சூலிசாம்
பவிசு காசனி கௌரி பூசனை
பண்ணு முண்மகிழ் வெளியதோ
மருவு கேழலு மீனு மாமையு
மாய னுக்கு விருப்பமா
யானி னைக்கை விடானு ருத்திரன்
மதியு நாடொறு முயலுணு
மரிய வேள்வியி லந்த ணாளர்கள்
சுரபி கண்டிடின் முந்துவா

ரைய னேசுர ராயி ஞர்சுரை
யருந்த வானவ ரியாருமே. ௯௧

## வேற்றேலிவெண் டுறை

யாருமிணை யடிவணங்கு மெம்பெருமான்
றும்பிமுகற் கிளையோன் செந்திற்
சூருடைய சுடர்வடிவேற் றுணர்க்கடம்பந்
தொடைக் குமரற் றெழுகி லாதார்
விரிநீர் புடைசூழ் வியன்மே தினிமேற்
பரிவா லுறுநோய் பசியா லொசியா
வரைசீ ரயரா வருநாள் கழியா
வுரியா ரிகழா வுணர்வோ டுயிர்போ
யெரிவாய் நிரையத் தினுழம் குவரே. ௯௨

## கலித்துறை

மூழ்கா நிலைப்புது நீர்வேட்டு மீனமுன்
னீந்துபழந்
தாழ்கான யாறு துறந்திறந் தாங்குநின்
றன்னையன்றி
வீழ்கா தலிற்றெய்வம் வேறெண்ணி யான்மெலி
யாதுசெந்தில்
யாழ்கா முறுமொழி வள்ளிபங் காவுள்
ளிரங்குவையே. ௯௩

## இரங்கல்-இதுவுமது

இரங்கி மெய்கரிந் திருஞ்சிறை யடைந்திட
ரிடைமூழ்கி

வருங்க ணாரொடு நாணொடு மறுகிய
வரிவண்டோர்
கருங்கண் வார்முலைக் கௌரிசேய் செந்திலிற்
கார்கால
மொருங்கு நம்மையு மொழிந்தன ரோவெமை
யொழிந்தாரே ௯௨

சிந்தியல் வெண்பா

ஒழிந்தன துன்ப முவந்தன வுள்ள
மிழிந்தன நம்வினை யெல்லாஞ்-செழும்புனற்
சேந்தன் றிருச்செந்தில் சேர்ந்து. ௯௩

இரங்கல்-ஆசிரியவிருத்தம்

சேர்ந்த போது குளிர்ந்து மன்பினர்
தீர்ந்த போது கனன்றும்வா
னூர்ந்து கந்த னுகந்த செந்தி
லொதுங்கு வெண்பணி லங்கள்போ
லீர்ந்து பொங்கிரு ணுங்கி யெங்கணு
மெங்க ளங்க நடுங்குமா
றூர்ந்த வெம்பனி சிந்தி முந்துற
வந்தி வந்தெழு மிந்துவே. ௯௪

இதுவுமது

இந்துவு மிரவியு நின்றென வுல்விய
விம்பரி னெழுவகையா
வந்துறு பிறவியி னைந்துழ லுடறொறு
மங்குத லொழிவேனோ

செந்திலு மெனதிரு கண்களு மடியவர்
சிந்தையு மருமறைநூ
லந்தமு மகிழ்வொடு சந்தத முலவிய
வம்பிகை திருமகனே. சஎ

## கலித்துறை

மகவா னரசு மழிவற்ற யாக்கையு
மன்பதையுஞ்
செகவாழ்வு மற்றவை யாவும்பொய் யேதமிழ்ச்
செந்தில்புகுந்
தகவா ரிசமலர்ந் தங்கைகள் கூப்பிநின்
றுறுதிரு
முகவா னவனைப் பணிவதொன றேமெய்
முயல்பவர்க்கே. சஅ

## கலித்தாழிசை

முயல்பவர் முயற்சியின் முன்னம் யாவையு
நயனுணர் செந்திலா னல்குமே
நயனுணர் செந்திலா னல்கா னுயி [ரன்றே.
னயலொரு வானவர்க ளாக்குதற்கு வல்லவரு மல்ல

## குறட்டாழிசை

அன்றல வின்று மனரெய் துவர்வேண்
மன்றலஞ் செந்தூர் வாழ்த்தா தாரே. ஞய

## இரங்கல்-அடிமறிமண்டிலவாசிரியப்பா

தாரார் கொல்லோ தங்குளிர் தாரே
வாரா ராயின் மானனை யீரே

பாரா ராலோ பணிபடு நாளே
சீரார் செவ்வேள் செந்தூ ரவரே. ருக

## பாங்கிகூற்று-வஞ்சிவிருத்தம்

அவரு மங்குள ரன்பினு
லிவரு நெஞ்ச மிரங்கினுர்
சிவன்ம கன்பயில் செந்தில்வா
யெவரு மென்செய்வ ரின்பமே. ரு௨

## ஆசிரியவண்ணவிருத்தம்

இன்பமுந் துன்பமுஞ் சங்கடங் கொண்டயர்ந்
தங்குமிங் குஞ்சுழன் றிடுமாயத்
துன்பவெங் கும்பியங் கந்தவிர்ந் தன்பெருந்
தொண்டனென் றய்ந்துளங் கழிவேனே
புன்குருந் துந்திநன் சந்தனஞ் சிந்திமுன்
பொங்கிவெண் சங்கெறிந் தலைவீசித்
தண்பொருந் தம்பசும் பொன்சொரிந் தெங்கணுந்
தந்ததென் செந்திலெம் பெருமானே. ருந

## கார்கண்டு பாகனெடுகேழறல்-இதுவுமது.

பெருமான் மதிபொதி சடையா னுடனுறை
பிணைமா னுதவிய செந்தூரன்
கருமா மயிலென வுறைவாய் சிதறிய
கணமா மழைமுகில் கண்டாலே
யொருமான் விழிவழி புனலோ வுடல்வழி
யுயிரோ விடுகுவ ளந்தோயான்

வருமா றறிகில னினிநீ விரைவுடன்
வலவா கடவுதி வன்றேரே. ௫௪

## சிந்தடிவஞ்சிப்பா

தேராதவன் வழிமறுகிய திரள்சோலை
வாரார்மல ரிடை யொழுகிய மதுமாரி
நீரார்வயற் செந்தூரனை நினையாதார்
யாரேனு
மெழுவகைப் பிறப்பினு மியங்கி
யழிகுவர் கறங்கென வவலநனி யுழந்தே. ௫௫

## வண்டு-கலித்துறை

உழவாத மம்மரு முன்னாத நெஞ்சு
முருப்பசப்பு
மிழவாத நாளுமெங் குண்டுவண் டீரியல்
சேர்குறிஞ்சிக்
கிழவா னவனை யிளையோ னெனுந்தன்மை
கேட்கிலாய்த்
தொழுவா தரத்தொடு செந்தில்சென் றேகண்ட
தோகையர்க்கே. ௫௬

## வெண்பா

தோகைபுற மாக்குந் துணைத்தா ளருவினையே
னோகை யகமாக்க வொண்ணாதோ -பூகமலி
தேங்கடம்பாய் செந்திற் றிருநகரில் வீற்றிருக்கும்
பூங்கடம்பா நீதான் புகல். ௫௭

## இடைச்சியார்-கலிமுரி

புகலும் வாய்மொழிப் பால்விலை கூறுவார்
போனி லாநகை பூத்தசெவ் வாய்மலர்ந்
தகலும் வாண்மறு கெல்லா மறுகச்சென்
றாவின் பால்விலை யாக்கு மிடைச்சியார்
தகலு மாகுங் குடமுலைப் பால்விலை
தனைய லாற்சிவன் சந்ததி செந்தில்வா
யிகலும் வாணெடுங் கண்ணொடு நெஞ்சையு
மிவர்விற் றலினி யார்விலை கொள்வரே. ௫௫

## தலைவிகூற்று-ஆசிரியவிருத்தம்

கொள்வா ரன்றே செவிப்புலத்தெங்
குலத்தார் வலித்த கொடுங்கடிப்பின்
வள்வார் முரசங் கறங்கோதை
மணம்வேட் டயரு மனைமுன்றிற்
கள்வார் கடப்பந் தொடைச்செந்திற்
கந்தன் வேல்போற் காய்கணைபாய்
புள்வார் பொருவெங் களத்தோதை
கேட்டே யகன்ற போரேறே. ௫௬

## ஆசிரியவிருத்தம்

ஏறிரும் பசலைக் கலவைமான மதச்சே
றெழுதிய வழிமதக் கலுழி
யிரைத்தெறி கரடத் திரடிணி புழைக்கை
கெற்கரி மருப்புறழ் முலைப்பூ

ஞறிருங் கூந்த லேந்திழை யவர்பா
னலந்தனக் கலந்துழன் றவமே
நாள்கழித் தவலப் படுகுழி கிடக்கு
நான்கதி காணுமா றுளதோ
ஆறெழுத் துளங்கொண் டைம்புல னடக்கி
யவாவறுத் தொருநெறி தூருவி
யகங்குழைந் துருகிப் பருகுமன் பினருக்
கானந்த ஞானவா ரிதியே
பாறெழுந் திரைக்குந் திரைப்பசுங் குருதிப்
பரிதியஞ் சுடரிலை நெடுவேற்
பண்ணவா விரைப்பூந் தண்ணறு வயல்பாய்
பைந்தமிழ்ச் செந்தில்வா னவனே. ௬ய

## இதுவுமது

வானமும் புவியு மாய
மாறிலம் பூத மோதி
யூனுடம் பாத னேய
னூழ்வினைப் பகுதி யன்றோ
கூனிளம் பிறைதோய் நெற்றிக்
கொடிமணி மதில்சூழ் செந்திற்
றேனினந் தொழுதார் மல்கு
செஞ்சுடர் வேலி னானே. ௬க

## கார்கண்டுபோகனேடுகேழறல்-இணைக்குறளாசிரியப்பா

வேலிற் கிளரொளி மின்னெடுந் துவன்றிச்
சூலிற் கடலென முழங்கி மாலிற் கருகிக்

காலிற் கடுவிசைத் தெறிந்து
மேலிற் பரந்து
பாலிற் பஃறுளி சிதறிக்
கோலிற் பொழிந்து
குனிசிலை வளைத்தன வாலோ
வாலிற் சிறந்தோன் மைந்தன்
சேலிற் றிகழ்வயற் செந்திலிற் கொண்மூ
வுயங்கு தேரினு முந்துறு மாலோ
சால்பிற் கேள்விப் பாக
தகவினி யென்னு மாலோ
நூலிற் சிறந்த நுண்ணிடை தனக்கே. ௬௨

## இரங்கல்-ஆசிரியவிருத்தம்

தனக்கோ ருவமை யில்லா
தந்திக் கிளையான் செந்திலுமென்
மனக்கோ யிலுங்கொண் டவனிணைத்தாள்
வணங்கா தவரி னிணங்காரா
யெனக்கோ ருறுதி யியம்பாம
லிதண்கா ளேனல் காள்கிளிகாள்
புனக்கோ கிலங்கா ளெங்கொளித்துப்
போனா ரிருந்த மானாரே. ௬௩

## தழை-கலித்துறை

மானார் விழிமான் மகள்கா தலனார் வாழ்செந்தூ
ரூனார் வடிவே லரவோ யினிவே றுரையுண்டோ
வானார் விழையுந் தழையோ தந்தா யம்மாநங்
கானார் குழலா ளுயிர்தந் தனைநீ கண்டாயே. ௬௪

## மறம்-ஆசிரியவிருத்தம்

கண்டாலுமனம்பதைக்குங் கடுங்கூற் றுநடுங்கிடுமெமைக்
கடல்சூழ் செந்தில்
வண்டாலுந் துணர்க்கடம்பன் மலர்ச்சரண மறவாத
மறவ ரேயாம்
பெண்டாலின் றளமயங்கி யுயிரைவிடத் தூதுவிடும்
பெருமான் றன்பாற்
றெண்டாலெங் களுக்குரைக்க வருந்தூத வவற்கியம்
தூத னீயே. ௬௫

## தலைவனைவேண்டல்-வெண்பா

தூதுசொல வேண்டிச் சுரும்பினையு மானினையு
மாதுசொல விட்டாலு மாட்டாவா-லோதுசெந்திற்
காங்கையா வாறிரண்டு கைத்தலத்தாய் நின்றன்னை
வேங்கையா மென்றே வெறுத்து. ௬௬

## இரங்கல்-கலித்துறை

வெறுப்பா ரவரென்னை மின்னனை யாரெனில்
வெம்பிழையும்
பொறுப்பார் மறந்தும் புறக்கணி யார்புணர்ந்
தாவிதந் துண்
ணிறுப்பார் புலவியி னீடல்செய் யார்நினை
வார்வினைக
ளறுப்பார் திருச்செந்தில் வாயிவ ரார்வந்
தலைப்பவரே. ௬௭

## எழுதரிதென்னவேந்தலை விலக்கல்-கலித்தாழிசை

அலைவாய்வள நந்தூரிள நிலவாய்விரி செந்தா
ரடனூட்டிய கதிர்வேலவர் குடநாட்டன மனையாண்
முலைதாமெழு துவையேலவை குழையாமுழு மதிபோன்
முகநேரெழு துவையேனகை புரியாதிரு புருவஞ்
சிலைபோலெழு துவையேலவை குனியாவடி தளிர்போ
றிடமாமெழு துவையேலவை நடவாகிளி துவளா
யிலவாயெழு துவையேலது கலவாநிறை யமுதை
மெஞ்சேயெழு துவைநீகிழி செஞ்கேழுயி லவனே. கூஅ

## தலைவியை யாற்றுதல்-வெண்பா

அயில்வேற்க ணல்லா யனூர்கூர்ந் தலமந்
துயிர்வேட்கை வாட்ட மொழிவாய்-பயிலுமதன்
பூங்கைக் கடம்புண்டு போனாற் றரச்செந்தில்
வேங்கைக் கடம்புண்டு மேல். கூகூ

## விலக்கல் - ஆசிரியத்துறை

மேல்வா னவர்தஞ் சிறையறுத் துயர்ந்த விளங்கிலை
நெடுவேற் றுளங்கெழிற் குமரன் வியன்செந்திற்
சூல்வாய்ப் பணிலங் கறங்கு மலைவாய்த் துறைவா
வினியெம பிறைவா னுதலின் றுணர்த்தா
ரகலம் புணர்ப்போ டேகின்
பால்வாய்க் குழவி மறிமான் மறுகும் பகுவாய்ப்
புலியின் றுகைவால் புடைப்பப் பணைக்கோட்டு
நால்வா யிரையா வேட்டைபா வரவ நவிலும்
பாலைத் தெனலாற் கவலை நளிர்நீர்ப் பொருநைத்
தெளிநீள் பழன நன்னாட் டகமன்றே. எ0

## வெண்பா

அகமன் றலங்கமலத் தாள்வினையே னன்பாற்
புகமன றகமகிழ்ச்சி பூத்தான்-றகவென்றா
ழூந்தினக ரம்போ லொளிகொண்ட வேற்படையோன்
செந்தினக ரம்போற் சிறந்து. ௭௧

## பிரியேனென்றல்-கலித்துறை

சிறந்தார் பரவுந் திருச்செந்தி லார்சிவன் றந்தகற்கட்
பிறந்தா ரிணையடி பேணலர் போலப் பிணியவிழ்தார்
புறந்தாழ் குழலி புலம்பே லுனையம் பொருதிகலங்கி
யிறந்தாவி யான்படி னும்பிரி யேன்பிறப் பேழினுமே.

## ஆசிரியவிருத்தம்

*எழுயர் கடாயானை மேல்வெண் குடைக்கீ
ழிணைக்கவரி யெறிய விருபா
லின்னிய முழங்கமட வன்னங் குழீஇயனைய
வேழையர் மருங்கு சூழக்
காழகி னறுங்குற டெரிஞ்சுபூந் தேய்வைகடி
கமழ்கடவும் வலைய நிமிர்தோட்
கண்ணிக் கடம்பசைய வேல்கொண்டு நிவரக்
கண்கொண் டுளங்கு ளிர்வனே
வாழிமுரி திரைமுகடு கிழியவெழு மெழுபுரவி
யருணமிசை கொடிநெ டுந்தே
ராயிரங் கதிரிரவி பாயிரும் பகலுமிரு
ளடையமிடை சினவி டுதடங்
கோழிலை நறும்புன்னை துன்னுநுண் டாதுபடு
குவிமுகை மருட்டு முடவுக்

குடவளை மணித்தொகுதி நிலவுகாய் செந்தில்வரு
குலவமரர் தம்பி ரானே. எரு

## ஆசிரியத்தாழிசை

*தம்பிரான் செந்திலிற் சரவணத் துதித்தோ
னம்பொனூர் கழலிணை யன்புறப் பணிந்தோ
ரும்பராய் மன்னுவ ருயர்நிலை யடைந்தே. எசு

## மாலையிரத்தல்-கலித்துறை

அடைக்கலந் தானிவ ளானலு மார்பத்
தணிகடம்பந்
தொடைக்கலந் தாருயிர் சோர்தனன் றேறுதொல்
லவுணர்வெம்போ
ரிடைக்கலந் தாவிப் பலியூ னுடனுண்
டெழுங்கதிர்வேற்
படைக்கலந் தாங்கிய கையாய்தென் செந்திற்
பதிக்கந்தனே. எஎ

## இரங்கல்-வெண்பா

கந்தமல ராலக் கமழ்கூந்த லேந்திழைமார்
தந்தமல ராலத் தளருமோ-வந்தவினை
போக்குமரன்சேயொளிக்கும்பூம்புனற்செந்தூரமர்ந்த
கோக்குமரன் பூந்தார் குறித்து. எஅ

## இதுவுமது-ஆசிரியத்துறை

குறுமுனிவற் கறமுரைத்த குமரன்மா
செந்திலினெங் கொலைவில் வேடர்

சிறுமியைய ணைம்புணர்ந்து தீர்ந்திடினு
மன்பகத்திற் றீரா ரன்றே
சிறுமியைய ணைம்புணர்ந்
தன்பிற்றீர்ந் தாராயிற்
கறிவளர் வரைநாடற் கென்று மென்று
முணர்ந்த கல்வி யாறே. ௭௭

## வெண்பா

*ஆறுமுக மேன்கண்க ளாறிரண்டு மேனடியேற்
கேறுவினை யொழிப்ப தெல்லாமோ-நீறணிவான்
கன்றே திருச்செந்திற் கற்பகமே நின்னருட்கண்
ணொன்றே யமையாதோ வோது. ௭௮

## இரங்கல்-ஆசிரியவிருத்தம்

ஓது வார்கொலோ வுயிருடற் பொறைமறித்
துதவுமா றுயர்ந்தோங்கி
மோது வாரிள முகிழ்முலை வனிதையர்
முடிந்திறந் திடுங்காலைக்
காது வார்மணிக் கனங்குழை யுழைமகள்
காதலர் திருச்செந்திற்
போது வார்குழ லாய்கல்வி வேட்டெமைப்
புல்லுவிட் டகன்றாரே. ௭௯

## இதுவுமது-கலிவிருத்தம்

அகலுறார் கனவெலா நனவெ லாந்தொடப்
புகலுறா ருளங்குடி புகுந்த காதல
ரிகலுறா வேள்செந்தி லிணங்க லாரினா
ளுகலுறா தாவிநின் றூச லாடவே. ௮௰

### சுனையாடல்கூறித் தோழி நகுதல்-இதுவுமது

ஆடு பூஞ்சுனை சந்தணிந் தாய்மலர்
சூடி வாய்விளர்ப் புந்துரிற் றோகையாய்
சேடன் வேற்படைச் சேவகன் செந்திலி
லாடி யானன்றென் றறிவ ளனையே. அக

### தலைவன்கூற்று: இரங்கல்-இதுவுமது

நாணிழு மெண்டிசைப் நன்கிசைய நாளார்
தேனகு கடம்பருயர் செந்திநகர் போல்வார்
மானகு கருங்கணிணை வெஞ்சமிட மாறல்
யானுமுயி ரும்புவிடு மென்சொனுயு மாறே. அஉ

### தோழிகூற்று: இரங்கல்-ஆசிரியவிருத்தம்

மாறு படுஞ்சூ ரோட முனிந்தார் வானுயர் செந்தூர்வா
யூறு படும்பே ராசையி னர்பா லூர ரிரங்காரே
னீறு படும்பூ ணாரமு மொன்றே நேரிழை கண்சோர்நீ
ராறு படுங்கால் யாவ ரறிந்தா ராவி படும்பாடே.

### கலித்துறை

*பாடாத நாவும் பணியாத சென்னியும் பாவித்தன்பாய்
நாடாத வுள்ளமு நான்படைத் தானர கேழுஞ்சென்று
கூடா துயர்கதி கூடுவ னேகுன் றெறிந்தவைவேற்
சேடார் மதிற்செந்தி லாயென்கொ லோநின் றிருவருளே.

### தலைவிகூற்று-வெண்பா

அருட்கடல்வாழ் செந்திநக ராய்வளைக்கை நல்லாய்
பொருட்கடல்வேன் மன்னரேன் போனார்-மருட்குவளைக்

கண்பொழிய முத்தங் கனக முலைபொழிய
நண்பொழிய நாமெலிபு நாள். ௮௫

## பாங்கிகூற்று - கலிப்பா

நாணளினந்தனையவிழ்ந்தநறுமலர்ப்பொற்பொகுட்டகட்டுக்
கோணளினந் துறந் தாபற் குமரன்மாசெந்திலின்வாய்ப்
பாணளினந் தலரளக பாரமுகில் சோரமணிப்
பூணளினந் தனித்தாவி புல்லாது நில்லாதே. ௮௬

## வெண்பா

நில்லாது நீயு நிலைநின்ற வென்றனக்குப்
பொல்லா தனவாம் புலனடக்கிப்-பல்பகலுங்
கார்த்திகையான் செந்திற் கடிநகரைக் கண்ணுறப்
பார்த்திகையா னெஞ்சே பணி. ௮௭

## கலித்துறை

பணிப்பகை மயிலுஞ் சேவற் பதாகையும
 பன்னிரண்டு
மணிக்குழை களுமோ ராறு வதனமும்
 வாகைவேலுந்
தணிப்பருங் கடப்பந் தாருந் தண்டையுந்
 தாளுநாளுங்
கணிப்பருஞ் செந்தி லாயென் கருத்தைவிட்
 டகன்றிடாவே. ௮௮

## இரங்கல்-இதுவுமது

அகன்ஞா லகலும் புணர்ந்தாற் புணருமென்
 னாவியம்மா

குகன்று தவிழ்பொழிற் செந்திலின் வாய்க்குளிர்
மாமதிபோன்
முகன்றும் கனங்குழை முத்தணி மூரன்
முகிழ்முலைமான்
மகன்று னெழுதிய வோவியம் போலு
மயிலினையே. ௮௯

## தலைவியையவியத்தல்-ஆசிரியவண்ண விருத்தம்

மயில்கடவி யண்டகோள முகடதிர வம்பொன்மேரு
வரைபிதிர வங்கை நீடுகூ
ரயில்சுழல வும்பர்வாழ வுலகைவலம் வந்தசோதி
யருள்குமரர் செந்தில் போலியார்
குயின்மொழிக ளிந்தபாகு மடமயில்வி ளங்குசாயல்
கொடியிடைது வண்டு வாடுநா
லியலுறுத லிந்த்ரசாப மிணைவிழிக ளிந்த்ரநீல
மிலவிதழு மிந்த்ர கோபமே. ௯௰

## கார்கண்டிரங்கல்-ஆசிரியவிருத்தம்

கோப மெழுந்தன மேக முழங்கின
கோட னிரம்பினநீள்
சாபம் வளைந்தது தோகை பரந்தன
தாரவர் வந்திலரா
னீப மணங்கமழ் மார்பினர் செந்திலி
னேரிழை நெஞ்சிடையே
சோப மலிந்தது வாவி தளர்ந்தது
சோர்வன கண்டுளியே. ௯௧

## கலித்துறை

துளியாது கண்புனல் சோராது மெய்துதி
யாதுசொன்னைக்
கனியாது நெஞ்சகங் கைகுவி யாதொருக்
காலுமறை
தெளியாத வானவர் சேனைப தியைத்தென்
செந்திலின்வாய்
வெளியா யெதிர்ந்து தொழார்நர கேழினும்
வீழ்பவர்க்கே. கூ௨.

## பாங்கியாற்றுதல்-குறள்வெண்பா

வீழ்வா ரெழார்பொருட்கு விட்டுநமை வெற்பயிலாற்
போழ்வார்செந் தூரடையார் போல். கூ௩

## பிச்சியார்-ஆசிரியவிருத்தம்

போலிதனக் கொன்றுமிலாப் புண்ணியன்கண்
ணுதற்கடவுள் புதல்வன் கோலப்
பீலிமயி லியற்செந்தி லுலேவேற்கைக்
கொலேவேற்கட் பிச்சி யாரே
நூலிடையைக் குறைத்துமணிப் பணேமுலையைப்
பெருக்கியென்று நோயே செய்தீர்
நீலமுகி லோதிகுறைத் துயிர்குறைப்ப
தோவுமக்கு நீதி தானே. கூ௪

## தலைவிபாங்கிக்குரைத்தல்-கலிவெண்பா

தானக் குனிகோட்டுத் தந்தியினை யும்விலக்கிக்
கானக் குடிஞைக் கலுழியினிற் காத்தளித்துத்

தேனக்க செச்சையந்தார்ச் செந்திலார்க் கன்பரினென்
னூனெக் குருக வுயிரிற் கலந்தார்க்கு
நானக் கமழ்கூந்த னன்னுதலே வாரலையென்
றியானுற் றுரைப்பதெவ்வா றின்று. ௬௫

## கலிவெண்பா

இன்றுலகி னல்குரவா லீடுபடுந் தன்மையினு
லன்று மருவினையே னன்றவறஞ் செய்கிலே
னென்றும் பிறப்பினுமிப் பெற்றியே முற்றுமெனக்
கன்று மனத்தாற் கவலுழந்து நில்லாது
குன்றெறிந்த செந்திற் குழகாவின் பூங்கழற்கால்
சென்றுதொழு மாறன்பு செய். ௬௬

## தாய்கூற்று-கலித்துறை

செய்யவ னேயெனுஞ் செந்திலெந் தாயெனுஞ்
செவ்வடிவேற்
கையவ னேயெனுங் கங்கைமைந் தாவெனுங்
கண்டுளிநீர்
பெய்யவ நேகந் தரமெழும் போய்வழும
பிள்ளைமதி
வெய்யவ னேயெனும் வேறறி யாளென்
விளங்கிழையே ௬௭

## தலைவிகூற்று-ஆசிரியவிருத்தம்

இமைக்குங் கூடலு மென்னிரு கண்களி
னிமைகளு மிரவெல்லா

மூழைக்குள் கூடல மந்துதென் செந்திலா
யொருகணைங் கூடாவான்
மழைக்க ணைம்பிகை மலர்க்கரங் கோட்டியே
வார்முலே பீரோட
அழைக்க நின்றகூத் தாடிய மணிச்சிலம்
பலம்புசே வடியானே. ௯௯

## கலிப்பா

அடியாரி னுளமுருகன் பறியாத
வென்புன்சொன்
முடியாத நக்கீரர் முருகாற்றுப்
படையாமோ
தொடியார்பன் னிரண்டுதடந் தோளார்க்குத்
திருச்செந்தில்
வடிவாய்வள் ளுகிர்ச்சேவல் வலனுயர்த்த
கொடியார்க்கே. ௯௯

## வெண்பா

ஆர்க்குங் கனிவண் டறையும் பொழிற்றிருச்செந்
தூர்க்கன் புடனீசென் றுள்ளமே-கூர்க்கு
மெழுமையினு நீபிறப்பி லெய்தாமற் சேயைத்
தொழுமயிலும் வேலுமெனச் சொல். ௱

## திருச்செந்திற்கலம்பகம்
## முற்றிற்று

# குறிப்பு

இந்நூலின்கண் (*) உடுக்குறி யிடப்பட்ட முப்பத்தாறு செய்யுட்களையும் நாடோறும் பேரன்புடனே ஓதுபவர்களுக்குத் திருச்செந்தூரில் எழுந்தருளிய முருகக்கடவுள் வேண்டும் நல்வரங்களனைத்தும் அருளுவர் என்பது திண்ணம். ஆகலின் சைவசமயிகள் அவ்வாறு இவற்றை ஓதி இம்மை மறுமைப் பயன்களைப்பெற்று இன்பவாழ் வடைவாராக!

சுவாமிநாத தேசிகர் சேவடி வாழ்க

திருச்சிற்றம்பலம்

உ

திருச்சிற்றம்பலம்

# தனிப்புகழ்ப்பாக்கள்

---

## கந்தபுராணம்

மூவிரு முகங்கள் போற்றி முகம்பொழி
கருணை போற்றி
ஏவருந் துதிக்க நின்ற விராறுதோள்
போற்றி காஞ்சி
மாவடி வைகுஞ் செவ்வேள் மலரடி
போற்றி யன்னான்
சேவலு மயிலும் போற்றி திருக்கைவேல்
போற்றி போற்றி.

அருவமு முருவு மாகி
யநாதியாய்ப் பலவா யொன்றாய்ப்
பிரமமாய் நின்ற சோதிப்
பிழம்பதோர் மேனி யாகக்
கருணைகூர் முகங்க ளாறுங்
கரங்கள்பன் னிரண்டுங் கொண்டே
ஒருதிரு முருகன் வந்தாங் குதித்தன
னுலக முய்ய.

முழுமதி யன்ன வாறு முகங்களு
முந்நான் காகும்
விழிகளி னருளும் வேலும் வேறுள
படையின் சீரு
மழகிய கரமீ ராறு மணிமணித்
தண்டை யார்க்குஞ்
செழுமல ரடியுங் கண்டா னவன்றவஞ்
செப்பற் பாற்றோ. ௯

முண்டக மலர்ந்த தன்ன மூவிரு
முகமுங் கண்ணுங்
குண்டல நிரையுஞ் செம்பொன் மவுலியுங்
கோல மார்பு
மெண்டரு கரமீ ராறு மிலங்கெழிற்
படைகள் யாவுந்
தண்டையுஞ் சிலம்பு மார்க்குஞ் சரணமுந்
தெரியக் கண்டான்.

வீறு கேதனம் வச்சிர மங்குசம் விசிகம்
மாறி லாதவே லபயமே வலமிடம் வரத
மேறு பங்கய மணிமழுத் தண்டுவில் லிசைந்த
ஆறிரண்டுகை யறுமுகங் கொண்டுவே ளடைந்தான்.

எங்க ணும்பணி வதனங்க ளெங்கணும் விழிக
ளெங்கணுந் திருக் கேள்விக ளெங்கணுங் கரங்க
ளெங்கணுந் திருக் கழலடி யெங்கணும் வடிவ
மெங்கணுஞ் செறிந் தருள்செயு மறுமுகத் திறைக்கே.

மூவர்கண் முதல்வன் வந்தான் முக்கணான்
குமரன் வந்தான்
மேவலர் மடங்கல் வந்தான் வேற்படை
வீரன் வந்தா
னெவருந் தெரிதற் றேற்ரு திருநதிடு
மொருவன் வந்தான்
தேவர்க டேவன் வந்தா னென்றன
சின்ன மெல்லாம் எ

கந்தநம வைந்துமுகர் தந்தமு ந
கேசநம கங்கை புமைதன்
மைந்தநம பன்னிரு புயத்தநம
நீபமலர் மாலை புனையுந்
தந்தைநம வாறுமுக வாதிநம
சோதிநம தற்பர மதா
மெந்தைநம வென்றுமிளை யோய்நம
குமாரநம வென்று தொழுதார். அ

விரிஞ்சன்மா றேவ ராலும் வெலற்கரும்
விறலோ னாகிப்
பெருஞ்சூரர் பதமும் வேத வொழுக்கமும்
பிறவு மாற்றி
அருஞ்சிறை யவர்க்குச் செய்த வவுணர்கோ
னவி கொள்வான்
பரஞ்சுட ருருவாய் வந்த குமரனைப்
பணிதல் செய்வாம். கூ

மாயையின் வலியோ ராகி மான்முத
    லோரை வென்றே
ஆயிரத் தோரெட் டண்ட மரசுசெய்
    துகநூற் றெட்டுக்
காயம தழிவின் றாகிக் கடவுளர்க்
    கலக்கண் செய்த
தீயசூர் முதலைச் செற்ற குமரன்றன்
    சென்னி வைப்பாம். ௰

ஆறுமா முகப்பிரா னன்றி யிவ்விடை
வேறொரு துணையிலை மெய்ம்மை யீதெனத்
தேறின னவனடி சிந்தை செய்தனன்
மாறிழி பருவிநீர் வழியுங் கண்ணினான். ௧௧

நண்ணினர்க் கினியா யோலம் ஞானநா
    யகனே யோலம
பண்ணவர்க் கிறையே யோலம் பரஞ்சுடர்
    முதலே யோல
மெண்ணுதற் கரியா யோலம் யாவையும்
    படைத்தா யோலங்
கண்ணுதற் பெருமா னல்குங் கடவுளே
    யோல மோலம். ௧௨

தேவர்க டேவே யோலஞ் சிறந்தசிற்
    பரனே யோல
மேவலர்க் கிடியே யோலம் வேற்படை
    விமலா வோலம்

பாவலர்க் கெளியா யோலம் பன்னிரு
புயத்தா யோல
மூவரு மாகி நின்ற மூர்த்தியே
யோல மோலம். கஙு

புன்னெறி யதனிற் செல்லும் போக்கினை
விலக்கி மேலா
நன்னெறி யொழுகச் செய்து நவையறு
காட்சி நல்கி
என்னையு மடிய னாக்கி யிருவினை
நீக்கி யாண்ட
பன்னிரு தடந்தோள் வள்ளல் பாதபங்
கயங்கள் போற்றி. கச

## கோயிற்புராணம்

தோராட்டிக் கயங்காட்டுந் திரண்மாக்கட் டயமூட்டிப்
போராட்டிப் புறங்காட்டிப் போங்காட்டிற் புலால்கமழு
நீராட்டிச் சூர்மாட்டி நிகழ்நாட்டிற் புகழ்நாட்டும்
பேராட்டி சீராட்டும் பிள்ளையார் கழல்போற்றி. கரு

## சேக்கிழார்நாயனார்புராணம்

பாறுமுக மும்பொருந்தப் பருந்துவிருந் துணக்கழுகு
நூறுமுக மாயணைந்து நூழில்படு களம்புகுத
மாறுமுகந் தருநிருதர் மடியவடி வேலெடுத்த
ஆறுமுகன் றிருவடித்தா மரையிணைக ளவைபோற்றி

## திருவாதவூரர்புராணம்

துங்கமத கும்பவுயர் தும்பிமுகர் தம்பிசீர்
தங்குஞெகி ழுஞ்சிறுச தங்கைகள்பு லம்பவே
மங்கையுமை கண்குளிர வந்துலவு கின்றதா
ளங்கைமலர் கொண்டுமிகு மன்புடனி றைஞ்சுவாம்.

## திருவிளையாடற்புராணம்

கறங்குதிரைக் கருங்கடலுங் காரவுணப்
 பெருங்கடலுங் கலங்கக் கார்வந்
துறங்குசிகைப் பொருப்புஞ்சூ ருரப்பொருப்பும்
 பிளப்பமறை யுணர்ந்தோ ராற்று
மறங்குலவு மகத்தழலு மவுணமட
 வார்வயிற்றி னழலு மூள
மறங்குலவு வேலெடுத்த குமரவேள்
 சேவடிகள் வணக்கஞ் செய்வாம். கூ௮

## சேதுபுராணம்

குலவுமலை மகள்கலச முலைப்பால் வாசக்
 குமுதமவள் கொழுநர்மறை கொழிக்குஞ் செல்வி
நிலவுமுக மலர்கமழச் செய்து முன்னே
 னெடுந்துளிக்கை பிடித்தேறி நெற்றிப் பட்டத்
துலவியிவ ரொருமூவ ருவப்ப மாலோ
 டும்பர்கணங் களிதூங்க வுலக மூடுங்
கலபமர கதமயிலூர் கழற்கால் வென்றிக்
 கந்தனைவந் தனைசெய்து கருத்துள் வைப்பாம். கூ௯

## இலிங்கபுராணம் [பூருவகாண்டம்]

தெய்வ யானையுந் திருந்தெழில் வருமுலை சுமந்து
நைய நுண்ணிடை வள்ளியு நன்கினி தமர
மைத வழ்ந்தபூஞ் சோலைமால் வரையக மருவுங்
கையி னெங்குவேற் கடவுள்பொற் கழலிணை பணிவாம்.

## கூர்மபுராணம் [பூருவகாண்டம்]

கள்வாய் மடுத்துப் புரையேறிக்
கனைத்துக் குமட்டி யெதிரெடுக்கும்
புள்வாய் கடப்ப நறுந்தெரியல்
புரளுந் தடந்தோள் வரையனைத்தும்
வெள்வே னெடுங்கட் குறத்திமுலை
வேழ முழக்கக் களிகூருந்
தள்ளா மதுகை முருகனிரு
சரண மெமது தலைக்கொள்வாம். உ௧

## காசிகாண்டம்

இலைமுகப் பைம்பூண் டாங்கி யேர்குடி
யிருந்த கொம்மை
முலைமுகிழ் பூத்த வள்ளி முயங்குதோள்
வெற்பி னானை
மலைமுகம் புழுங்க வாட்டி மாமுத
றடிந்து வெய்ய
கொலைபழுத் தொழுகும் வைவேற் குழகனை
வணங்கல் செய்வாம். உ௨

## வாயுசங்கிதை [பூருவகாண்டம்]

உணங்கிவெம் பிறவிக் கழிந்திடு மடியார்க்
குணங்கண்மி னென்றுரைப் பதுபோன்
மணங்கமழ் கமலச் சேவடிப் போதில்
வயங்கிய தண்டைநின் றொலிப்பப்
பணங்கெழு பாந்தள் படப்புடைத் தாளும்
பச்சிள மயிலின்மேற் றோன்று
மணங்குமை வயிறு வாய்த்திட வந்த
வறுமுக வொருவனைத் தொழுவாம். ௨௬

## திருவெண்காட்டுப்புராணம்

எண்காரும் புனக்குறவர் தமக்குறவ னெனவணுகி
யேனல் காத்துத்
தண்காருஞ் சைவலமு மனையகுழல் வள்ளிதனந்
தழுவுங் கோவை
வெண்காடன் றிருமகனை மயிலோனை யமரர்சிறை
விடுத்த வேளைக்
கண்காணப் பரவினர்தம் பிறவியெனும் பெருஞ்சிறையைக்
கடப்பர் தாமே. ௨௭

## திருவிரிஞ்சைப்புராணம்

அந்திப்போ தழகுறவே நடித்தருளும்
வழித்துணைவ ரருளுங் கோவை
வந்திப்போர் நினைத்தபடி மயிலேறி
யயிலெடுத்து வருஞ்செவ் வேளைச்
சந்திப்போ மலர்சொரிவோம் புகழ்ந்திடுவோ
மவன்கமலத் தாளுந் தோளுஞ்

சிந்திப்போ மாதலினு னமதுபழ
வினைகளெல்லாஞ் சிந்திப் போமே. உ௫

கந்தபுராணச்சுருக்கம்

தேவர்குலப் பெருங்கமல மிடுக்க ணான
பிரமகன் றனியோடு சிறந்து வாழ
மாவலிசே ரவுணர்குலக் குவளை வாடி
மண்ணினிடைச் சுருங்கியிட வந்த பானு
வாவடிவேற் குமரேச னடிய னேன்புன்
சொல்லினுக்கு மிரங்கியருள் சுரகரும் பெம்மான்
பூவடியா மிருபோது மூன்று போதும்
பூசைபுரிந் தன்பினொடு புகழ்ந்து வாழ்வாம்.

காஞ்சிப்புராணம்

மூருகோட்டந் தரப்பாயு மும்மதமு
மூற்றெடுப்ப முரிவிற் கோட்டு
மொருகோட்டு மழகளிற்றை யிருகோட்டு
முதுகளிறு வுலவக் காட்டிப்
பருகோட்ட நறைவேட்டுப் பைங்கோட்டுத்
தினைப்புனத்துப் பரண்மேற் கொண்டு
குருகோட்டும் பெடைமணந்த குமரகோட்
டத்தடிகள் குலத்தாள் போற்றி. உ௭

விநாயகபுராணம்

மரந்துளைத்த கணையானுஞ் சோவெறிந்த
திறலானு மதிக்குந் தோறுஞ்
சிரந்துளக்க வலிகடலுஞ் சேணிகந்த
பெருவரையுந் திறத்திற் குன்றக்

கரந்துளக்குங் குறுமுனிக்குங் கருத்தின்மயல்
புட்டியகை தவஞ்சால் வெற்பி
னரந்துளைத்த சேயிலைவேல் வலனுயர்த்த
விளையவனை யுளத்துள் வைப்பாம். உ௮

திருத்தணிகைப்புராணம்

ஓங்கொளியாய் விசும்பாதி தொறுமியலுந்
தனதியல்பை யுருவின் மாட்டும்
பாங்குபெறத் தெரித்ததுபோற் பலபொறியாப்
பரமர்விழி பயந்த ஞான்று
தேங்கொளியாய் வெளியடர்ந்து வளிதொடர்ந்தொள்
ளொளிபடர்ந்து தெளிநீர்ப் புக்கு
நீங்கிவிளை யாட்டயர்ந்த தணிகையமர்
பெருவாழ்வை நினைந்து வாழ்வாம். உ௯

பேரூர்ப்புராணம்

காமர் மல்கிய வுருவிஃ தன்றெனக்
கருத்தின்முன் னுறத்தோன்றுங்
காம னல்லுடல் பொடித்தகண் ணிடத்துமை
கணவனார் நிகரில்லாக்
காமர் மல்கிய வுருவெனத் தோற்றிய
காளையை யடியார்தங்
கிராம முற்றமிக் கருளுநமங் குலிநகர்க்
கந்தனைப் பணிவாமால். ௩௰

திருவானைக்காப்புராணம்

இருமுது குரவர் காப்ப ணிளமையோ
டிருந்த சேயென்

றொருவரும் பெயரும் வேறே யொருவருஞ்
சாமி யாகாக்
குருபர னிறைஞ்ச வுண்மை கொடுத்தொரு
சாமி யென்னும்
பொருவரும் பெயரும் பூண்ட புனிதனைப்
புகழ்ந்து வாழ்வாம். ௩௧

## பூவாளூர்ப்புராணம்

உயர்ந்தவரு மல்லவரு மோங்கியதன் ளேக்காற்
பயந்தழுவி னெப்பரெனல் பாரையறி வித்தாங்
கியைந்தமக வான்மகளொ டேனல்வளர் மாதும்
புயந்தழுவ நின்றபுனி தற்கடிமை செய்வாம். ௩௨

## சீர்காழிப்புராணம்

அலமடையுங் கொடுஞ்சூரன் குலமடியப்
புள்ளினங்க ளமரை வேட்ட
பலமடையப் பெரும்பூமி பலமடையக்
கரும்பகட்டிற் படருங் கூற்றன்
வலமடையுங் கரம்வருந்தா நலமடையப்
பிரமாதி வானோர் தங்க
டலமடையத் தனதுகர தலமடையும்
வேலெறிந்தோன் சரணம் போற்றி. ௩௩

## திருக்குற்றாலப்புராணம்

வேறுமுகந் தொறுந்தோறும் பிறந்துழலுஞ்
சனனவிடாய் விடுப்ப மூலச்

சேறுமுக மாயைமலங் கழியவிரு
  வினைப்பழைய தீட்டுந் தீரக்
கூறுமுகந் தொறுமகரக் குழைதாவி
  வள்ளிதெய்வக் கொடிகட் சேல்பா
யாறுமுகம் பெற்றகொற்றத் தானந்தக்
  கடற்பரவி யாடல் செய்வாம். ரு ௬

## காசிரகசியம்

இருகூட்டு வளர்பறவை யிரண்டிரு
  மிருவருமுள் ளிடத்துநாண
ஒருகூட்டு வளர்பறவை யிரண்டுளொன்று
  துவசமற் றொன்றூர்தி யாக்கி
அருகூட்டு பஞ்சடிமென் பிடியுமா
  னுந்தழுவ வமர்போ ரேற்றை
வருகூட்டு நுழையாது போற்றுவா
  மிருவினையு மாற்று வாமே. ரு ௭

## திருநாகைக்காரோணப்புராணம்

மீனேறு கடல்வறப்ப விண்ணேறு
  மலைகுலைய வெள்ளேறாருங்
கானேறு கடுக்கையினார் கையேறு
  கழுமுளினுங் கடுவேறொட்டுக்
கூனேறு மதிநுதலார்க் கொண்டேறு
  பொருமமரர் குலவி வாழ்வான்
வானேறு விதம்பசிய மயிலேறு
  சேவகனை வாழ்த்தி வாழ்வாம். ரு ௮

## திருக்குடந்தைப்புராணம்

நீர்முதல்யா முதலென்று நெடியோனு
மயனென்று நிகழ்த்தா வண்ணஞ்
சூர்முதலே திகள்சிறிதும் வடுச்செய்யாத்
தன்கரத்திற் றுணைப்பூந் தாளிற்
பார்முதலாக் குன்றமலையு மவன்முதலோர்
முடியும்வடுப் படுத்த லோச்சி
நார்முகமினஞ் சிருவர்முலை நிறம்புயத்துஞ்
செயமகிழ்வே ணமையாள் வானே. ௧௭

## மாயூரப்புராணம்

நெடுவரைவிற் பவளவொளி படுவரையைக்
கூறுசெய்து நிலவு மண்டத்
தொடுவரைவி லுயிர்க்குமுடன் முதலியதன்
கூறுசெயு மொருவேல் கொண்டோர்
கொடுவரையைக் கூறுசெய்து கடன்மாவுங்
கூறுசெய்து சொடும்பக் கஞ்சார்ந்
தடுவரையிற் பொலிமயின்மேற் பொலிதருசே
வகன்மலர்த்தா ளடுத்து வாழ்வாம். ௧௮

## சிதம்பர சபாநாதபுராணம்

தன்னிகரில் பெருங்கருணைத் தடங்கடலாஞ்
சிவபிரான் றழற்கட் டோன்றிக்
கொன்னுனைகொள் வேற்படையாற் சூரபன்ம
னங்கமிரு கூறுச் செய்து

துன்னுவிபு தரைவிண்ணங் குடியேற்றித்
தோமின்மணம் புணர்ந்த வென்றிப்
பன்னிரண்டு திருக்கரங்க ளுடையவறு
முகக்கடவுள் பாதம் போற்றி. ௩௬

---

## சிவஞானசித்தியார்

அருமறையா கமமங்க மருங்கலைநூ றெரிந்த
வகத்தியனுக் கோத்துரைக்கு மருட்குருவாங் குருவை
திருமறைமா முனிவர்முனி தேவர்கடந் தேவன்
சிவனருள்சேர் திருமதலை தவநிலையோர் தெய்வம்
பொருமறையார் கழல்வீரர் வீரன் கையிற்
பூநீர்கொண் டோவாது போற்றுமடி யவர்கள்
கருமறையா வகையருளிக் கதிவழங்குங் கந்தன்
கழலிணைக ளெஞ்சிரத்திற் கருத்தில் வைப்பாம்.

## சிவப்பிரகாசம்

வளநிலவு குலவமர ரதிபதியாய் நீல
மயிலேறி வருமீச னருண்ஞான மதலை
அளவில்பல கலையங்க மாரணங்க ளுணர்ந்த
வகத்தியனுக் கோத்துரைக்கு மண்ணல்விற லெண்ணு
உளமருவு சூரனுர மெமதிடும்பை யோங்க
லொன்றிரண்டு கூறுபட வொளிதிகழ்வே லுகந்த
களபமலி குறமகடன் மணிமுலைகள் கலந்த
கந்தன்மல ரடியிணைகள் சிந்தை செய்வாம். ௬௪

---

# சேந்தனார்

அருளிய

# திருவிசைப்பா

(ஒன்பதாந் திருமுறை)

---

## திருவிடைக்கழி

பண்-பஞ்சமம்

மாலுலா மனந்தந் தென்கையிற் சங்கம்
    வவ்வினான் மலைமகன் மதலை
மேலுலாந் தேவர் குலமுழு தாளுங்
    குமரவேள் வள்ளிதன் மணாளன்
சேலுலாங் கழனித் திருவிடைக் கழியிற்
    றிருக்குரா நீழற்கீழ் நின்ற
வேலுலாந் தடக்கை வேந்தனென் சேந்த
    னென்னுமென் மெல்லிய லிவளே. ௪௨

இவளைவா ரிளமென் கொங்கைபீர் பொங்க
    வெழில்கவர்ந் தானிளங் காளை
கவளமா கரிமேற் கவரிசூழ் குடைக்கீழ்க்
    கனகக்குன் றெனவரும் கள்வன்
திவளமா ளிகைசூழ் திருவிடைக் கழியிற்
    றிருக்குரா நீழற்கீழ் நின்ற
குவளைமா மலர்க்க ணங்கையா னைக்குங்
    குழகனல் லழகனங் கோவே. ௪௩

கோவினைப் பவளக் குழமணக் கோலக்
குழாங்கள்சூழ் கோழிவெல் கொடியோன்
காவனற் சேனை யென்னக்காப் பவனென்
பொன்னனை மேகலைகவர் வானே
தேவினற் றலைவன் றிருவிடைக் கழியிற்
றிருக்குரா நீழற்கீழ் நின்ற
தூவிநற் பீலி மாமயி லூருஞ்
சுப்பிர மண்ணியன் றானே. ௪௪

தானமர் பொருது வானவர் சேனை
மடியச்சூர் மார்பினைத் தடிந்தோன்
மானமர் தடக்கை வள்ளறன் பிள்ளை
மறைநிறை சட்டறம் வளரத்
தேனமர் பொழில்சூழ் திருவிடைக் கழியிற்
றிருக்குரா நீழற்கீழ் நின்ற
கோனமர் கூத்தன் குலவிளங் களிறென்
கொடிக்கிடர் பயப்பதுங் குணமே. ௪௫

குணமணிக் குருளைக் கொவ்வைவாய் மடந்தை
படுமிடர் குறிக்கொளா தழகோ
மணமணி மறையோர் வானவர் வையம்
முய்யமற் றடியனேன் வாழத்
திணமணி மாடத் திருவிடைக் கழியிற்
றிருக்குரா நீழற்கீழ் நின்ற
கணமணி பொருநீர்க் கங்கைதன் சிறுவன்
கணபதி பின்னிளங் கிளையே. ௪௬

கிளையிளஞ் சேயக் கிரிதனைக் கீண்ட
வாண்டகை கேடில்வேற் செல்வன்
வளையிளம் பிறைச்செஞ் சடையரன் மதலை
கார்நிற மாறிரு மருகன்
திளையிளம் பொழில்சூழ் திருவிடைக் கழியிற்
றிருக்குரா நீழற்கீழ் நின்ற
முளையிளங் களிறென் மொய்குழற் சிறுமிக்
கருளுங்கொன் முருகவேள் பரிந்தே. ௪௰

பரிந்தசெஞ் சுடரோ பரிதியோ மின்னோ
பவளத்தின் குழவியோ பசும்பொன்
சொரிந்தசிந் தூரமோ தூமணித் திரளோ
சுந்தரத் தரசிது வென்னத்
தெரிந்தவை திகர்வாழ் திருவிடைக் கழியிற்
றிருக்குரா நீழற்கீழ் நின்ற
வரிந்தவெஞ் சிலைக்கை மைந்தனை யஞ்சொன்
மையல்கொண் டையுறும் வகையே. ௪அ

வகைமிகு மசுரர் மாளவந் தழிஞை
வானமர் விளைத்ததா ளாளன்
புகைமிகு மனலிற் புரம்பொடி படுத்த
பொன்றலை வில்லிதன் புதல்வன்
திகைமிகு கீர்த்தித் திருவிடைக் கழியிற்
றிருக்குரா நீழற்கீழ் நின்ற
தொகைமிகு நாமத் தவன்றிரு வடிக்கென்
றுடியிடை மடமொருடங் கினளே. ௪க

தொடங்கினன் மடலென் றணிமுடித் தொங்கற்
புறவித மாகிலு மருளா
னிடங்கொளக் குறத்தி திறத்திலு மிறைவன்
மறத்தொழில் வார்த்தையு முடையன்
திடங்கொள்வை திகர்வாழ் திருவிடைக் கழியிற்
றிருக்குரா நீழற்கீழ் நின்ற
மடங்கலை மலரும் பன்னிரு நயனத்
தறுமுகத் தமுதினை மருண்டே ௫௰

மருண்டுறை கோயின் மல்குநன் குன்றப்
பொழில்வளர் மகிழ்திருப் பிடவூர்
வெருண்டமான் விழிபார்க் கருள்செயா விடுமே
விடலையே யெவர்க்குமெய் யன்பர்
தெருண்டவை திகர்வாழ் திருவிடைக் கழியிற்
றிருக்குரா நீழற்கீழ் நின்ற
குருண்டபூங் குஞ்சிப் பிறைச்சடை முடிமுக்
கண்ணுடைக் கோமளக் கொழுந்தே. ௫௧

கொழுந்திரள் வாயார் தாய்மொழி யாகத்
தூய்மொழி யமரர்கோ மகனைச்
செழுந்திரட் சோதிச் செப்புறைச் சேந்தன்
வாய்ந்தசொல் லிசைசுவா மியையே
செழுந்தடம் பொழில்சூழ் திருவிடைக் கழியிற்
றிருக்குரா நீழற்கீழ் நின்ற
எழுங்கதி ரொளியை யேத்துவார் கேட்பா
ரிடர்கெடு மாலுலா மனமே. ௫௨

திருவிசைப்பா
முற்றிற்று

அருணகிரிநாதர்
அருளிய

# திருப்புகழ்

திருஅருணை
முருகக்கடவுள் துதி

## ஆசிரியவிருத்தம்

ஏறுமயி லேறிவிளை யாடுமுக மொன்றே
 ஈசருடன் ஞானமொழி பேசுமுக மொன்றே
கூறுமடி யார்கள்வினை தீர்க்குமுக மொன்றே
 குன்றுருவ வேல்வாங்கி நின்றமுக மொன்றே
மாறுபடு சூரரைவ தைத்தமுக மொன்றே
 வள்ளியைம ணம்புணர வந்தமுக மொன்றே
ஆறுமுக மானபொருள் நீயருளல் வேண்டும்
 ஆதியரு ணாசலம மர்ந்தபெரு மாளே. ௫௩

## க. திருப்பரங்குன்றம்

தந்தனந் தந்தத் தனதான.

சந்ததம் பந்தத் தொடராலே
 சஞ்சலந் துஞ்சித் திரியாதே
கந்தனென் றென்றுற் றுனைநாளும்
 கண்டுகொண் டன்புற் றிடுவேனோ

தந்தியின் கொம்பைப் புணர்வோனே
சங்கரன் பங்கிற் சிவைபாலா
செந்திலங் கண்டிக் கதிர்வேலா
தென்பரங் குன்றிற் பெருமாளே. ௩௪

தனனதந்த தத்தத்த தந்த தனதான

கருவடைந்து பத்துற்ற திங்கள்
வயிறிருந்து முற்றிப்ப யின்று
கடையில்வந்து தித்துக்கு ழந்தை வடிவாகிக்
கழுவியங்கெ டுத்துச்சு ரந்த
முலையருந்து விக்கக்கி டந்து
கதறியங்கை கொட்டித்த வழ்ந்து நடமாடி

அரைவடங்கள் கட்டிச்ச தங்கை
இடுகுதம்பை பொற்சுட்டி தண்டை
அவையணிந்து முற்றிக்கி ளர்ந்து வயதேறி
அரிய பெண்கள் நட்பைப்பு ணர்ந்து
பிணியுழன்று சுற்றித்தி ரிந்த
தமையுமுன்க்ரு பைச்சித்த மென்று பெறுவேனோ

இரவியிந்த்ரன் வெற்றிக்கு ரங்கி
னரசரென்று ஒப்பற்ற வுந்தி
இறைவன் எண்கி னக்கர்த்த னென்று நெடுநீலன்
எரியதென்றும் ருத்ரற்சி றந்த
அநுமனென்றும் ஒப்பற்ற அண்டர்
எவருமிந்த வர்க்கத்தில் வந்து புனமேவ

அரியதன்ப டைக்கர்த்த ரென்று
அசுரர்தங்கி ளைக்கட்டை வென்ற
அரிமுகுந்தன் மெச்சுற்ற பண்பின் மருகோனே
அயனையும்பு டைத்துச்சி னந்து
உலகமும்ப டைத்துப்ப ரிந்துள்
அருள்பரங்கி ரிக்குட்சி றந்த பெருமாளே. ௫௫

## உ. திருச்செந்தூர்

தனன தானன தந்தன தந்தன தனதான

கமல மாதுட னிந்திரை யுஞ்சரி
சொலவொ ணாதம டந்தையர் சந்தன
களப சீதள கொங்கையி லங்கையி லிருபோதேய்
களவு நூல்தெரி வஞ்சனை யஞ்சன
விழியில் மோகித கந்தசு கந்தரு
கரிய வோதியி லிந்துமு கந்தனில் மருளாதே

அமல மாகிய சிந்தைய டைந்தகல்
தொலைவி லாதஅ றம்பொரு ளின்பமு
மடைய வோதியு ணர்ந்துத ணந்தபின் அருள்தானே
அறியு மாறுபெ றும்படி யன்பினி
னினிய நாதசி லம்புபு லம்பிடு
மருண ஆடக கிண்கிணி தங்கிய அடிதாராய்

குமரி காளிப யங்கரி சங்கரி
கவுரி நீலப ரம்பரை யம்பிகை
குடிலை யோகினி சண்டினி குண்டலி எமதாயி

குறைவி லாளுமை மந்திரி யந்தரி
வெருவி தாகம சுந்தரி தந்தருள்
குமரமூஷிக மூந்திய ஐங்கர கணராயன்
மமவி நாயக னஞ்சுமிழ் கஞ்சுகி
அணிக ஜானன விம்பனெ ரம்புலி
மவுலி யானுறு சிந்தையு கந்தரு ளிளையோனே
வளரும் வாழையு மஞ்சளு மிஞ்சியும்
இடைவி டாதுநெ ருங்கிய மங்கல
மகிமை மாநகர் செந்திலில் வந்துறை பெருமாளே.

தனதான தந்த தனதான தந்த
தனதான தந்த தனதான.

விறல்மார னைந்து மலர்வாளி சிந்த
மிகவானி லிந்து வெயில்காய
மிதவாடை வந்து தழல்போல வொன்ற
வினைமாதர் தந்தம் வசைகூறக்
குறவாணர் குன்றி லுறைபேதை கொண்ட
கொடிதான துன்ப மயல்தீரக்
குளிர்மாலை யின்க ணணிமாலை தந்து
குறைதீர வந்து குறுகாயோ
மறிமானு கந்த இறையோன்ம கிழ்ந்து
வழிபாடு தந்த மதியாளா
மலைமாவு சிந்த அலைவேலை யஞ்ச
வடிவேலெ றிந்த அதிதீரா
அறிவால றிந்து னிருதாளி றைஞ்சு
மடியாரி டைஞ்சல் களைவோனே

அழகான செம்பொன் மயில்மே லமர்ந்து
அலைவாயு கந்த பெருமாளே. ௫௭

தந்ததன தந்த தந்த தந்ததன தந்த தந்த
தந்ததன தந்த தந்த தனதான.

கண்டுமொழி கொம்பு கொங்கை வஞ்சியிடை அம்பு நஞ்சு
கண்கள்குழல் கொண்ட லென்று பலகாலும்
கண்டுளம்வ ருந்தி நொந்து மங்கையர்வ சம்பு ரிந்து
கங்குல்பக லென்று நின்று விதியாலே
பண்டைவினை கொண்டு ழன்று வெந்துவிழு கின்றல்கண்டு
பங்கயப தங்கள் தந்து புகழோதும்
பண்புடைய சிந்தை யன்பர் தங்களினு டன்க லந்து
பண்புபெற அஞ்ச லஞ்சல் எனவாராய்
வண்டுபடு கின்ற தொங்கல் கொண்டறநெ ருங்கி யிண்டு
வம்பினைய டைந்து சந்தின் மிகமூழ்கி
வஞ்சியைமு னிந்த கொங்கை மென்குறம டந்தைசெங்கை
வந்தழகு டன்க லந்த மணிமார்பா
திண்டிறல்பு னைந்த அண்டர் தங்களப யங்கள் கண்டு
செஞ்சமர்பு னைந்து துங்க மயில்மீதே
சென்றசுர ரஞ்ச வென்று குன்றிடைம ணம்பு ரிந்து
செந்தில்நகர் வந்த மர்ந்த பெருமாளே. ௫௮

தந்த தனன தனன தனனதன தனதான

தொந்தி சரிய மயிரே வெளிறநிரை
தந்தமசைய முதுகே வளையஇதழ்
தொங்க ஒருகை தடிமேல் வரமகளிர் நகையாடித்

தொண்டு கிழவ னிவனு ரெனஇருமல்
கிண்கி ணெனமு னுரையே குழறவிழி
துஞ்சு குருடு படவே செவிடுபடு செவியாகி
வந்த பிணியு மதிலே மிடையுமொரு
பண்டி தனுமெ யுறுவே தனையுமிள
மைந்த ருடைமை கடனே தெனமுடுகு துயர்மேவி
மங்கை யழுது விழவே யமபடர்கள்
நின்று சருவ மலமே ஒழுகவுயிர்
மங்கு பொழுது கடிதே மயிலின்மிசை வரவேணும்
எந்தை வருக ரகுநா யகவருக
மைந்த வருக மகனே யினிவருக
என்கண் வருக எனதா ருயிர்வருக அபிராம
இங்கு வருக அரசே வருகமுலை
உண்க வருக மலர்சூ டிடவருக
என்று பரிவி னொடுகோ சலைபுகல வருமாயன்
சிந்தை மகிழு மருகா குறவரிள
வஞ்சி மருவு மழகா அமரர்சிறை
சிந்த அசுரர் கிளைவே ரொடுமடிய அடுதீரா
திங்க ளரவு நதிசூ டியபரமர்
தந்த குமர அலையே கரைபொருத
செந்தி னகரி லினிதே மருவிவளர் பெருமாளே.

தந்ததன தான தானத் தான தனதான

முந்துதமிழ் மாலை கோடிக் கோடி
சந்தமொடு நீடு பாடிப் பாடி
முஞ்சர்மனை வாசல் தேடித் தேடி யுழலாதே

முந்தைவினை யேவ ராமற் போக
மங்கையர்கள் காதல் தூரத் தேக
முந்தடிமை யேனை யாளத் தானு முனைமீதே
திந்திதிமி தோதி தீதித் தீதி
தந்ததன தான தானத் தான
செஞ்சணகு சேகு தாளத் தோடு நடமாடுஞ்
செஞ்சிறிய கால்வி சாலத் தோகை
துங்கஅநு கூல பார்வைத் தீர
செம்பொன்மயில் மீதி லேயெப் போது வருவாயே.
அந்தண்மறை வேள்வி காவற் கார
செந்தமிழ்சொல் பாவின் மாலைக் கார
அண்டருப கார சேவற் கார முடிமேலே
அஞ்சலிசெய் வோர்கள் நேயக் கார
குன்றுருவ ஏவும் வேலைக் கார
அந்தம்வெகு வான ரூபக் கார எழிலான
சிந்துரமின் மேவு போகக் கார
விந்தைகுற மாது வேளைக் கார
செஞ்சொலடி யார்கள் வாரக் கார எதிரான
செஞ்சமரை மாயு மாயக் கார
துங்கரண சூர சூறைக் கார
செந்தினகர் வாழு மாண்மைக் கார பெருமாளே.

## ௩. பழநி

தான தந்தன தானன தானன தனதான

நாத விந்துக லாதீ நமோநம
வேத மந்த்ரசொ ரூபா நமோநம
ஞான பண்டித சாமீ நமோநம வெகுகோடி

நாம சம்புகு மாராந மோநம
போக அந்தரி பாலாந மோநம
நாக பந்தம யூராந மோநம பரசூரர்
சேத தண்டவி நோதாந மோநம
கீத கிண்கிணி பாதாந மோநம
தீர சம்ப்ரம வீராந மோநம கிரிராஜ
தீப மங்கள ஜோதீந மோநம
தூய அம்பல லீலாந மோநம
தேவ குஞ்சரி பாகாந மோநம அருள்தாராய்
ஈத லும்பல கோலால பூஜையும்
ஓத லுங்குண ஆசார நீதியும்
ஈர முங்குரு சீபாத சேவையு மறவாத
ஏழ்த லம்புகழ் காவேரி யால்விளை
சோழ மண்டல மீதேம னோகர
ராஜ கெம்பிர நாடாளு நாயக வயலூரா
ஆத ரம்பயி லாரூரர் தோழமை
சேர்தல் கொண்டவ ரோடேமு னாளினில்
ஆடல் வெம்பரி மீதேறி மாகயி லையிலேகி
ஆதி யந்தவு லாவாசு பாடிய
சேரர் கொங்குவை காவூர்ந னாடதில்
ஆவி னன்குடி வாழ்வான தேவர்கள் பெருமாளே.

தனனதன தான தந்த தனனதன தான தந்த
தனனதன தானதந்த தனதான.

கருவினுரு வாகி வந்து வயதளவி லேவ ளர்ந்து
கலைகள்பல வேதெ ரிந்து மதனாலே

கரியகுழல் மாதர் தங்கள் அடிசுவடு மார்பு தைந்து
கவலைபெரி தாகி நொந்து மிகவாடி
அரகரசி வாய வென்று தினமுநினை யாமல் நின்று
அறுசமய நீதி யொன்று மறியாமல்
அசனமிடு வார்கள் தங்கள் மனைகள்தலை வாசல் நின்று
அநுதினமு நாண மின்றி யழிவேனோ
உரகபட மேல்வ ளர்ந்த பெரியபெரு மாள ரங்க
ருலகளவு மால்ம கிழ்ந்த மருகோனே
உபயகுல தீப துங்க விருதுகவி ராஜ சிங்க
உறைபுகலி யூரி லன்று வருவோனே
பரவைமனை மீதி லன்று ஒருபொழுது தூது சென்ற
பரமனரு ளால்வ ளர்ந்த குமரேசா
பகையசுரர் சேனை கொன்று அமரர்சிறை மீள வென்று
பழநிமலை மீதில் நின்ற பெருமாளே. சுஉ

தனன தானன தானா தானா தனதான.

கலக வாள்விழி வேலோ சேலோ
மதுர வாய்மொழி தேனோ பாலோ
கரிய வார்குழல் காரோ காவோ துவரோவாய்
களமு நீள்கமு கோதோள் வேயோ
வுகர மானது மாலேர் பாயோ
களப வார்முலை மேரோ கோடோ இடைதானும்
இழைய தோமலர் வேதா வானோ
னெழுதி னனிலை யோவாய் பேசீ
ரிதென மோனமி னரே பாரீ ரெனமாதர்

இருகண் மாயையி லேழுழ் காதே
யுனது காவிய நூலா ராய்வே
ளிடர்ப டாதருள் வாழ்வே நீயே தரவேணும்
அலைவி லாதுயர் வானோ ரானோர்
நிலைமை பேகுறி வேலா சீலா
அடியர் பாலரு ளீவாய் நீபார் மணிமார்பா
அழகு லாவுவி சாகா வாகா
ரிபமி னாள்மகிழ் கேள்வா தாழ்வா
ரயனு லாவிய சீலா கோலா கலவீரா
வலைபை கேள்வர்பி னாய் கானோர்
குறவர் மாதும னாளா நாளார்
வனச மேல்வரு தேவா மூவா மயில்வாழ்வே
மதுர ஞானவி நோதா நாதா
பழநி மேவுகு மாரா தீரா
மயுர வாகன தேவா வானோர் பெருமாளே. ௬௩

## ௪. சுவாமிமலை

தான தனதன தான தனதன
தான தனதன தனதான.

பாதி மதிநதி போது மணிசடை
நாத ரருளிய குமரேசா
பாகு கனிமொழி மாது குறமகள்
பாதம் வருடிய மணவாளா
காது மொருவிழி காக முறவருள்
மாய னரிதிரு மருகோனே

காலனெனையணு காமனுனதிரு
    காலில் வழிபட அருள்வாயே
ஆதி யயனொடு தேவர் சுரருல
    காளும் வகையுறு சிறைமீளா
ஆடு மயிலினி லேறி யமரர்கள்
    சூழ வரவரு மிளையோனே
சூத மிகவளர் சோலை மருவுசு
    வாமி மலைதனி லுறைவோனே
சூர னுடலற வாரி சுவறிட
    வேலை விடவல பெருமாளே. கூச

தனதான தத்த தனதான தத்த
தனதான தத்த தனதான.

மருவேசெ றித்த குழலார்ம யக்கி
    மதனாக மத்தின் விரகாலே
மயலேயெ ழுப்பி யிதழேய ருத்த
    மலைபோல்மு லைக்கு ளுறவாகிப்
பெருகாத லுற்ற தமியேனை நித்தல்
    பிரியாது பட்ச மறவாதே
பிழையேபொ றுத்து னிருதாளி லுற்ற
    பெருவாழ்வு பற்ற அருள்வாயே
குருவாய ரற்கு முபதேசம் வைத்த
    குகனேகு றத்தி மணவாளா
குளிர்காமி குத்த வளர்பூக மெத்து
    குடகாவி ரிக்கு வடபாலார்

திருவேர கத்தி லுறைவாயு மைக்கொர்
 சிறுவாக ரிக்கு மிளையோனே
திருமால்த னக்கு மருகாவ ரக்கர்
 சிரமேது ணித்த பெருமானே. ௩௫

தானதன தான தந்த தானதன தான தந்த
தானதன தான தந்த தனதான.

வாதமொடு சூலை கண்ட மாலைசூலை நோவு சந்து
 மாவலிவி யாதி குன்ம மொடுகாசம்
வாயுவுட னேபரந்த தாமரைகள் பீன சம்பின்
 மாதர்தரு பூஷ ணங்கள் எனவாகும்
பாதகவி யாதி புண்கள் ஆனதுட னேதொ டர்ந்து
 பாயிலைவி டாது மங்க இவையால்நின்
பாதமல ரான தின்க ணேயமற வேம றந்து
 பாவமது பான மூண்டு வெறிமூடி
ஏதமுறு பாச பந்த மானவலை யோடு ழன்று
 ஈனமிகு சாதி யின்க ணதிலேயான்
ஈடழித லான தின்பின் மூடனென வோது முன்புன்
 ஈரவருள் கூர வந்து எனையாள்வாய்
சூதமகிழ்பாலை வன்னி தாதுவளர் சோலை முன்பு
 சூழுமதில் தாவி மஞ்சி னளவாகத்
தோரணநன் மாட மெங்கு நீடுகொடி யேதழைந்த
 சுவாமிமலை வாழ வந்த பெருமானே. ௩௬

தனனதன தானதத்த தனனதன தானதத்த
தனனதன தானதத்த தனதான

சரணகம லாலயத்தை அரைநிமிஷ நேரமட்டில்
தவமுறைதி யானம் வைக்க அறியாத
சடகசட மூடமட்டி பவவினையி லேசனித்த
தமியன் மிடி யால்மயக்க முறுவேனோ
கருணைபுரி யாதிருப்ப தெனகுறையி வேளை செப்பு
கயிலைமலை நாதர்பெற்ற குமரோனே
கடகபுய மீதிரத்ந மணியணி பொன் மாலைசெச்சை
கமழுமண மார்கடப்ப மணிவோனே
தருணமிதை யாமிகுத்த கனமதுறு நீள்சவுக்ய
சகல செல்வ யோகமிக்க பெருவாழ்வு
தகைமைசிவ ஞானமுத்தி பரகதியு நீகொடுத்து
தவிபுரிய வேணுமெய்த்த வடிவேலா
அருணதள பாதபத்ம மதுநிதமு மேதுதிக்க
அரியதமிழ் தானளித்த மயில்வீரா
அதிசயம நேகமுற்ற பழநிமலை மீதுதித்த
அழகதிரு வேரகத்தின் முருகோனே. ௬௭

## ரு. குன்றுதோறாடல்

தந்தன தான தான தந்தன தான தான
தந்தன தான தான தனதான.

வஞ்சக லோப மூடர் தம்பொரு ளூர்கள் தேடி
மஞ்சரி கோவை தூது பலபாவின்

வண்புகழ் பாரி காரி யென்றிசை வாது கூறி
வந்தியர் போல வீணி லழியாதே
செஞ்சர ணாதை கீத கிண்கிணி நீப மாலை
திண்டிறல் வேல்ம யூர முகமாறும்
செந்தமிழ் நாளு மோதி யுய்ந்திட ஞானமூறு
செங்கனி வாயி லோர்சொ லருள்வாயே
பஞ்சவ னீடு கூனு மொன்றிடு தாப மோடு
பஞ்சற வாது கூறு சமண்மூகர்
பண்பறு பீலி யோடு வெங்கழு வேற வோது
பண்டித ஞான நீறு தருவோனே
குஞ்சரம் யானை மேவு மைம்புன மீது லாவு
குன்றவர் சாதி கூடி வெறியாடிக்
கும்பிட நாடி வாழ்வு தந்தவ ரோடு வீறு
குன்றுதொ றாடல் மேவு பெருமாளே. ௬௮

தானன தான தான தனதன தனதான.

சீரான கோல கால நவமணி
மாலாபி ஷேக பார வெகுவித
தேவாதி தேவர் சேவை செயுமுக மலராறும்
சீராடு வீர மாது மருவிய
ஈராறு தோளும் நீளும் வரியளி
சீராக மோது நீப பரிமள இருதாளும்
ஆராத காதல் வேடர் மடமகள்
சீமூத மூர்வ லாரி மடமகள்
ஆதார பூத மாக வலமிட முறைவாழ்வும்

ஆராயு நீதி வேலு மயிலுமெய்
ஞானாபி ராம தாப வடிவமும்
ஆபாத னேனு நாளு நினைவது பெறவேணும்
ஏராரு மாட கூட மதுரையில்
மீதேறி மாறி யாடு மிறையவர்
ஏழேழு பேர்கள் கூற வருபொரு ளதிகாரம்
ஈடாய ஊமர் போல வணிகரி
லூடாடி யால வாயில் விதிசெய்த
லீலாவி சார தீர வரதர குருநாதா
கூராழி யால்முன் வீய நினைபவ
னீடேறு மாறு பானு மறைவுசெய்
கோபால ராய னேய முளதிரு மருகோனே
கோடாம லார வார வலைநெறி
காவேரி யாறு பாயும் வயலியில்
கோனாடு சூழ்வி ராலி மலையுறை பெருமாளே.

௬௬

## ௯. பழமுதிர்சோலை

தான தத்த தான தனா தனாதன தனதான.

சீர்சி றக்கு மேனி பசேல் பசேலென
நூபு ரத்தி னோசை கலீர் கலீரென
சேர விட்ட தாள்கள் சிவேல் சிவேலென வருமானார்
சேக ரத்தின் வாலை சிலோர் சிலோர்களும்
நூறு லக்ஷ கோடி மயால் மயால்கொடு
தேடி யொக்க வாடி யையோ வையோவென மடமாதர்

மார்ப டைத்த கோடு பளீர் பளீரென
ஏம லித்தெ ழுவி பகிர் பகிரென
மாம சக்கி லாசை யுளோ முளோமென நினைவோடி
வாடை பற்று வேளை யடா வடாவென
நீம யக்க மேது சொலாய் சொலாயென
வாரம் வைத்த பாத மிதோ இதோஎன அருள்வாயே
பார தத்தை மேரு வெளீ வெளீதிகழ்
கோடொ டித்த நாளில் வரை வரைபவர்
பாணி ழக்க ணேசர் குவா குவாகனர் இளையோனே
பாடன் முக்ய மாது தமீழ் தமிழிறை
மாமுனிக்கு காதி லுணர் உணர்விடு
பாச மற்ற வேத குரு குருபர குமரேசா
போர்மி குத்த சூரன் விடோம் விடோமென
நேரெ திர்க்க வேலை படர் படரென
போய றுத்த போது குபீர் குபீரென வெகுசோரி
பூமி யுக்க வீசு குகா குகாதிகழ்
சோலை வெற்பின் மேவு தெய்வா தெய்வானைதோள்
பூணி யிச்சை யாறு புயா புயாறுள பெருமாளே.
எ௰

## திருவிடைமருதூர்

தனதனன தனதனன தனதனன தனதனன
தான தானன தான தானன தனதன தனதானா.

அறுகுநுனி பனியனைய சிறியதுளி பெரியதொரு
ஆக மாகியோர் பால ரூபமாய்
அருமதலை குதலைமொழி தனிலுருகி யவருடைய
ஆயி தாதையார் மாய மோகமாய்.

அருமையினி லருமையிட மொளுமொளென வுடல்வளர
ஆளு லாசமாய் வாலரூபமாய்
அவரொரு பெரியோராய்

அழகுபெறு நடையுடைய கிறுதுபடு மொழிபழகி
ஆவி யாயவோர் தேவி மாருமாய்
விழுசுவரை யரிவையர்கள் படுகுழியை நிலைமையென
வீடு வாசலாய் மாட கூடமாய்
அணுவளவு கவிடுமிகள் பிதிரவிட மனமிறுகி
ஆசை யாளராய் ஊசி வாசியாய்
அவியுறு சுடர்போல

வெறுமிடிய ரொருதவசி யமுதுபடை யெனுமளவில்
மேலை வீடுகேள் கீழை வீடுகேள்
திடுதிடென நுழைவதன்முன் எதிர்முடுகி யவர்களொடு
சீறி ஞாளிபோல் ஏறி வீழ்வதாய்
விரகினொடு வருபொருள்கள் சுவறியிட மொழியுமொரு
வீணி யார்சொலே மேல தாயிட
விதிதனை நினையாதே

மினுகுமினு கெனுமுடல மறமுறுகி நெகிழ்வுறவும்
வீணர் சேவையே பூணு பாவியாய்
மறுமையுள தெனுமவரை விடும்விழலை யதனின்வரு
வார்கள் போகுவார் காணு மோனனை
விடுதுறவு பெரியவரை மறையவரை வெடுவெடென
மேளமே சொலாய் ஆளி வாயராய்
மிடையுற வருநாளில்

வழுமைகளு முடுகிவர வுறுபொருளு நழுவசில
வாத மூதுகா மாலை சோகைநோய்

பெருவயிறு வயிறுவலி படுவன்வர இருவிழிகள்
  பீளை சாடிடா ஈளை மேலிடா
வழவழென உமிழுமது கொழகொழென ஒழுகிவிழ
  வாடி யூனெலாம் நாடி பேதமாய்
                    மனையவள் மனம்வேறாய்
மருகமனை யுறுமவர்கள் நணுகநணு கெனுமளவில்
  மாதர் சீயெனா வாலர் சீயெனா
கனவுதனி லிரதமொடு குதிரைவர நெடியசுடு
  காடு வாவெனா வீடு போவெனா
கலைதழிய விரகழிய உரைகுழறி விழிசொருகி
  வாயு மேலிடா ஆவி போகுநாள்
                    மனிதர்கள் பலபேச
இறுதியதொ டறுதியென உறவின்முறை கதறியழ
  ஏழை மாதரார் மோதி மேல்விழா
எனதுடைமை யெனதடிமை யெனுமறிவு சிறிதுமற
  ஈமொ லேலெனா வாயை ஆவெனா
இடுகுபறை சிறுபறைகள் திமிலையொடு தவிலறைய
  ஈம தேசமே பேய்கள் சூழ்வதாய்
                    எரிதனி லிடும்வாழ்வே
இணையடிகள் பரவுமுன தடியவர்கள் பெறுவதுவும்
  ஏசி டார்களோ பாச நாசனே
இருவினையு மலமுமற இறவியொடு பிறவியற
  ஏக போகமாய் நீயு நானுமாய்
இறுகும்வகை பரமசுக மதனையரு ளிடைமருதில்
  ஏக நாயகா லோக நாயகா
                    இமையவர் பெருமாளே. ௭௧

## வயலூர்

தத்த தனதன தனனா தனனா தனதான.

நெய்த்த சுரிகுழ லறலோ முகிலோ
பத்ம நறுநுதல் சிலையோ பிறையோ
நெட்டை யிணைவிழி கணையோ பிணையோ இனிதூறும்
நெக்க அமுதிதழ் கனியோ துவரோ
சுத்த மிடறது வளையோ கமுகோ
நிற்கு மிளமுலை குடமோ மலையோ அறவேதேய்ந்
தெய்த்த இடையது கொடியோ துடியோ
மிக்க திருவரை அரவோ ரதமோ
இப்பொ னடியிணை மலரோ தளிரோ எனமாலாய்
இர்சை விரகுடன் மடவா ருடனே
செப்ப மருளுட னவமே திரிவேன்
ரத்ந பரிபுர இருகா லொருகால் மறவேனே
புத்த ரமணர்கள் மிகவே கெடவே
தெற்கு நரபதி திருநீ றிடவே
புக்க அனல்வய மிகஏ டுயவே உமையாள்தன்
புத்ர னெனஇசை பகர்நூல் மறைநூல்
கற்ற தவமுனி பிரமா புரம்வாழ்
பொற்ப கவுணியர் பெருமா னுருவாய் வருவோனே
சத்த முடையசண் முகனே குகனே
வெற்பி லெறிசுட ரயிலா மயிலா
சத்தி கணபதி யிளையா யுளையா யொளிகூரும்
சக்ர தரஅரி மருகா முருகா
உக்ர இறையவர் புதல்வா முதல்வா
தப்ப முளதட வயலூ ரியலூர் பெருமாளே. ௭௨

## வள்ளிமலை

தையதன தான தையதன தான
தையதன தானத் தனதான.

அல்லிவிழி யாலு முல்லைநகை யாலு
மல்லல்பட ஆசைக் கடலீயும்
அள்ளவினி தாகி நள்ளிரவு போலு
முள்ளவினை யாரத் தனமாரும்
இல்லுமிளை யோரு மெல்லஅய லாக
வல்லெருமை மாயச் சமனாரும்
எள்ளியென தாவி கொள்ளைகொளு நாளி
லுய்யவொரு நீபொற் கழல்தாராய்
தொல்லைமறை தேடி இல்லையெனு நாதர்
சொல்லுமுப தேசக் குருநாதா
துள்ளிவிளை யாடு புள்ளியுழை மேவு
வெள்ளிவன மீதுற் றுறைவோனே
வல்லசுரர் மாள நல்லசுரர் வாழ
வல்லவடி வேலைத் தொடுவோனே
வள்ளிபடர் சாரல் வள்ளிமலை மேவு
வள்ளிமண வாளப் பெருமாளே. ௭௩

## பொது

தானான தான தனதன தானான தான தனதன
தானான தான தனதன தனதான

ஆசார வீன னறிவிலி கோபாப ராதி யவகுண
னாகாத நீச னநுசிதன் விபரீதன்

ஆசாவி சார வெகுவித மோகாச ரீச பரவச
ஞகாச நீர்ம ணனல்வளி யுருமாறி
மாசான நாலெண் வகைதனை நீநானெனாத அறிவுளம்
வாயாத பாவி யிவனென நினையாமல்
மாதாபி தாவி னருணல மாறாம காரி லெனையினி
மாஞான போத மருள்செய நினைவாயே
விசால வேலை சுவறிட மாசூரர் மார்பு துளைபட
வேதாள ராசி பசிகெட அறைகூறி
மேகார வாரமென அதிர் போர்யானை தானை ரமபுர
மீதேற வேல்கொ டமர்செயு மிளையோனே
கூசாது வேட னுமிழ்தரு நீராடி யூனு ணெனுமுறை
கூறாம னீய அவனுகர் தருசேடங்
கோதாமெ னாம லமுதுசெய் வேதாக மாதி முதல்தரு
கோலோக நாத குறமகள் பெருமாளே. ௭௪

தனன தானன தந்தன தந்தன தனதான.

புகரில் சேவல தந்துர சங்க்ரம
நிருதர் கோபக்ர வுஞ்சநெ டுங்கிரி
பொருத சேவக குன்றவர் பெண்கொடி மணவாள
புனித பூசுர ருஞ்சுர ரும்பணி
புயச பூதர என்றிரு கண்புனல்
பொழிய மீமிசை யன்புது ளும்பிய மனனாகி
அகில பூதவு டம்புமு டம்பினில்
மருவு மாருயி ருங்கர ணங்களு
மவிழ யானுமி ழந்தலி டந்தனி லுணர்வாலே

அகில வாதிக ளுஞ்சம யங்களும்
அடைய ஆமென அன்றென நின்றதை
யறிவி லேனறி யும்படி யின்றருள் புரிவாயே
மகர கேதன முந்திகள் செந்தமிழ்
மலய மாருத மும்பல வெம்பரி
மளசி வீமுக மும்பல மஞ்சரி வெறியாடும்
மதுக ராரம்வி குஞசணி யுங்கர
மதுர கார்முக மும்பொர வந்தெழு
மதன ராஜனை வென்றுவி ழும்படி முனிபால
முகிழ்வி லோசன ரஞ்சிறு திங்களு
முதுப கீரதி யும்புனை யுஞ்சடை
முடியர் வேதமு நின்றும ணங்கமழ் அபிராமி
முகர நூபுர பங்கய சங்கரி
கிரிகு மாரித்ரி யம்பகி தந்தருள்
முருக னேசுர குஞ்சரி ரஞ்சித பெருமாளே. ௭௫

தானந்த தானத்தந் தனதான.

நீலங்கொள் மேகத்தின் மயில்மீதே
நீவந்த வாழ்வைக்கண் டதனாலே
மால்கொண்ட பேதைக்குன் மணநாறும்
மார்தங்கு தாரைத்தந் தருள்வாயே
வேல்கொண்டு வேலைப்பண் டெறிவோனே
வீரங்கொள் சூரர்க்குங் குலகாலா
நாலந்த வேதத்தின் பொருளோனே
நானென்று மார்தட்டும் பெருமாளே. ௭௬

---

## பகழிக்கூத்தர்

அருளிய

# திருச்செந்தூர்ச் சுப்பிரமணியர் பிள்ளைத்தமிழ்

## முத்தப்பருவம்

கத்துந் தரங்க மெடுத்தெறியக்
கடுஞ்சூ லுளைந்து வலம்புரிகள்
கரையிற் றவழ்ந்து வாலுகத்திற்
கான்ற மணிக்கு விலையுண்டு
தத்துங் கரட விகடதட
தந்திப் பிறைக்கூன் மருப்பில்விளை
தரளந் தனக்கு விலையுண்டு
தழைத்துக் கழுத்து வளைந்தமணிக்
கொத்துஞ் சுமந்த பசுஞ்சாலிக்
குளிர்முத் தினுக்கு விலையுண்டு
கொண்ட றருமித் திலந்தனக்குக்
கூறுந் தரமுண் டுன்கனிவாய்
முத்தந் தனக்கு விலையில்லை
முருகா முத்தந் தருகவே
முத்தஞ் சொரியுங் கடலலைவாய்
முதல்வா முத்தந் தருகவே. ௭௭

கலைப்பால் குறைத்த பிறைமுடிக்குங்
கடவு ளுடலின் விளைபோகங்
கனலி கரத்தி லளிக்கவந்தக்
கனலி பொறுக்க மாட்டாமன்

மலைப்பால் விளங்குஞ் சரவணத்தில்
வந்து புகுத வோராறு
மடவார் வயிறு சூலுளைந்து
மைந்த ரறுவர்ப் பயந்தெடுப்பக்
கொலைப்பால் விளங்கும் பரசுதரன்
குன்றி லவரைக் கொடுசெல்லக்
கூட்டி யணைத்துச் சேரவொரு
கோல மாக்கிக் கவுரிதிரு
முலைப்பால் குடித்த கனிவாயால்
முருகா முத்தந் தருகவே
முத்தஞ் சொரியுங் கடலலைவாய்
முதல்வா முத்தந் தருகவே. ௭௮

## வாரானைப்பருவம்

எள்ளத் தனைவந் துறுபசிக்கு
மிரங்கிப் பரந்து சிறுபண்டி
யெக்கிக் குழைந்து மணித்துவர்வா
யிதழைக் குவித்து விரித்தழுது
துள்ளித் துடித்துப் புடைபெயர்ந்து
தொட்டி லுதைந்து பெருவிரலைச்
சுவைத்துக் கடைவாய் நீரொழுகத்
தோளின் மகரக் குழைதவழ
மெள்ளத் தவழ்ந்து குறுமூரல்
விளைத்து மடியின் மீதிருந்து
விம்மிப் பொருமி முகம்பார்த்து
வேண்டு முலையாள் களபமுலை

மள்ளத் தமுதுண் டகமகிழ்ந்த
மழலைச் சிறுவா வருகவே
வளருங் களபக் குரும்பைமுலை
வள்ளி கணவா வருகவே. ௭௬

பேரா தரிக்கு மடியவர்தம்
பிறப்பை யொழித்துப் பெருவாழ்வும்
பேறுங் கொடுக்க வரும்பிள்ளைப்
பெருமா னென்னும் பேராளா
சேரா நிருதர் குலகலகா
சேவற் கொடியாய் திருச்செந்தூர்த்
தேவா தேவர் சிறைமீட்ட
செல்வா வென்றுன் றிருமுகத்தைப்
பாரா மகிழ்ந்து முலைத்தாயர்
பரவிப் புகழ்ந்து விருப்புடனப்
பாவா வாவென் றுனைப்போற்றப்
பரிந்து மகிழ்ந்து வரவழைத்தால்
வாரா திருக்க வழக்குண்டோ
வடிவேன் முருகா வருகவே
வளருங் களபக் குரும்பைமுலை
வள்ளி கணவா வருகவே. ௮0

## சிற்றிற்பருவம்

தையன் மடவா ரிழைத்தவண்ட
றன்னை யழிக்கு மதுக்கல்ல
தாள முறுத்தி யுனதுபொற்பூந்
தண்டைத் திருத்தா டடியாதோ

தூய்ய தவளப் பிறைமுடிக்குஞ்
சோதி யெடுத்து முகந்தணைத்துத்
தோளி லிருத்தப் பொழுதுமணித்
தோளிற் புரண்டு நோயாதோ
வைய மனைத்து மீன்றெடுத்தும்
வயது முதிரா மடப்பாவை
மடியி லிருந்து முலையூட்டி
வதனத் தணைக்கி லுன்கழற்காற்
செய்ய சிறுதாள் செறியாதோ
சிறியே னுஞ் சிற்றில் சிதையேலே
திரைமுத் தெறியுந் திருச்சேந்தூர்ச்
செல்வா சிற்றில் சிதையேலே. ௯௧

---

குமரகுருபரசுவாமிகள்

அருளிய

# வயித்தீசுரர் கோயில் முத்துக்குமார சுவாமி பிள்ளைத்தமிழ்

## முத்தப்பருவம்

கலைப்பா னிறைந்த முதுக்குறைவிற்
கல்விச் செல்வர் கேள்விநலங்
கனியக் கனிய வமுதூறுங்
கடவுண் மறையு முதற்சங்கத்
தலைப்பா வலர்தீஞ் சுவைக்கனியுந்
தண்டே னறையும் வடித்தெடுத்த

சாரங் கனிந்தூற் றிருந்தபசுந்
தமிழூ றாறத் தடங்கரைகொ
லலைப்பாய் புனற்றெண் கடல்வைப்பு
மகிலாண் டரும்பன் முறையீன்று
மழகு முதிர முதிராவென்
னம்மை யமுது சூற்கொண்ட
முலைப்பா லூறுஞ் செங்கனிவாய்
முத்தந் தருக முத்தமே
மும்மைத் தமிழ்தேர் கந்தபுரி
முருகா முத்தந் தருகவே. ௮௨

## வாரானைப்பருவம்

மழவுமுதிர் கனிவாய்ப் பசுந்தேறல்
வெண்டுகின் மடித்தல நனைப்பவம்மை
மணிவயிறு குளிரத் தவழ்ந்தேறி
யெம்பிரான் மார்பினிற் குரவையாடி
முழவுமுதிர் துடியினிற் சிறுபறை
முழக்கியனன் மோலிநீர் பெய்தவித்து
முளைமதியை நெளியரவின் வாய்மடுத்
திளமானின் முதுபசிக் கறுகருத்தி
விழவுமுதிர் செம்மேனி வெண்ணீறு
தூளெழ மிகப்புழுதி யாட்டயர்ந்து
விரிசடைக் காட்டினின் றிருவிழிகள்
சேப்பமுழு வெள்ளநீர்த் துளையமாடிக்
குழவுமுதிர் செல்விப் பெருங்களி
வரச்சிறு குறும்புசெய் தவன்வருகவே

குரவுகமழ் தருகந்த புரியிலருள்
குடிகொண்ட குமரகுரு பரன்வருகவே. அ௩

பைந்தண் கமல வட்டவணைப்
பாவை யனையார் பூவிரியும்
பசுமென் குழற்கூட் டகிற்புகையின்
படல மூட முடைநறவின்
கந்தம் பொதிந்த செந்துவர்வாய்க்
கடைசி மகளிர் செந்நெலைப்பைங்
கன்ன லெனவுங் கன்னலைப்பூங்
கமுக மெனவுங் கடைக்கூடாத்
தந்தங் கருத்துக் கமைந்தபடி
சாற்றிச் சாற்றி முழுமாயச்
சலதி மூழ்கித் தடுமாறுஞ்
சமயத் தவர்போற் றலைமயங்கு
மந்தண் பழனக் கந்தபுரிக்
கரசே வருக வருகவே
அருளா னந்தக் கடற்பிறந்த
வமுதே வருக வருகவே. அச

## சிற்றிற்பருவம்

வழிக்குப் புறம்பா யாமிழைத்த
வண்டன் மனையவ் வசுரேசன்
வான்கூட் டுண்பா னடுக்கடலில்
வகுத்த நகரன் றிகழாமே
கொழிக்குஞ் சிறுமுற் றிலில்வாரிக்
கொடுவந் தடியே மனைமுன்றிற்

குவியா நின்ற மணிக்குவையக்
குருகு பெயர்க்குன் றமுமன்றாற்
சுழிக்குண் டகழி வாய்மடுப்பச் சுடர்வால்
வளைத்தெண் டிரைக்கரத்தாற்
சுரபி சொரிபான் மடையடைத்த
சோற்றி ஞேடுங் கலந்தூட்டிச்
செழிக்குந் தடங்கா விரிநாடா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
செந்நெற் பழனப் புள்ளூரா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. ௮௫

மடல்வா யவிழ்ந்த குழற்பேதை
யொருத்தி திருத்தும் பகிரண்ட
மணற்சிற் றிலேயோர் கணத்தின்கண்
மட்டித் தாடு மைந்தனருள்
விடலாய் தமியேஞ் சிற்றின்முற்றும்
விளையாட் டாக வொருநீயும்
வீட்டா நிற்பத் தொடங்கினையால்
வித்து முளையும் வேறன்றே
கடமா மருப்புஞ் சுடர்மணியுங்
கதிர்நித் திலமு மகளிர்முலைக்
களபத் தொடுகுங் குமச்சேறுங்
கரைத்து விடுத்தக் கடற்குட்டந்
திடராச் செயுங்கா விரிநாடா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
செந்நெற் பழனப் புள்ளூரா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. ௮௬

## அந்தகக்கவி வீரராகவ முதலியார்

அருளிய

# சேயூர்முருகன் பிள்ளைத்தமிழ்

## முத்தப்பருவம்

எஞ்சா முகிற்கு ளிரண்டுமுகி
லெறிதேன் கடலும் பாற்கடலு
மிருபக் கமும்போய் முகந்துமுகந்
திறைப்ப நறைப்பைந் துழாய்மௌலிப்
பஞ்சா யுதனென் றொருகேழ
லுழும்பே ரண்டப் பழனத்துப்
பழைய வேதச் சுவையை விதைக்
கரும்பா யமைத்துப் பணைத்தெழலும்
விஞ்சா ரமுதப் பிறைவாட் கொண்
டிறையோ னறுப்ப வெடுத்துவட
மேருச் சேக்கூ டிருநான்கு
கரியால் வெய்யோன் றிருப்பவிழுஞ்
செஞ்சா றிழைத்த தெனுமழலைத்
திருவாய் முத்தந் தருவாயே
செய்கைக் கரசே மயிற்கரசே
திருவாய் முத்தந் தருவாயே. ௮௭

## வாரானைப்பருவம்

பரியாற் கரடக் கடகரியாற்
பார்க்குந் தரள விளையாடும்
பருவச் சிறார்சிற் றடிப்பொடியும்
பசும்பொற் றொடியார் பலகோடி

பிரியாத் தெருவிற் சொரிசுண்ணம்
பிறங்குந் துகளு மகிற்புகையும்
பெருங்கா ரகிலா வியுங்கரும்பிற்
பிழிந்த பொழிசா றடுங்குய்பு
மரியாற் குயிலப் பயின்மாடத்
தாடுந் துவசக் குலத்துகிலு
மண்டத் தனவும் பிறபொதுளி
யமரா வதிக்கொத் திரவுபக
றெரியாப் பெரிய வளங்கிளருஞ்
செய்கைப் பெருமாள் வருகவே
செவ்வேற் பெருமாண் மயிற்பெருமா
டெய்வப் பெருமாள் வருகவே. ௮௮

## சிற்றிற்பருவம்

உதயா தவற்கு மிமகாற்கு
மொழியாப் பதமு மழைவண்ணத்
தொருவன் புரந்த மாளிகையு
மும்பர்க் கரசன் பீடிகையுஞ்
சுதையா தரிக்குஞ் சுரர்வீடு
முடிவி னிருப்பும் பெருமுனிவர்
சுருதி கிளைக்குந் திருமனையுஞ்
சோரா வுரகப் பேரகமும்
மதயா னையினெண் டிசைப்பாலர்
மணியா லயமும் விஞ்சையர்கள்
வயங்குங் கோயில் பலப்பலவும்
மக்கட் குடியும் புக்கவுணர்

சிதையா துதித்த பிரானன்றோ
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
சேயே சேயூர்ப் பெருமானே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. அ௬

உருமே கடுக்குந் திருவரைநா
ணுடுக்கு மணிக்கிங் கிணிநாவி
டொருசற் றொலித்தார் பகிரண்ட
கூடந் திடுக்கிட் டுடையாதோ
மருவே திகழுஞ் செங்கமல
மலர்ச்சீ றடியிற் சிறுசதங்கை
வாய்விட் டரற்றிற் கடலேழும்
வாய்விட் டரற்றி மறுகாதோ
குருமே தகைய கடகமுங்கைத்
தொடியுங் கறங்கிற் புவனமெலாங்
கோலி வளைக்கும் பலகோடிக்
குவடும் பிதிர்பட் டுதிராதோ
திருமே னிகுழைந் திடநடந்து
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
சேயே சேயூர்ப் பெருமானே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. ௯௰

சுற்றின் முழங்குங் கடலேழு
முலையாய்ச் சுடுத வடவனலாய்த்
தொல்லைத் திகிரிக் கிரியடுப்பாய்ச்
சுடர்மா மேரு கடமையாய்
முற்றில் பிடித்துக் கொழித்தெடுக்கும்
வல்சி முகட்டி லுடுக்குலமாய்

முதிருங் கதிரே திருவிளக்காய்
முகிலூர் தியினான் மூதூரும்
பற்றில் வருத்த பேரளகைப்
பதியும் பசும்பொன் னறையேயாய்ப்
பணிப்பா தலஞ்செம் மணிப்பேழைப்
படியா யடையும் பகிரண்டஞ்
சிற்றி லிழைப்பா டன்மகனே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
சேயே சேயூர்ப் பெருமானே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. ௯௧

வெய்யோன் பகலை யிரவாக்கும்
விரகிற் பெரிய நின்மாமன்
மேனாட் பொதுவ ரகம்புகுந்து
வெண்பா லுறியி னடுக்குழிப்பக்
கையோ ரிரண்டும் பிணித்திலரோ
குடவர் மடவார் சசங்காக்குங்
கடவு ளெனத்தான் பயந்தனரோ
கட்டா தகல விட்டனரோ
வையோ புலந்து தமியேமு
மன்னை மார்க்குஞ் செவிலியர்க்கு
மழுது மொழிந்தாற் சீறாரோ
வனைத்து மொருவ னாகிநிற்குஞ்
செய்யோன் மகனென் றஞ்சுவரோ
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
சேயே சேயூர்ப் பெருமானே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. ௯௨

## மார்க்கசகாயதேவர்

அருளிய

# திருவிரிஞ்சைமுருகன் பிள்ளைத்தமிழ்

---

## முத்தப்பருவம்

அரைமீது கட்டுநவ மணிநாணு நெற்றிதனி
லழகாய பொற்சுடிகையோ
டணிநீறு முத்துவட மிசைமார்பு நற்செவியி
லசைவாய பொற்குழையுநீள்
வரைவார ணக்கொடியு மயில்வாக னப்பரியு
மணநாறு சிற்றடியுமே
மலமாயை விட்டகல மறவாத பத்தருடன்
வடியேனை வைத்த தலைவா
விரைவாயொ லித்தபுனல் மதகூடு பட்டதிர
விசையாகி முட்டி யிளநீர்
விழவேகு தித்ததிக வலைவாண ரைக்கதுவி
விளையாடி யிட்ட கயல்சூழ்
திரைவாவி யுற்றகர பரிவாழ்தி ருக்குமர
திருவாயின் முத்த மருளே
சிறுதாம ரைக்குநிக ரறுமாமு கங்குழவி
திருவாயின் முத்த மருளே.

## வருகைப்பருவம்

உருகா மனமுஞ் சிவஞான
முணரா வறிவு முணதுபுக

ழோதா காவு மோதக்கேட்
டுவந்தே யினிய நதிபோலப்
பெருகா விழியு முடையேனை
பிறவிக் கடலில் வீழாமற்
பேணி யெடுத்திங் கெனதுள்ளம்
பிரியா விரிஞ்சைப் பதிவாழு
முருகா வருக சதுர்வேத
முதல்வா வருக வினைதீர்க்கு
முனைவா வருக மலராறு
முகவா வருக திருமாலின்
மருகா வருக மயிலேறு
மன்னா வருக வடியார்கள்
வாழ்வே வருக தெய்வசிகா
மணியே வருக வருகவே. ௬௪

கண்ணா லுனது திருவடியைக்
கண்டா தரவு பெருகியிரு
கையாற் றொழுதுன் றிருக்கோயில்
காலால் வலஞ்செய் துனதுபுகழ்
பண்ணா லுருகிப் புகழ்ந்துகண்ணீர்
பாயா வெனையுந் தாயாகப்
பரிந்து வளர்க்கும் பெருங்கருணை
படைத்து விரிஞ்சைப் பதிவாழு
மண்ணால் வருக வுலகமுழு
தாண்டாய் வருக கதிதருமெம்
மையா வருக வாறுமுக
வப்பா வருக விளங்குகதிர்

வண்ணா வருக மயிலேறு
மன்னா வருக வடியார்கள்
வாழ்வே வருக தெய்வசிகா
மணியே வருக வருகவே. ௩௯

தேவே வருக திருவிரிஞ்சைச் சேயே
வருக தெவிட்டாத
தேனே வருக சுவையமுதத்
தெளிவே வருக கதிகொடுக்குங்
காவே வருக பெருங்கருணைக்
கடலே வருக கலைபொழியுங்
காரே வருக மரகதத்தின்
கண்ணே வருக விண்ணோர்கள்
கோவே வருக பெரியகுணக்
குன்றே வருக வுபதேச
குருவே வருக சிவஞானக்
கொழுந்தே வருக வொருகரத்தின்
மாவே லெடுத்த பரப்பிரம
வடிவே வருக வடியார்கள்
வாழ்வே வருக தெய்வசிகா
மணியே வருக வருகவே. ௪௰

## சிற்றிற்பருவம்

வங்கத் தரங்கக் கடலன்று
மாயக் கிரவுஞ்ச கிரியன்று
வானத் துயரு மாவன்று
மருவா ருறையும் பதியன்று

துங்கத் தசுரர் முடியன்று
தொலையா வமரர் சிறையன்று
தூரக்க கொடுமா முகியன்று
தொழுவார் பிறவித் துயரன்று
சங்கத் தவனு மலரோனுந்
தவளா சலத்தில் வருவோனுஞ்
சரணஞ் சரண மெனும்புதிய
தண்டை முழங்குஞ் சிறுதாளா
லங்கைக் கதிர்வே லுடையோனை
யடியேஞ் சிற்றி லழியேலே
யரசே விரிஞ்சைப் பதிவாழ்வே
யடியேஞ் சிற்றி லழியேலே. ௬௭

---

## கந்தப்பதேசிகர்

அருளிய

# திருத்தணிகைப் பிள்ளைத்தமிழ்

---

### முத்தப்பருவம்

மெய்வாய் மூக்குக் கண்செவியின்
வழிபோய் விடயங் களையருந்தி
விரவும் வினையாற் சுழல்பிறவி
வேலை கடக்குங் கருத்துடையார்
ஐவாய் வேட்கை யவாவொழிந்திட்
டாறு தாரப் படியேறி

யாறோ டாறங் குலமீதி
லறியு நிமலப் பெருவெளியில்
கைவாய் மழுவுங் கறைமிடறுங்
கண்ணார் நுதலும் பிறைமுடியுங்
கவினத் தோன்றுஞ் சிவனிடத்திற்
கலந்த வுமையா ளுடன்பிறந்த
மெய்வா னறுமீ னுவந்தளித்த
முத்தே முத்தந் தருகவே
மூலாத் திரியி லெழுஞான
முளையே முத்தந் தருகவே. ௩௰

## வருகைப்பருவம்

கன்னற் குதலைச் செங்கனிவாய்க்
கலச முலைப்பொற் கடைசியர்தங்
கருங்கண் மலரைப் பூந்தடத்திற்
கமலத் தருகு முறுக்கவிழும்
நன்னர்க் குவளை யெனவறுகால்
நாடிப் பெடையி னெடுஞ்சுழலும்
நகைத்தண் டரளம் பொழிநிலவால்
நறும்பூங் குமுதம் வாய்விரியும்
பின்னற் குழலை மேகமெனப்
பெருகுங் களிமா மயிலகவும்
பிறழும் வளைக்கை கஞ்சமெனப்
பிரியா தணங்க ளுவந்தேறும்
வன்னப் பணைசூழ் செருத்தணிகை
வாழ்வே வருக வருகவே

மலையா னுதவு முமையாள்கண்
மணியே வருக வருகவே. ௧௧

## சிற்றிற்பருவம்

துயினீங் கிச்கொடு வினைநீங் கிச்சிறை
துனிநீங் கிச்சுரர் களிகூரத்
துணைநீங் கிச்சொலு வணைநீங் கித்திரி
துயர்நீங் கிக்கரி யிறைவாழ
மயனீங் கிச்சுழன் மனநீங் கிப்பழ
மலநீங் கித்தவர் தவமேவ
மறநீங் கித்தினி பொறைநீங் கப்பல
மதநீங் கிப்புவி மகள்வீற
உயிர்நீங் கிப்புனை யுடைநீங் கிக்கரு
குடனீங் கித்தகு வர்கண்மாய
வுரைநீங் கிப்புய வலிநீங் கிப்பிழை
யுறநீங் கித்துணை வருமேவ
அயிலேந் திக்கரு மலைபோழ்ந் திட்டவ
னடியேஞ் சிற்றிலை யழியேலே
அருடாங் கித்தணி கையிலோங் குத்தம
னடியேஞ் சிற்றிலை யழியேலே. ௧

## சிதம்பரசுவாமிகள்
அருளிய
# திருப்போரூர்ப் பிள்ளைத்தமிழ்

---

## தாலப்பருவம்

மூல நிலத்தி லதோமுகமாய்
முகிழ்த்து விழியின் பொடுதுயிலு
மூரிப் பாம்பைக் காலனலை
மூட்டி யெழுப்பி நிலமாறுஞ்
சீல மொடும்போய்த் தரிசித்துச்
செழுமா மதியி னமுதகட
றேக்கி யகத்தங் கசைவறுமோர்
தெய்வத் தவத்தோ ருளவிழியிற்
காலுந் தீப மினல்பந்தங்
கடிகூர் விறிசு கதிர்மதிபோற்
காட்டு மொளியா யிவையாவுங்
கடந்தாங் கழிவில் பேரொளியாய்ச்
சால விளங்கும் விந்துவெனுந்
தடமா மயிலோய் தாலேலோ
தமரக் கடலைக் கடந்தமுதந்
தருவோன் மருகா தாலேலோ. ௱௧

## சப்பாணிப்பருவம்

பொருனைநதி யிற்படிந் திளமரக் காவிற்
புகுந்து சந்தப் பொங்கரிற்

புக்குமண நாறுமென் றற்குழவி விளையாடு
பொதியப் பொலங்கு வட்டிற்
றிரையெறியு மணியாழி யங்கையி லடக்கியஞ்
செந்தமிழ்க் கடல்வி ரித்துத்
திறமையுட னுறையுமொரு குறுமுனிய கத்தினுட்
டிமிரமற மறைமுடி வெனு
மருளொளி பரப்புஞா னக்கொழுஞ் சுடர்வைத்த
வாறு னனக் கொண்டலே
யன்பர்வாய் வண்குமுதம் விண்டுதண் டமிழ்நறவு
மாரவெழு மொரு மதியமே
தருணவுமை முககமல மலரவரு பரிதியே
சப்பாணி கொட்டி யருளே
தடமலையை நிகர்கரிக டிரிசமர புரிமருக
சப்பாணி கொட்டி யருளே. ௱௨

## முத்தப்பருவம்

பூவே பூவிற் பரிமள மேயப்
பூநிறை சுவைநறவே
பொங்குங் கடலே கட்லி னுதித்தெழு
புனிதத் தெள்ளமுதே
காவே காவிற் கொஞ்சும் பஞ்ச
வனக்கட வுட்கிளியே
கண்ணே கண்ணு று பாவாய் பூவாய்
கனியே கனிரசமே
தேவே தேவர் சிரோமணி யேயென்
சீருயி ரேயுயிரிற்

செம்பொரு ளேயரு ளேமுழு மணியே
மணியிற் றேசிகமே
மூவா மறையே மறையின் பொருளே
முத்தந் தந்தருளே
முத்தமிழ் நற்சம ரப்பதி நாயக
முத்தந் தந்தருளே. ௪௩

## வருகைப்பருவம்

கருத்தே புகுந்து கதிகாட்டுங்
கண்ணே வருக மெய்ஞ்ஞானக்
கரும்பே வருக கருணைபொழி
காரே வருக வானந்தப்
பெருக்கே வருக யாங்கள்பெறும்
பேறே வருக மறைசொல்கிளிப்
பிள்ளாய் வருக பிறங்குதெய்வப்
பெம்மான் வருக குறமடந்தை
தருக்கே வருக மிடியகற்றுந்
தருவே வருக மன்பகைக்கோர்
தஞ்சே வருக வெமையளிக்குந்
தாயே வருக பவப்பிணிக்கு
மருந்தே வருக சமரபுரி
வாழ்வே வருக வருகவே
மறையின் சிரமெய்ப் பொருளான
வள்ளல் வருக வருகவே. ௪௪

## சிறுபறைப்பருவம்

இனிமொழி புகல்வார் கீதம்பயில்வார்
    கின்னரி வாசிப்பார்
  கேழ்கல னணிவார் மாலைகள்புனைவார்
    கிளர்மயி னடமிடுவா
ரளிசுழல் பூம்பந் தெறிவார்குங்கும
    மள்ளி யிறைத்திடுவா
  ராடவர் புயவணை மீதிற்றுயில்வா
    ரழகு பணிக்கருள்வார்
களிறிடை வருவார் சிவிகையில்வருவார்
    கவனப் பரிவருவார்
  காமனில் வருவார் மாமனில்வருவார்
    கஞ்சனில் வந்திடுவார்
குளிர்தமிழ் புனைவார் நிகழ்போரூரிறை
    கொட்டுக சிறுபறையே
  கொத்துறு முத்தமிழ் மெத்தவளர்த்தவ
    கொட்டுக சிறுபறையே. ௭௫

## சிற்றிற்பருவம்

தேமாங் கனியி னடுப்பமைத்துத்
    திகழூன் கழிந்த வலம்புரியிற்
  செந்தே னுலைப்பெய் தரவீன்ற
    செழுமா மணிவெங் கனன்மூட்டிப்
பூமா தளையின் விதையரிசி
    புகட்டிச் சமைத்துக் கதலிமடற்
  பொங்கப் பிழிபு மதன்கனியும்
    பொருந்த வளவிக் கறியட்டுக்

காமா தவிப்பூம் பந்தரிடைக்
கயற்கண் ணுய மிழைத்தவண்டல்
கருதும் புவன கோடியெல்லாங்
கரந்தும் படைத்துங் காக்குமொரு
சீமா னுனக்கோ ரிலக்கோசொல்
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
தேரூர் வீதிப் போரூரா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. ௱ள

---

சேங்கோட்டை கவிராஜபண்டாரத்தையா
இயற்றிய
## திருமலைப் பிள்ளைத்தமிழ்

---

### முத்தப்பருவம்

அழிந்து புவன மொழிந்திடினு
மழியாத் தோணி புரத்தின்மறை
யவர்கள் குலத்தி லுதித்தரனை
டம்மை தோன்றி யளித்தவள்ளச்
செழுந்தண் முலைப்பால் குடித்துமுத்தின்
சிவிகை யேறி மதுரையிற்போய்ச்
செழியன் பிணியுஞ் சமண்பகையுந்
தேவி துயருந் தீர்த்தருளி
வழிந்து நறுந்தே னுகுவனபோல்
மதுரங் கனிந்து கடைதுடிக்க
வடித்துத் தெளிந்த செந்தமிழ்த்தே
வாரப் பாடல் சிவன்கேட்க

மொழிந்து சிவந்த கனிவாய்ச்சன்
முகனே முத்தந் தருகவே
முத்துக் குமரா திருமலையின்
முருகா முத்தந் தருகவே. ௯௭

## வருகைப்பருவம்

வெண்சா மரைபோற் பலவிதமாய்
விரிந்த மனத்தின் கருவியெல்லாம்
வெவ்வே றாகப் பகுத்தறிந்த
விநய மறிந்தங் குனையறிந்து
கண்சா ரொழுக விம்மிவிம்மிக்
கரைய வழுது கசிந்துருகிக்
களித்துச் சிரித்துக் குதித்தாடிக்
கவிஞைக் குழறத் துதித்திடுவோர்
எண்சா ணுடம்பு மினிக்கமகிழ்ந்
தெங்கும் பெருகி யலைமோதி
யிரண்டு வினையின் கரைகள்கடந்
தெழுந்த பரமா னந்தமெனும்
வண்சா கரத்தி லுதித்தசுவை
மருந்தே வருக வருகவே
வரதச் சரதத் திருமலையின்
மழலைக் குழவி வருகவே. ௯௮

## சிறுபறைப்பருவம்

வள்ளிமலை தனின்முதிய சிவமுனிவன் முன்னமொரு
மான்வந் துலாவமானை

மாமுனிவ னயனத்தி னற்புணர்ந் திடவதன்
வயிற்றிடை கருப்பமாகித்
துள்ளியயர் வோடுவயி றீற்றுழைந் தீன்றெயினர்
தொட்டகுழி யிட்டகலவுந்
தூங்கச் சிலைக்குறவர் மரகதச் சிலையெனத்
தோகையைக் கண்டெடுத்து
விள்ளுமுவ கைக்கடல் படிந்தவர்கள் சிற்றூரில்
விரைவினொடு கொண்டுவந்து
வீறுடன் வளர்த்துத் தினைப்புனத் தினில்வைத்த
வேட்டுவ மடந்தைகையாற்
றெள்ளுதினை மாவுக் கவாவுற்ற மோகனே
சிறுபறை முழக்கியருளே
செழுமறை முழக்கமுறு திருமலை யருட்குமர
சிறுபறை முழக்கியருளே. ௯௬

## சிற்றிற்பருவம்

பொன்னி னிறமாய்ச் சிவந்துமுளை
புறப்பட் டெழுந்து மரகதத்தின்
பொலிவு பெறவே குருந்துவிட்டுப்
பூத நாதன் படைபோல
மன்னு மருங்கிற் கிளைகிளைத்து
வள்ளற் குணத்தோர் செல்வமென
வளர்ந்து தாணி வனப்பினென
வசியப் பசியப் பாம்பினெனத்
துன்னும் பொதியாக் கதிரீன்று
துட்டரெனவே செம்மாந்து

சொல்லு மறிஞர் போலருட்பால்
சுரந்து சுரந்து தலைவணங்குஞ்
செந்நெல் வயற்பண் ணைபயம்பதியாய்
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
செல்லுத் தவழூந் திருமலையிற்
செல்வா சிற்றில் சிதையேலே. ளய

---

## இராமலிங்க அடிகள்
அருளிய
## திருவருட்பா

---

முன்னைப் பொருட்கு முதற்பொருளே
முடியா தோங்கு முதுமறையே
முக்கட் கரும்பின் றெடுத்தமுழு
முத்தே முதிர்ந்த முக்கனியே
பொன்னைப் புயங்கொண் டவன்போற்றும்
பொன்னே புனித பூரணமே
போத மணக்கும் புதுமலரே
புலவ ரெவரும் புகும்பதியே
மின்னைப் பொருவு முலகமயல்
வெறுத்தோ ருள்ள விளக்கொளியே
மேலுங் கீழு நடுவுமென
விளங்கி நிறைந்த மெய்த்தேவே
தன்னைப் பொருவுஞ் சிவயோகந்
தன்னை யுடையோர் தம்பயனே
தணிகா சலமாந் தலத்தமர்ந்த
சைவ மணியே சண்முகனே. ௧௧௧

முருகா வெனநின் றேத்தாத
மூட ரிடம்போய் மதிமயங்கி
முன்னு மடவார் முலைமுகட்டின்
முயங்கி யலைந்தே நினைமறந்தே
ஊருகா வஞ்ச மனத்தேனை
யுருத்தீர்த் தியம னொருபாசத்
துடை நடுக்க விசிக்கிலவற்
குரைப்ப தறியே னுத்தமனே
பருகா துள்ளத் தினித்திருக்கும்
பாலே தேனே பகருட்செம்
பாகே தோகை மயினடத்தும்
பரமே யாவும் படைத்தோனே
தருகா தலித்தோன் முடிகொடுத்த
தரும துரையே தற்பரனே
தணிகா சலமாந் தலத்தமர்ந்த
சைவ மணியே சண்முகனே. ௪௪௨

முத்தியின் முதல்வபோற்றி மூவிரு முகத்தபோற்றி
சத்திவேற் கரத்தபோற்றி சங்கரி புதல்வபோற்றி
சித்திதந் தருளுந்தேவர் சிகாமணி போற்றிபோற்றி
பத்தியின் விளைந்தவின்பப் பரம்பர போற்றிபோற்றி.

ஒருமையுட னினதுதிரு மலரடி நினைக்கின்ற
வுத்தமர்த முறவுவேண்டும்
உள்ளொன்று வைத்துப் புறம்பொன்று பேசுவா
ருறவுகல வாமைவேண்டும்

பெருமைபெறு நினதுபுகழ் பேசவேண்டும் பொய்மை
　　பேசா திருக்கவேண்டும்
　பெருநெறி பிடித்தொழுக வேண்டுமத மானபேய்
　　பிடியா திருக்கவேண்டும்
மருவுபெண் ணாசையை மறக்கவே வேண்டுமுனை
　　மறவா திருக்கவேண்டும்
　மதிவேண்டு நின்கருணை நிதிவேண்டு நோயற்ற
　　வாழ்வினான் வாழவேண்டும்
தருமமிகு சென்னையிற் கந்தகோட் டத்துள்வளர்
　　தலமோங்கு கந்தவேளே
　தண்முகத் துய்யமணி யுண்முகச் சைவமணி
　　சண்முகத் தெய்வமணியே.　　௧௧௭

உளமெனது வசநின்ற தில்லையென் றொல்லை
　　வினையொல்லை விட்டிடவுமில்லை
　உன்பதத் தன்பில்லை யென்றனுக் குற்றதுணை
　　யுனையன்றி வேறுமில்லை
இளையனவ னுக்கருள வேண்டுமென் றுன்பா
　　லிசைக்கின்ற பேருமில்லை
　ஏழையவ னுக்கருள்வ தேனென்று னெதிர்நின்
　　றியம்புகின் றோருமில்லை
வளமருவு முனதுதிரு வருள்குறைவ தில்லைமேன்
　　மற்றொரு வழக்குமில்லை
　வந்திரப் போர்களுக் கில்லையென்ப தில்லைநீ
　　வன்மனத் தவனுமல்லை
தளர்விலாச் சென்னையிற் கந்தகோட் டத்துள்வளர்
　　தலமோங்கு கந்தவேளே

தண்முகத் துய்யமணி யுண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வமணியே. ௧௧௫

சத்திக்கு மென்னுளந் தித்திக்கு மின்பமே
யென்னுயிர்க் குயிராகுமோர்
ஏகமே யானந்த போகமே யோகமே
யென்பெருஞ் செல்வமேநன்
முத்திக்கு முதலான முதல்வனே மெய்ஞ்ஞான
மூர்த்தியே முடிவிலாத
முருகனே நெடியமான் மருகனே சிவபிரான்
முத்தாடு மருமைமகனே
பத்திக்கு வந்தருள் பரிந்தருளு நின்னடிப்
பற்றருளி யென்னையிந்தப்
படியிலே யுழல்கின்ற குடியிலே யொருவனைப்
பண்ணும லாண்டருளுவாய்
சத்திக்கு நீர்ச்சென்னை கந்தகோட் டத்துள்வளர்
தலமோங்கு கந்தவேளே
தண்முகத் துய்யமணி யுண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வமணியே. ௧௧௬

கடவுந் தனிமா மயிலோய் சரணம்
நல்லார் புகழும் வல்லோய் சரணந்
திடமுந் திருவுந் தருவோய் சரணந்
தேவர்க் கரியாய் சரணஞ் சரணந்
தடவண் புயனே சரணஞ் சரணந்
தனிமா முதலே சரணஞ் சரணங்
கடவுண் மணியே சரணஞ் சரணங்
கந்தா சரணஞ் சரணஞ் சரணம். ௧௧௭

தங்கட் கினியாய் சரணஞ் சரணம்
நந்தா வுயர்சம் பந்தா சரணந்
திங்கட் சடையான் மகனே சரணஞ்
சிவைதந் தருளும் புதல்வா சரணந்
துங்கட் சுகநன் றருள்வோய் சரணஞ்
சுரர்வாழ்த் திடுநந் துரையே சரணங்
கங்கைக் கொருமா மதலாய் சரணங்
கந்தா சரணஞ் சரணஞ் சரணம். ௧௧௮

எப்பா லவரு மிறைஞ்சுந்
தணிகை யிருந்தருளென்
னப்பாவுன் பொன்னடிக் கென்னெஞ்
சகமிட மாக்கிமிக்க
வெப்பான நஞ்சன வஞ்சகர்
பாற்செலும் வெந்துயர்நீத்
திப்பாரி னின்னடி யார்க்கேவல்
செய்ய வெனக்கருளே. ௧௧௯

கோவேநற் றணிகைவரை யமர்ந்த ஞானக்
குலமணியே குகனேசற் குருவே யார்க்குந்
தேவேயென் விண்ணப்ப மொன்று கேண்மோ
சிந்தைதனி னினைக்கவருள் செய்வாய் நாளும்
பூவேயு மயன்றிருமால் புலவர் முற்றும்
போற்றுமெழிற் புரந்தரனைப் புவியு மோங்கச்
சேவேறும் பெருமானிங் கிவர்கள் வாழ்த்தல்
செய்துவக்கு மின்னிரண்டு திருத்தாட் சீரே.

பேயு மஞ்சுறும் பேதை யார்களைப்
        பேணு மிப்பெரும் பேய னேற்கொரு
தாயு மப்பனுந் தரும நட்புமாய்த்
        தண்ண ருட்கட றந்த வள்ளலே
நீயு நானுமோர் பாலு நீருமாய்
        நிற்க வேண்டினே னீதி யாகுமோ
சாயும் வன்பவந் தன்னை நீக்கிடுஞ்
        சாமி யேதிருத் தணிகை நாதனே.                    கஉக

அடுத்திலே னின்னடிய ரவைக்குட சற்றும்
        அன்பிலே னின்றொழும்ப னானேன் வஞ்சந்
தடுத்திலேன் றணிகைதனிற் சென்று நின்னைத்
        தரிசனஞ்செய் தேமதுரத் தமிழ்ச்சொன் மாலை
தொடுத்திலே னுழுதுநின தருளை வேண்டித்
        தொழுதுதொழு தானந்தத் தூய்நீ ராடேன்
எடுத்திலே னல்லனென்னும் பெயரை யந்தோ
        ஏன்பிறந்தேன் புவிச்சுமையா யிருக்கின் றேனே.

அண்ணாவோ வென்னருமை யையாவோ பன்னிரண்டு
கண்ணாவோ வேல்பிடித்த கையாவோ செம்பவள
வண்ணாவோ நற்றணிகை மன்னாவோ வென்றென்றே
எண்ணாவோ துன்பத் திருங்கடற்குண் மன்னினனே.

---

வைதிக சைவசித்தாந்த சண்டமாருதம்
**சோமசுந்தர நாயகரவர்கள்**
இயற்றிய
## திருத்தணிகைப் பதிகம்

---

அன்பர்மனங் கலந்தினிக்கு மாரமுதே
யரசேயுள் ளன்பிலா வென்
றன்பகலுந் தரமோவென் றாளையிடுந்
தமியேனைத் துரிசு மாற்றி
யின்பநிலை மேவுமிடங் காட்டியருள்
பழுத்தொழுகு மெந்தை யேநின்
முன்புவர நாணுகின்றேன் முதுமறைசேர்
தணிகைவளர் முருக வேளே. ௧௨௪

காழியிலே சம்பந்தப் பிள்ளையெனத்
தோன்றியுமை கருதி யூட்டு
மேழிசையின் றமிழ்ஞானத் திருமுலைப்பா
லுண்டதினை யேற்கின் றேனுக்
கூழிமுதல் வன்மகிழுஞ் சிறுவாவோர்
திவலையதி லுதவு வாயோ
வாழியுயர் தணிகையமர்ந் தருண்மணியே
மெய்யருளை வழங்கு வாயே. ௧௨௫

நக்கீர ரருணகிரி நாதர்முத
லடியார்க ளடி யென்றுஞ்
சொக்கின்ற வுனைப்பாடி ஞரன்றே
யாறுமுகர் தோன்ற வென்னுட்

புக்கிருந்து நல்லருளைப் புண்ணியவா
றெழுத்தோதும் பொருவின் ஞான
மிக்கேற வருள்கண்டாய் தணிகையிடங்
கொண்டருளும் வேத வாழ்வே. ௧௨௬

அருள்பழுத்த பழச்சுவையே யெனவோலிட்
டழைத்தழுமெய் யன்பர் போதம்
பொருளெனக்கண் டன்புவழிப் பொங்குகின்றேன்
மெய்ஞ்ஞான போதர் சூழ்ந்து
தெருளுறநின் றேத்துமுயர் திருத்தணிகை
மலைமேவுந் தேவே யென்னை
யிருளில்விடா தென்றுகொளற் கெவர்காணின்
றனைத்தடுப்பா ரெம்பி ரானே. ௧௨௭

பொய்ப்போத விருளிரியப் புக்கெனுடல்
பொருளாவி பொருந்த வாங்கி
மெய்ப்போதங் காட்டிமுடி மேனீட்டி
யடிநாளு மேவச் சூட்டி
யெய்ப்பேது மறவோட்டி யின்பநிலை
கூட்டியரு ளெந்தா யுன்னைக்
கைப்போது கொண்டுதிருத் தணிகையடைந்
தேனின்று காணு மாறே. ௧௨௮

# தெய்வயானையம்மை வள்ளியம்மை வணக்கம்

---

## திருப்பரங்கிரி புராணம்

வார்கொண்ட கொங்கையெனுங் கோடு தன்னால்
      வடிவேலர் பன்னிருதோள் வரையைப் பாய்ந்து
தார்கொண்ட கடம்பதனை யுழக்கி யோகத்
      தண்பரவை படிந்திறைவர் தடங்கண் வண்டின்
போர்கொண்ட விழிக்கருணை மதத்தை யூற்றிப்
      பொருபடையா யென்வினையைப் பொடித்து நாளும்
பார்கொண்ட பரங்கிரிவாழ் தெய்வ யானை
      பதமலரை யிதயமலர் பதித்து வைப்பாம். ௧௨௧

மணிகொண்ட மானிடத்து முளைத்து வேடர்
      மனைபதிந்து பசுந்தழையாய் மருவுஞ் சோதி
யணிகொண்டு தழைந்தருளிக் கொழுகொம்பாக
      வமலர்புயந் தழுவிவெள்ளி யசலமேறிக்
கணிகொண்ட புகழ்பூத்தென் வினையைக் காய்த்துக்
      கவின்பழுத்துக் கண்டவர்க்குக் கருணை யூற்றிப்
பணிகொண்ட வள்ளியெனுங் கொடியென் னுள்ளப்
      பங்கயத்தைச் சுற்றியிடப் பதித்து வாழ்வாம்.

---

## வாழ்த்து

துய்யதோர் மறைக ளாலுந் துதித்திடற்
கரிய செவ்வேள்
செய்யபே ரடிகள் வாழ்க சேவலும்
மயிலும் வாழ்க
வெய்யசூர் மார்பு கீண்ட வேற்படை
வாழ்க வண்ணன்
பொய்யில்சீ ரடியார் வாழ்க வாழ்கவிப்
புவன மெல்லாம். ௧௫.

ஆறிரு தடந்தோள் வாழ்க அறுமுகம்
வாழ்க வெற்பைக்
கூறுசெய் தனிவேல் வாழ்க குக்குடம்
வாழ்க செவ்வேள்
ஏறிய மஞ்ஞை வாழ்க யானைதன்
னணங்கு வாழ்க
மாறிலா வள்ளி வாழ்க வாழ்கசீ
ரடியா ரெல்லாம். ௧௬



# பாட்டு முதற்குறிப் பகராதி

## திருமுருகாற்றுப்படை



## கந்தரலங்காரம்

---

## கந்தரனுபூதி

---

# கந்தரந்தாதி

---

## திருவகுப்பு



---

## திருச்செந்திற் கலம்பகம்

---

## தனிப்புகழ்ப்பாக்கள்